ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகள் அவர்களின்
அருளாணைப்படி எழுதப்பெற்று அவர்களின் அருளாதரவில் வெளிவரும்
தேவார, திருவாசக, திருவிசைப்பா, திருப்பல்லாண்டுத் தலங்களுக்குரிய
தல விளக்க வழிகாட்டி நூல் !

# திருமுறைத்தலங்கள்




ஆசிரியர் : "செஞ்சொல்மணி" புலவர்

**பு.மா. ஜயசெந்தில்நாதன், எம். ஏ.**

ஆஸ்தானத் தமிழ்ப் புலவர், ஸ்ரீ மடம், காஞ்சிபுரம்.

★ டெம்மி அளவில் 944 பக்கங்கள் கொண்ட இந்நூலானது உயர்தர மேப்லித்தோ தாளில் அச்சிடப்பட்டு, சர்வதேச தரம் வாய்ந்த கட்டமைப்பில் தயாரிக்கப்பட்டுள்ளது ★ தலங்களை இணைக்கும் சாலைகளைப் பற்றிய வரை படங்களுடன் (MAP) கூடியது.

**விலை ரூ. 375.00**

**ஜகத்குருவின் ஸ்ரீ முகம்
இந்நூலின் திலகம் எனத் திகழ்கிறது.**

திருத்தப்பட்ட இப்புதிய (2001 ஆம் ஆண்டு) பதிப்பில் 275 தேவாரத் திருமுறைத் தலங்களுடன் திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டுத்தலங்களும் சேர்க்கப் பட்டுள்ளன, வழுவூர் வீரட்டத் தல விளக்கமும் பிற குறிப்புகளும் கூடுதலாக இடம் பெற்றுள்ளன. எனவே திருமுறைத் தலங்கள் அனைத்திற்கும் சிறந்த முழுமையான தல விளக்க வழிகாட்டியாக இந்நூல் அமைந்துள்ளது. இந்நூல் கையில் இருந்தால் போதும், திருத்தலங்கள் தோறும் யாத்திரை செய்து புண்ணியப் பயன் பெறலாம்.

தொண்டை மண்டல ஆதீனத்தின் ஆசியுரை இந்நூலின் சிறப்பினை மேலும் விளக்குகிறது. அதில் ஒரு பகுதி : இந்நூலின் ஆசிரியர், திருமுறைப் பாடல் பெற்ற தலங்கட்கு நேரில் சென்று புகைப்படம் எடுத்து- அங்கு நடைபெற்ற அற்புதச் செயல்கள் -வழங்கும் செவிவழிச் செய்திகள்- பேருந்து வழிகள்- அஞ்சல் முகவரி - திருக்கோயில்களைப் பராமரிக்கும் ஆதீனங்களின் பெயர்கள் -கல்வெட்டுச் செய்திகள்- தலபுராணப் பாடல்கள்- தனிப் பாடல்கள்- தலங்களுக்கு இன்றுள்ள பெயர்கள் ஆகியவற்றோடு, கோயில்கள் தோறும் கோபுரவாயில் விநாயகரிலிருந்து சண்டேசுரர் வரை சிவாலய வழிபாட்டு முறைப்படி நெறிப்படுத்தி விளக்கியிருப்பது, நேரில் சென்று வழிபடுவோர்க்கு உண்டாகும் உள்ளக் கிளர்ச்சியை, இதனைப் படிக்கும்போதே இந்நூல் உருவாக்குகிறது.

இந்நூலினைத் **தபாலில் பெற,** கடிதம் எழுதுக. நூலினை V.P.P. மூலம் உடனே அனுப்புகிறோம். நூலின் விலை ரூ. 375 + தபால் மற்றும் கட்டுச்செலவு ரூ.25 சேர்த்து ரூ.400 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெற்றுக் கொள்ளலாம். **நேரில் பெற** விரும்புவோர்ரூ.375 செலுத்தி நூலினை உடனே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 9.30 முதல் இரவு 7.30 வரை. (உணவு இடைவேளையின்றி). ஞாயிறு விடுமுறை.

**வர்த்தமானன் பதிப்பகம்,** ஏ.ஆர். ஆர். காம்ப்ளெக்ஸ், 141, வடக்கு உஸ்மான் சாலை,
தியாகராய நகர், சென்னை - 17 (பனகல்பார்க் அருகில்) ✆ : 8257995

**கோவையில் :** விஜயா பதிப்பகத்திலும் (✆ : 394614);
**சேலத்தில் :** அஜந்தா (✆ : 417755) / சந்திரா (✆ : 265635) புத்தகக்கடைகளிலும்
ரூ.375 செலுத்தி நூலினை உடனே பெற்றுக்கொள்ளலாம்

• சோனா

# வசீகரி!

அழகு சோப் விளம்பரத்தில் நடித்துவிட்டு, அடுத்த விமானத்தில் சென்னை வந்து இறங்கின மாதிரி புத்துணர்ச்சி ததும்பும் மும்பை முகம். இலேசாய் தமிழ்ச் சாயல். 'பூவெல்லாம் உன்வாசம்' படப்பிடிப்பில ஜோதிகாவின் தோள் மீது கைபோட்டு சிநேகிதமாய்ச் சிரித்துக் கொண்டிருந்த சோனாதான் அந்த முகத்திற்குச் சொந்தக்காரர்.

"உங்க சந்தேகம் சரிதான். அப்பா குஜராத்தி. அம்மா தமிழச்சி. நான் இந்தியன்" குதறாத கொஞ்சு தமிழில் தேவையான இடைவெளி கொடுத்துப் பேசினார் சோனா.

"எனக்கு சினிமா, மாடலிங்னு ஆசை வந்ததுக்கு காரணமே அம்மாதான். சின்ன வயசுலேயே நிறைய ஃபேஷன் ஷோவுக்கு அழைச்சுட்டுப் போவாங்க. அங்கே மாடல்களுக்குக் கிடைக்கிற கைதட்டலை எனக்கே கிடைச்சதா நினைச்சு சிலிர்த்துக்குவேன்... மாடலிங் செய்ய அனுமதி கேட்டபோதே... 'பளார்'னு அறை விழுந்தது. அப்புறம் இரண்டு நாள் சாப்பிடாமல் சத்தியாகிரகம். ஒருவழியா ஜெயிச்சேன். முதல்லே மாடலிங். அப்போதான் 'மிஸ் தக்ஷின் 2000' போட்டியிலே வெற்றி கிடைச்சது. சினிமாவில் நடிக்க வாய்ப்புத் தேடி வந்துச்சு. ஆனா படிப்பைப் பாதியிலே விட முடியலே. பி.ஏ. மனவியல் முடிச்சுட்டேன். இப்போ விமான பணிப்பெண் பயிற்சிக்குப் படிச்சுக்கிட்டே நடிக்கிறேன்" என்றார் சோனா.

"இந்த வாய்ப்பை எப்படி பிடிச்சீங்க?" என்றால், நடிகர் டாக்டர் ராஜசேகருக்குத்தான் நன்றி சொல்கிறார். அவர்தான் ஆஸ்கார் பிலிம்ஸில் அறிமுகப்படுத்தினவராம். "இந்தப் படத்தில் ஜோதிகாவுக்கு உயிர்த்தோழி கேரக்டர். இயக்குநர் எழில் சாருக்கு, நல்ல திருப்பு முனையா அமையப் போற படம். எனக்கும்தான்" என்று நம்பிக்கையோடு புன்னகை செய்யும் சோனாவின் இயற்பெயர் ஜுவான். 'வசிகரம்' என்று அர்த்தமாம்! பொருத்தமான பெயர்தான்.

சந்திப்பு: சக்கரத்தாழ்வார்

● ஆர். ராஜா சாஹிப், சென்னை – 106●
? தமிழ்நாட்டில் சட்டமன்ற மேலவை ஏற்படுமா?
! ஏற்படுத்தி அதில் உறுப்பினராகி தமது பதவியை ஜெ. தக்கவைத்துக் கொள்வார் என்பது ஒரு சாரார் எதிர்பார்ப்பு. ஆனால் அது அவ்வளவு சுலபமல்ல என்பதுடன் எம்.ஜி.ஆரால் கலைக்கப்பட்டதை மீண்டும் கொண்டுவருவாரா..?

● ஜி. நாகராஜன், தேவூர்
? பக்தியைப் பத்திரிகைகள் பணமாக்கு வது மிகுந்த வேதனையை அளிக் கிறதே...?
! மெய்யான பக்தியைப் பணமாக்க முடியாது நாகராஜன்! பத்திரிகைகள் பக்தியை, கடவுளைப் பற்றிச் சிந்திக்க வைக்கலாம். வெறும் சடங்கு சம்பிரதாயங் களை, பக்தி என்று வாசகர்கள் நினைத்துக் கொண்டால், அதைப் பத்திரிகைகள் தந்திர மாகப் பயன்படுத்திக் கொண் டால், அதற்குப் பெயர் பக்தி அல்ல.

# புதிய வீராணம் திட்டம் வருகிறதாமே?

● கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு.
? புதிய வீராணம் திட்டம் கொண்டு வருகிறாராமே ஜெயலலிதா...?
! அவர் புத்திசாலியாக இருந்தால் இதைச் செய்து சூடு போட்டுக் கொள்ள மாட்டார். சென்னை நகரின் குடிநீர்ப் பிரச்னையைத் தீர்க்க வேறு எளிய, செலவு குறைவான வழிகள் உள்ளன. அவற்றைத் தெரிந்து கொள்ள அறிஞர்களை அடக்கத்துடன் அணுக வேண்டும்.

● ந. சத்தியநாராயணன், அயன்புரம்.
? தோல்வி கண்டு கலைஞர் துவளவில்லை போலிருக்கிறதே...?
! திருக்குறளுக்கு உரை எழுதியவருக்கு அறுபத்துமூன்றாம் அதிகாரம் புரியாமல் போய்விடுமா அல்லது அதன்படி நடக்கத் தெரியாமல் போய்விடுமா?

❐ ரூ. 50 பரிசு பெறுபவர்:
க.நா. இராஜேஸ்வரன்,
தெற்கு வீதி,
மொரட்டுப்பாளையம் – 638752

● தி. காளீஸ்வரி திலீபன், வத்திராயிருப்பு.
? ஜெயலலிதா முதல்வரானது ஜனநாயகத் துக்குப் பொலிவு சேர்க்காது என வைகோ கூறியுள்ளது பற்றி...?
! கூடவே 'தி.மு.க.வின் தோல்விக்கு ம.தி.மு.க. ஒரு காரணம் என்பது மகிழ்ச்சி யளிக்கிறது' என்றும் சொல் கிறார்; முரண்பாடுகளின் மொத்த உரு!


• முரண்பாடு திலகம்!


• செவ்வாய்க்குப் பயந்து...


• அதிகாரம் அறுபத்துமூன்று!

● என். சண்முகம், திருவண்ணாமலை.
? ஜெயலலிதா ராமராஜ்யம் அமைப்பார் என்று மூப்பனார் கூறியிருப்பது பற்றி...?
! அப்படி அவர் சொன்னதற்காக நன்றி! இல்லையெனில் 'வீரமணியைக் கேட்டால் ராவண ராஜ்யம் என்பார்' என்று 'நறுக்' கமெண்ட் கிடைத்திருக்குமா கலைஞரிட மிருந்து...

● இலெமூரியன், திருவண்ணாமலை.
? சத்தியம் ஏவ 'ஜெ'யதே என நிரூபித்து விட்டார் ஜெயலலிதா என்கிறீர்களா?...
! சத்தியத்தை இப்படிக் கேவலப்படுத்தாதீர்கள்; அவரை அன்னை மேரியாகவும் ராஜ ராஜேஸ்வரியாகவும் கருதி கன்னத்தில் போட்டுக் கொள்வதற்கும் இதற்கும் வித்தியாசமில்லை.

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம். ❐
? ஆளுனர் உரையைப் புறக்கணித்த தி.மு.கவின் நடவடிக்கை நியாயமானதா...?
! சட்டசபைக்குச் சென்று கத்தி, ரகளை செய்து, அவமதிப்பதைக் காட்டிலும் புறக் கணிப்பது கண்ணியமானது; ஜனநாயக ரீதியானது. நியாயமும் இருக்கிறது.

● ஆர்.குட்டிபிரசன்னா, கரூர்.
? தேர்வில் தோல்வி அடைந்ததால் தற்கொலை செய்து கொள்பவன், தலைவனுக்காக தீக்குளிக்கும் தொண்டன், காதல் தோல்வியால் தற்கொலை செய்து கொள்பவன்-இம்மூவரில் யார் மிகப் பெரிய முட்டாள்...?
! முட்டாள்கள் அல்ல; தோல்வியை ஏற்கும் மனோதிடம் இல்லாத பலவீனர்கள். அனுதாபத்துக்கு உரியவர்கள்!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.
? 'ஒரு ரூபாய்கூட லஞ்சம் வாங்கமாட்டேன்' என்று பா.ம.க. எம்.எல்.ஏக்கள் சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொண்டார்களாமே...?
! 'கூட' என்ற வார்த்தையை மட்டும் மென்று விழுங்கிவிட்டால் தீர்ந்தது. அப்புறம் எந்த சத்தியப் பிரமாணம் அவர்களைக் கட்டுப்படுத்த முடியும்..?


சொப்பன உலகில்...

• யாருடைய...


• ....ராஜ்ஜியம்?



• கனவுத் தலைவி!

● வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சாவூர்.
? ஏன் இந்த அவசரம்...?
! அஷ்டமி நவமி தவிர வேறு ஒன்றும் உண்டு! நீதிமன்றம் விடுமுறையில் இருக்கும் கால கட்டத்தில் செவ்வாய்க் கிழமை மட்டுமே வழக்குகள் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படும். திங்கள் கிழமை பதவியேற்று விட்டால் சட்டபூர்வமாக உருவாகக் கூடிய எதிர்ப்பை முந்திக் கொண்டுவிடலாம்.

● கு. கணேசன், பனங்கோட்டூர்.
? 'புதுவை வாக்காளர்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்த முடியவில்லையே' என்ற டாக்டர் ராமதாஸின் வருத்தம் குறித்து...?
! "நாங்க விழிப்போடுதான் இருக்கோம். டாக்டர் ஐயாதான் சொப்பன உலகத்திலிருந்து கண்விழிக்க வேண்டும்" என்று புதுவை வாக்காளர்கள் கூறுகிறார்களே!

● கே. விஸ்வநாத், பெங்களூர் - 38.
? தாங்கள் ஆட்சிக்கு வந்தால் யாரையும் பழிவாங்க மாட்டோம் என்று சொன்ன வார்த்தையின் சுவடு காய்வதற்குள் பரிதி இளம்வழுதியைக் கைது செய்திருக்கிறாரே ஜெயலலிதா..? இது அராஜகத்தின் ஆரம்பமில்லையா...?
! பரிதி இளம்வழுதி விவகாரம் ஒரு தொடக்கம்தான். அதன் பிறகு வெகு வேகமாக பல காரியங்கள் நடந்து வருகின்றன. ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் இலாகா நியமனமின்றி காக்க வைக்கப்படுதல்; மதுக்கடைகள் ஏலம் நிறுத்திவைப்பு போன்ற பல தொடர்கின்றன. லேட்டஸ்ட்: சென்னை மாநகராட்சி ஊழல் பட்டியலை எதிர்க்கட்சியினர் ஆளுனரிடம் சமர்ப்பித்திருப்பது. இதன் பின்விளைவு மகத்தான பழிவாங்கலாக அமையும்.

● தேவந்தி துரைராஜ், திருவண்ணாமலை.
? தி.மு.க. கூட்டணி தோல்விக்குத் தராக கூற விரும்பும் மூன்று முக்கிய காரணங்கள் என்ன...?
! 1) த.மா.கா. 2) பா.ம.க. 3) ம.தி.மு.க.

● கல்லார் ரஹ்மத், நாகை-1.
? த.மா.க. இந்தியா முழுவதும் பரவ இன்னும் எத்தனை வருடம் ஆகும்...?
! சோனியாவின் ஆசை நிறைவேறினால், த.மா.காவும் இ.காங்கிரஸும் இணைந்தால், மறுநாளே த.மா.கா. இந்தியா முழுதும் பரவினமாதிரிதான்!

● ஜி. நீலா, மன்னார்குடி.
? இவ்வளவு பெரிய்ய்ய்ய வெற்றியைத் தேடித் தந்த மக்களுக்கு எதிர்பார்ப்பும் அதே அளவில் இருக்குமே...ஆட்சிக் கட்டிலில் அமர்பவர்கள் செய்வார்களா..?
! செய்வார்கள்... எதை என்பதையும் மக்கள் உணர்வார்கள்.

* ரூ. 25 பரிசு பெறுபவர்:
ஆர். ராஜாசாஹிப்,
504, பி.எச்.ரோடு,
அரும்பாக்கம்,
சென்னை -600 106

காஞ்சி மடாதிபதி, ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளுக்கு சைனாவிலிருந்து ஆன்மிக கலாசார சுற்றுப்பயணத்துக்கான அழைப்பு வந்துள்ளது. சீனாவின் முன்னாள் வெளியுறவு அமைச்சரான ஹூவாங் ஹூவா தலைமையில் இயங்கி வரும் சர்வதேச நட்புறவுக்கான சீன அமைப்பு இந்த அழைப்பை விடுத்துள்ளது.

வரும் அக்டோபரில், பதினைந்து பேர் கொண்ட குழுவுடன், ஜெயேந்திரர் சைனா செல்லவிருக்கிறார் என்பதாக பத்திரிகைத் தகவல்கள் தெரிவிக்கின்றன. சைனாவின் புராதனஸ்தலங்களான பெய்ஜிங்,



# சைனாவிலிருந்து அழைப்பு!

ஷாங்காய், ஹாங்ஷோ ஆகிய நகரங்களுக்கு ஜெயேந்திரர் விஜயம் செய்வார் என்று தெரிய வருகிறது.

"சைனாவிலிருந்து அழைப்பு வந்திருப்பது உண்மைதான். ஆனால், அது குறித்து இறுதி முடிவு இன்னமும் எடுக்கப்படவில்லை" என்று காஞ்சி மட வட்டாரங்கள் தெரிவிக்கின்றன.

"ஜெயேந்திரர் நிச்சயம் சைனாவின் அழைப்பை ஏற்று, சீனாவுக்குக் கலாசாரப் பயணம் மேற்கொள்வார். இதற்கு முன்பு, பங்களாதேஷிலிருந்து அழைப்பு வந்தபோது, அதனை ஏற்று பங்களாதேஷ் சென்றார். அங்கே, அவரை அரசு அதிகாரிகளும், முக்கிய இந்து மதப் பிரமுகர்களும் முஸ்லிம்களும் சந்தித்து உரையாடினார்கள். டாக்கேஸ்வரி கோவிலுக்கும், இன்னும் சில கோவில்களுக்கும் புனருத்தாரணம் செய்வதற்காக பங்களாதேஷ் அரசு, பிரத்யேகமாக நிதி உதவி செய்தது குறிப்பிடத்தக்கது. அதையடுத்து, இப்போது, சைனாவிலிருந்து அழைப்பு வந்திருக்கிறது. இதனை நிச்சயம் ஏற்று, சைனாவுக்குப் பயணம் மேற்கொள்வார் ஜெயேந்திரர்" என்கிறார் காஞ்சி மடத்துடன் தொடர்பு உடைய ஒரு பிரமுகர்.

"சைனா பழைமையான கலாசாரப் பின்னணி கொண்ட நாடு. அங்கே கம்யூனிச அரசாங்கம் ஆட்சியில் இருந்தாலும்கூட, சீன கலாசாரம் பேணி காக்கப்பட்டு வருகிறது. ஆகவே, ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் சீனப் பயணம் வெற்றிகரமாக அமையும் என்று உறுதியாகச் சொல்ல முடியும்" என்று கூறுகிறார் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த சங்கரய்யா.

"மதங்களுக்கும், கம்யூனிசக் கொள்கைகளுக்கும் அப்பாற்பட்டு பற்பல பணிகளை சைனா அரசாங்கம் செய்வது வழக்கம்தான். அந்த அடிப்படையில், சில வருடங்களுக்கு முன்பு தமிழ்நாட்டிலிருந்து, குன்றக்குடி அடிகளார் சைனா சென்று வந்தார். சமூக நலப்பணிகளில் ஈடுபாடு கொண்ட காஞ்சி

சங்கராச்சாரியாரை அழைத்திருப்பது பொருத்தம்தான்'' என்கிறார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த நல்லக் கண்ணு.

''காஞ்சிபுரத்திலிருந்து, மடாதிபதி ஒருவர் சைனா சென்று வருவது, ஒரு விதத்தில் பொருத்தமானதுதான். பண்டைய காலத்தில், சைனாவிலிருந்து யாத்ரிகர்கள் வந்து பயணக் குறிப்பு நூல்கள் எழுதி வைத்திருக்கிறார்கள். அப்படி வந்த சீன யாத்ரிகர்கள் தங்கிச் சென்ற இடங்களில் காஞ்சிபுரமும் ஒன்று. எனவே இன்று காஞ்சி மடாதிபதி, சைனா செல்வது பொருத்தம்தானே?'' என்று கேட்கிறார் சங்கரய்யா.

''விருந்தினர்களை உபசரிப்பதில் சைனாவுக்கு இணையே இல்லை. சீனப் பயணத்தின்போது, சங்கராச்சாரியின் ஆசார, அனுஷ்டானங்களில் ஒரு குறையும் ஏற்படாதவாறு கவனமாகத் திட்டமிட்டு, சிறப்பாக அனைத்து ஏற்பாடுகளையும், உதவிகளையும் சைனா செய்து தரும் என்பதில் சந்தேகமே இல்லை. நான் சைனா சென்று வந்த அனுபவத்தின் அடிப்படையில்தான் இதைச் சொல்லுகிறேன்'' என்ற சங்கரய்யாவின் கருத்துக்கு சாட்சியாக, பத்திரிகைகளில் வெளியான சில தகவல்கள் இருக்கின்றன. கிணற்றிலிருந்து நேரடியாக தண்ணீரை எடுத்துப் பயன்படுத்தும்படியாக பிரத்யேக தண்ணீர்க் குழாய்கள் கூட அமைக்கப்படவிருப்பதாகத் தெரிகிறது. ஜெயேந்திரர் தம்முடன் அரிசி முதலிய சில அத்யாவசியப் பொருட்களை எடுத்துச் செல்கிறார்; உணவு சமைக்க, மடத்தைச் சேர்ந்தவர்கள் உடன் செல்கிறார்கள்.

''சைனாவுக்கு வரும்படி, காஞ்சி சங்கராச்சாரியாருக்கு அழைப்பு வந்திருப்பது, அவருக்கு மட்டும் கிடைத்த கௌரவமாக கருதாமல் ஒவ்வொரு இந்துவுக்கும் கிடைத்த கௌரவமாகவே நினைக்கிறேன். கம்யூனிஸ ஆட்சி நடக்கும் சைனாவிலிருந்து, சங்கராச்சாரியாருக்கு அழைப்பு வந்திருப்பது, சைனா வில் மாறிவரும் ஒரு சூழ்நிலையையே எடுத்துக் காட்டுகிறது'' என்கிறார் பாரதிய ஜனதா கட்சியின் இல. கணேசன்.

'ஜெயேந்திரரின் சைனா விஜயம், இந்தியாவுக்கும் சைனாவுக்கும் இடையிலான உறவில் எந்த வகையில் மாறுதல்களை ஏற்படுத்தும்?' என்கிற கேள்வியை முன் வைத்தபோது, ''அண்டை நாடுகளுக்கிடையே சுமுகமான நட்புறவு இருக்க வேண்டியது மிக அவசியம். இந்த சுமுகமான உறவு அந்நாடுகளின் ராணுவச் செலவுகளைக் கட்டுப்படுத்தி, அந்த நிதியை ஆக்கபூர்வமான வளர்ச்சிப் பணிகளுக்குப் பயன்படுத்த வழிகோலும். அந்த விதத்தில் பார்த்தால், ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் சீன பயணத்தினால் இருநாட்டு உறவும் மேன்மை அடையும்'' என்கிறார் சங்கரய்யா.

மத்திய அரசின் அயலுறவுத் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்ற உயரதிகாரியான வெள்ளோடி. ''அரசியல் தலைவர்கள், அதிகாரிகள் அளவிலான பேச்சு வார்த்தைகள் ஒருபுறம் என்றால், இது போன்ற மதத் தலைவர்களின் விஜயமும் வரவேற்கப்பட வேண்டிய ஒன்றுதான். ''வாஜ்பாய் பதவி ஏற்றபின் இந்தியாவின் மதிப்பு உலக அரங்கில் உயர்ந்து வருகிறது. உலகின் பல்வேறு நாடுகளின் தலைவர்களும் இந்தியாவுக்கு நல்லெண்ண விஜயம் மேற்கொண்டு வருகின்றனர். இந்தியாவின் அண்டை நாட்டு உறவில் நல்ல மாற்றம் தெரிகிறது. இந்த விதத்தில் காஞ்சி மடாதிபதியின் சைனா விஜயம் ஒரு மைல் கல்!'' என்கிறார்.

**— எஸ். சந்திரமௌலி**

அட்டைப் படம், படங்கள்:
**ஸ்ரீஹரி**

• சங்கரய்யா



• நல்லகண்ணு





இல. கணேசன்

100% உண்மை சம்பவம். பெயர்கள் மட்டும் மாற்றப்பட்டுள்ளன.

# பபிள்கம் பயங்கரம்!








**காலை 8 மணி :**

குமரன், வியாபாரத்துக்குக் கிளம்புகிறார். மனைவி ஜானகி "டீ சாப்பிட்டுட்டுப் போங்க" என்று உபசரிக்கிறார். "வேணாம். வாயில் பபிள்கம் இருக்கு" என்று மறுத்து விட்டுச் செல்கிறார்.

**காலை 9 மணி :**

'ஹலோ... நாங்க சைதாப்பேட்டையிலிருந்து பேசறோம். உங்க வீட்டுக்காரருக்கு ஹார்ட் அட்டாக் ஆயிடுச்சு. ஹாஸ்பிடல்ல சேர்த்துருக்கோம்..'' - டெலிபோனில் யாரோ பதற்றமாய்த் தகவல் தர, ஜானகி பதறியடித்துக் கொண்டு ஓடுகிறார்.

**காலை 11 மணி :**

"ஸாரிம்மா. உங்க கணவரை 'ஹார்ட் அட்டாக்'னு கொண்டு வந்து சேர்த்தாங்க. ஆனா அவருக்கு ஏற்பட்டது மாரடைப்பு இல்லை. அவரோட மூச்சுக் குழாயில பபிள்கம் போய் அடைச்சிருக்கு. பபிளை ஊதி பெரிதாக்கிவிட்டு, மறுபடி வாய்க்குள் இழுத்தபோது, பபிளுடன் காற்றும் சேர்ந்ததால், அவருக்குப் புரையேறியிருக்கு. அதான், மூச்சுவிட முடியாம திணறி இறந்துட்டாரு.'' என்று மூச்சுக் குழாயிலிருந்து எடுக்கப்பட்ட பபிள்கம் பிசினைக் காட்டுகிறார் டாக்டர் சண்முகம்.

**இரவு பத்து மணி**

"மம்மீ... என்னாலதான் அப்பாக்கும் இந்த பபிள்கம் பழக்கம் வந்துச்சு. இனிமே நான் பபிள்கம் கேக்கவே மாட்டேன். அப்பாவை வரச் சொல்லுங்க. ப்ளீஸ்'' என்று கடைக்குட்டி பாபு அழுது கொண்டிருக்கிறான்!

- டாலி

## மே 30 முதல் ஜூன் 5 வரை

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம் :** குரு உங்களுக்குச் சாதகமா இருக்கறதால பேச்சாற்றல், முக அழகு கூடும். பணம் பல இடத்துல இருந்து வந்து பையை நிரப்பும். குடும்பத்துல மகிழ்ச்சிக் கொப்பளிக்கும். கொடுக்கல் வாங்கல், போட்டி பந்தயங்கள்ல நீங்களே எதிர்பார்க்காத அளவுக்கு ஆதாயம் வந்து திக்குமுக்காட வைக்கும். பயணத்தால பயன் உண்டு. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு ஆதரவு கூடும். இருந்தாலும் வீட்ல தம்மாத்துண்டுப் பிரச்னைகள் தலை காட்டும். பொறுமையா பேசி சமாளிங்க. பெரியவங்க ஆலோசனையைக் கேட்கறது நல்லது.

**ரிஷபம் :** கிரகங்கள் கொஞ்சம் சிக்கல் பண்றதால எதையும் ஒருமுறைக்குப் பலமுறை யோசிச்சு செய்யறது நல்லது. வீண் வம்பு தும்பு நடந்தா கண்ணைப் பொத்திகிட்டு நகர்ந்துடுங்க. உடல் நலன்லயும் கவனம் வைச்சா டாக்டர் செலவிலிருந்து தப்பிக்கலாம். வீண் அலைச்சலைத் தவிர்த்துடுங்க. கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கை வேணும். எழுத்தாளர்கள் பத்திரிகையாளர்களுக்கெல்லாம் புகழ் பாராட்டு கூடும்.

**மிதுனம் :** இந்த வாரம் பெரிய நன்மைகள் எதையும் எதிர்பார்க்க முடியாது. அலைச்சல் அதிகரிக்கும். பிரச்னைகள் சம்மன் இல்லாம வந்து ஆஜராகும். செலவு எகிறும். அதிகமா உணர்ச்சிவசப்படாதீங்க. பெரியவங்க ஆலோசனையைக் கேட்கறது நல்லது. அடக்கி வாசித்தால் பிரச்னைகள்ல இருந்து தப்பிக்கலாம். புதிய தொழில்ல ஈடுபட இது நேரமில்லை. வேலைகள்ல அதிக கவனம் வைக்க வேண்ணா மேலதிகாரிங்களோட திட்டுகளைச் சம்பாதிக்க வேண்டியிருக்கும்.

**கடகம் :** வெற்றி வாய்ப்புகள் தேடி வரப் போகுது. இதுவரை இருந்து வந்த எதிர்ப்புகள் சத்தமில்லாம ஓடிப் போயிடும். வீடு, மனை போன்ற சொத்துக்கள் வாங்க சூழ்நிலை கூடி வரும். வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வந்து கதவைத் தட்டும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பாராட்டு குவியும். கற்பனைத் திறன் ஜில்லுனு அதிகரிக்கும். விவசாயிகள், தொழிலாளர்களுக்கெல்லாம் இது சூப்பர் வாரம். மாணவர்கள் படிப்பில் முழு கவனம் செலுத்தினா நல்லது.

**சிம்மம் :** உங்களோட புத்திசாலித்தனம், நிர்வாகத் திறமையெல்லாம் இப்ப வெளிப்பட போகுது. எந்தக் காரியத்தை எடுத்தாலும் தலைகீழா நின்னாவது முடிச்சிடுவீங்க. பெண்களுக்கு உற்சாகமான சூழல் நிலவும். வீட்ல குதூகலத்துக்குப் பஞ்சமிருக்காது. இருந்தாலும் அப்பா அம்மா, குழந்தைகள் உடல் நலத்துல கவனம் வேணும். வயிறு சம்பந்தப்பட்ட நோய்கள் வரலாம். கொடுக்கல் வாங்கல் விஷயங்கள்ல எச்சரிக்கை அவசியம்.

**கன்னி :** உங்க மதிப்பு மரியாதையெல்லாம் மெகா பலூன் மாதிரி மேல மேல உயரப் போகுது. உங்க திறமை, சாமர்த்தியம் எல்லாம் மத்தவங்கப் பொறாமை படற மாதிரி வெளிப்படப் போகுது. வெளிநாட்டுல இருந்து நீங்க எதிர்பார்த்த தகவல்வந்து சேரும். சிலருக்கு வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. கணவன் மனைவிக்குள்ள இருந்து வந்த சின்ன சின்ன மனக்கசப்புகள் இப்ப மாயமாயிடும். எதிலயும் அவசரம் பதற்றம் வேண்டாம். வீண் அலைச்சலைத் தவிர்க்கறது நல்லது.










**துலாம் :** உங்க மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் உயரும். வீடு, மனை நிலம், ரியல் எஸ்டேட், சம்பந்தப்பட்ட காரியங்கள்ல ஆதாயம் வரும். புதிய சொத்துக்கள் சேர வாய்ப்பிருக்கு. பண விஷயத்துல கொஞ்சம் அதிகமா எதிர்பார்க்க முடியாது. தொழிலாளர்கள், அலுவலகப் பணியாளர்களுக்கெல்லாம் தொல்லைகள் அதிகரிக்கப் போகுது. வேலையில கவனத்

**அக்னிசர்மா பக்கம்**

தோட இருந்தா பிரச்னைகள்ல இருந்து தப்பிக்கலாம். கணவன் மனைவிக்குள்ள கருத்து வேறுபாடுகள் முளைக்கும். உம்முனு மூஞ்சியைத் தூக்காம பொறுமை காத்தா



**தமிழ் சினிமா உலகுக்கு, கலை சேவை செய்யவிருக்கும் ப்ரியங்கா சோப்ராவுக்கு (தனுசு) இந்த வாரம்...**









நல்லது.

**விருச்சிகம் :** மனசுல உற்சாகம் கரைபுரண்டோடும். பெண்களுக்கும் இது உற்சாகமான வாரம். அரசியல்வாதிகள் பாராட்டு மழைல நனையப் போறீங்க. பொருளாதாரப் பிரச்னை இல்லை. குடும்பத்துல சுப காரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு. எதிரிகள் அடங்கிப் போவாங்க. பயணத்தைத் தவிர்த்திடறது நல்லது. கலைத் துறையைச் சேர்ந்தவங்க சாதனைப் படைக்கப் போறீங்க. சாப்பாடு விஷயத்துல எச்சரிக்கையா இருந்துக்கங்க.

**தனுசு :** உங்க நிர்வாகத் திறமை, புத்திசாலித்தனமெல்லாம் வெளிப்படப் போகுது. பெண்கள் தங்கள் எண்ணங்களை நிறைவேற்றிக்கப் போறாங்க. ஜாலி டூர், சினிமா, விருந்துனு சுத்த சான்ஸ் இருக்கு. பொது நலப் பணியாளர்கள், சமூக நலப் பணியாளர்களெல்லாம் பாராட்டுப் பெறுவாங்க. கோபம், பதற்றத்தைத் தவிர்த்திடறது நல்லது. பொருளாதாரம் சம்பந்தப்பட்ட விஷயங்கள்ல. எச்சரிக்கைத் தேவை. வெளியூர்ப் பயணம் போறதை இப்ப தவிர்த்திடுங்க. புதியவங்ககிட்ட வெளிப்படையாப் பழக வேண்டாம்.

**மகரம் :** கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி மேடை காத்திட்டிருக்கு. புகழ் மழைல நனையப் போறீங்க. பெண்களுக்கு ஆரோக்கியமான சூழ்நிலை ஏற்படும். பண நடமாட்டம் திருப்தியா இருக்கும். சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகள் தேடி வரும். பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்களுக்கெல்லாம் மகிழ்ச்சியான சூழல்தான். உற்சாகம் கரைபுரண்டோடும். எதிர்பாராத செலவுகள் 'திடுக்'குனு வந்து திக்குமுக்காட வைக்கும். எச்சரிக்கை. உடன் பிறந்தவங்களால சிறுசிறுப் பிரச்னைகள் வரும். பக்குவமா சமாளிங்க.

**கும்பம் :** கிரகங்கள் எல்லாம் உங்களுக்கு ஆதரவா இருக்கறதால மகிழ்ச்சியில திளைக்கப் போறீங்க. பேச்சாற்றல் திறமையெல்லாம் வெளிப்பட போகுது. கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்குச் செழிப்பான வாரம்தான். கணவன் மனைவி உறவுல இருந்த மனக்கசப்பு இப்ப நீங்கும். இராணுவம் காவல் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பாராட்டுக் கிடைக்கும். தொழிலாளர்கள் வேலையில கவனம் செலுத்தினா பிரச்னைகளிலிருந்துத் தப்பிக்கலாம். உடல் நலன்ல அக்கறை செலுத்துங்க.

**மீனம் :** உங்க சாமர்த்தியம் பளிச்சிடப் போகுது. அரசியல்வாதிகளுக்குப் பாராட்டு மேடை கிடைக்கும். பொருளாதாரம் திருப்தியா இருக்கும். புகழ் பாராட்டுக்குப் பஞ்சமிருக்காது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கும் புகழ் மாலை தேடி வரும். இதுவரை இருந்து வந்த எதிர்ப்புகள் மாயமாயிடும். பத்திரிகையாளர்கள் எழுத்தாளர்களுக்கெல்லாம் வரவேற்புக் கூடும். தொழிலதிபர்கள் புதிய தொழில்ல இப்ப முதலீடு பண்ண வேண்டாம். வீண் அலைச்சலைத் தவிர்க்கறது நல்லது.

# KALKI SHOPPING PAGE

மின்சாரம் இல்லை
தண்ணி இல்லை
பணம் இல்லை...
முதல்வரா இருக்கத் தகுதியே இல்லை...!



2001 ஜூன் 3
விஷு வைகாசி 20
மலர் : 59
இதழ் : 44

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ஆக்ஷன் த்ரில்லர் ஆட்சி!

ஜெயலலிதாவின் முதல் ஒருவார கால ஆட்சி, 'ஆக்ஷன்-சஸ்பென்ஸ் த்ரில்லர்' போல் விறுவிறுப்பும் திருப்பங்களும் நிறைந்து அமைந்தது.

ஓர் ஆட்சி மாறியதுமே தலைமைச் செயலகத்திலும் காவல் துறையிலும் அதிகாரிகள் மாற்றப்படுவது மரபுதான். புதிய அரசின் கொள்கைகளுக்கும் மாறுபட்ட செயல்திட்டங்களுக்கும் இசைவாக பணிச் சூழல் அமையவேண்டும் என்பதற்காக இம்மாற்றங்கள் செய்யப்படுகின்றன.

ஆனால், தமிழகத்தில் இன்று நடப்பது கொள்கைகள், செயல்திட்டங்களுக்கு இசைவான மாற்றங்கள் அல்ல. 'ஜெ'யின் மனநிலைக்கு - சிந்தனைக்கு இசைவாக அதிகாரிகள் நடந்து கொள்ள வேண்டும் என்பதற்காக மாற்றங்கள் நிகழ்கின்றன.

அதன் பலனாக, மாநகர காவல்துறை புதிய ஆணையர் முத்துக்கருப்பன் சர்ச்சைக்கு இடமளித்திருக்கிறார்.

ஜான் பாண்டியன் கைது விவகாரத்தில், ஆட்சி மாறியதுமே, 'சாட்சிகள் இல்லை' என்று நீதிமன்றத்தில் காவல்துறை தெரிவித்து, வழக்கை வாபஸ் பெற முயன்றிருக்கிறது. நீதிபதியின் கடுமையான விமர்சனத்துக்கும் உள்ளாகியிருக்கிறது. 'ஆட்சியும் மனிதர்களும் மாறினாலும் சட்டம் மாறாது! சாட்சியங்களை ஒழுங்காகச் சமர்ப்பியுங்கள்' என்று நீதிபதி காவல்துறைக்குக் கண்டனம் தெரிவித்துள்ளார்.




இதைத் தொடர்ந்து, பரிதி இளம்வழுதி பேரில் தொடுக்கப்பட்ட வழக்கில், ஜாமீனில்லாத கைது வாரன்ட் பிறப்பித்து விட்டது காவல் துறை. கொலை முயற்சியில் ஈடுபட்டதாகக் குற்றம்சாட்டி, பரிதியை வேலூர் சிறையில் அடைத்தது. இதற்காக முதல் தகவல் அறிக்கையை (FIR) மாற்றி எழுதத் துணிந்திருக்கிறது காவல்துறை என்பது காவல் துறைக்குப் பெருமை சேர்க்காததோடு அரசியல் சாயத்தையும் அத்துறை பூசிக் கொள்கிறது.

காவல்துறையில் இப்படிப்பட்ட தடாலடிகள் என்றால், தலைமைச் செயலக அதிகாரிகள் பலர் பணியிலிருந்து விடுவிக்கப்பட்டு இன்னமும் புதுப் பொறுப்புகள் தரப்படாமல் திரிசங்கு சுவர்க்கத்தில் நின்று கொண்டிருக்கின்றனர். மூத்த அதிகாரிகளை ஒரு முதல்வர் இவ்வாறு காக்க வைப்பது, அரசியல் பண்பாட்டுக்கு மட்டுமின்றி, சராசரி மனிதப் பண்பாட்டுக்கும் விரோதமானது.

இதற்கிடையே, சென்னை மாநகராட்சியில் கடந்த நான்காண்டுகளாகப் பெரும் ஊழல் நடந்திருப்பதாக எதிர்க்கட்சியினர் ஆளுனரிடம் புகார் தந்து, உடனே 'அந்த மாபெரும் ஊழலை' விசாரிக்க மனு செய்துள்ளனர். ஜனநாயக விரோதமாக மாநகராட்சியைக் கலைப்பதற்கு முதல் அத்தியாயம் எழுதப்பட்டுவிட்டது.

முதல்வர் பதவி ஏற்ற தினத்தில் சென்னை நகரில் மின் துண்டிப்பு! நகரே இருளில் மூழ்கியது. இதைத் தொடர்ந்து ஜெயலலிதா மின்வாரியத் தலைவரைப் பணிமாற்றம் செய்து, அவரிடத்தில் புதிய நபரை நியமித்தார்.

நெய்வேலி அனல் மின் நிலைய ஊழியர்கள் வேலை நிறுத்தம் பெரிய அளவில் வளர்ந்துவிட்டது. பிரச்னை முற்றிப் போய், காவல்துறையின் தடியடி, ஊழியர்களின் பிடிவாதம் என்று தொடர்கிறதேயொழிய, வேலை நிறுத்தம் முடிவுக்கு வரும் அறிகுறி எதுவும் தென்படவில்லை.

சென்னையின் குடிநீர்ப் பிரச்னை முன்னிலும் அதிகமாக அச்சுறுத்துகிறது. கிருஷ்ணா நதி நீர் வரத்து அடியோடு நின்றுவிட்டது. இன்னும் ஐந்து மாதங்களுக்குப் பிறகுதான் மழை பெய்வதற்கான சாத்தியக்கூறுகள் என்னும்போது, அரசின் பாடு மிகவும் திண்டாட்டம்தான்.

இதற்கெல்லாம் இடையிலே 'கஜானா சுத்தமாகக் காலி' என்று அறிவித்திருக்கிறார் நிதியமைச்சர்




பொன்னையன். எந்த அரசும் கஜானாவை நிரப்பி வைத்து அடுத்து வரும் ஆட்சிக்குச் சௌகரியம் செய்து கொடுத்துவிட்டுப் போவதில்லை. தி.மு.க. அரசும் இவ்வாண்டுக்கான முழு நிதிநிலையறிக்கையைச் சமர்ப்பிக்காமல், தேர்தல் நடக்கும் வரையிலான காலத்துக்கு இடைக்கால பட்ஜெட்தான் போட்டது.

இனிவரும் காலத்துக்கு வரவு-செலவு திட்டம் தயாரிக்க வேண்டிய பொறுப்பும் ஜெ. அரசுக்கு இருக்கிறது. நிதி நிர்வாகம் சீராக நடக்கிறதோ இல்லையோ, மதுக்கடை ஏலம் நிறுத்தி வைக்கப்பட்டு, புதிய விதிமுறைகள் தீட்டப்பட்டு வருகின்றன. இவை யாருக்குச் சாதகமாக அமையும் என்று கூறத் தேவையில்லை.

மின் பற்றாக்குறை, குடிநீர்ப் பற்றாக்குறை, பணப் பற்றாக்குறை என்று சுற்றிலும் பிரச்னைகளால் சூழப்பட்டுள்ள முதல்வர், அவற்றுக்குப் பளிச்சென்று தீர்வுகள் காண்பதில் கவனம் செலுத்தவில்லை.

ஆக்கபூர்வமான நடவடிக்கைகளைக் காட்டிலும் பழிவாங்கும் நடவடிக்கைகளுக்கே முதலிடம் கொடுக்கப்படுகிறது. கட்சியிலும் அமைச்சகத்திலும் முதல்வரை மிகையாகப் புகழ்ந்து துதிக்கும் கலாசாரம் திரும்பவும் பரவலாகியிருக்கிறது.

இதற்கெல்லாம் இடையிலே, ஜெயலலிதா முதல்வர் ஆக்கப்பட்டதை எதிர்த்து, சென்னை உயர்நீதி மன்றத்தில் பொது நல வழக்கு ஒன்று தொடரப்பட்டிருக்கிறது. இவ்வழக்கு, கோடை விடுமுறை முடிந்து நீதிமன்றங்கள் இயங்க ஆரம்பிக்கும்போதுதான் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

விசாரணைக்கு வரும் வழக்கின் பேரிலான தீர்ப்பு, ஜெயலலிதாவுக்கு எதிராகப் போகுமானால், ஒரு முதல்வர் என்ற முறையில் அந்நாள்வரை அவர் எடுத்த நடவடிக்கைகள் சட்டபூர்வமான வலிமை இழந்துவிடும். பெரும் குழப்பம்தான் மிஞ்சும்.

ஆட்சி மாற்றத்துக்காக வாக்களித்த தமிழக மக்கள், அரசியல் சாசன நெருக்கடிக்கும் சேர்த்து வாக்களித்திருக்கிறார்கள். அந்த நெருக்கடிக்கு அ.தி.மு.க. தலைவியும் தமிழக ஆளுனரும் துணை போயிருக்கிறார்கள். ஆக்ஷன்-சஸ்பென்ஸ் த்ரில்லரின் கிளைமேக்ஸ் வருவதற்குள் இன்னும் எத்தனை டிஷ்யூம் டிஷ்யூம் காட்சிகளோ..., காமெடி சீன்களோ...? வாக்காளர்களே, என்ஜாய்! ○



வி. கார்த்திகேயன்

# ஐயோ பாவம் அதிகாரிகள்!

ஆட்சி மாறியவுடன் வழக்கம் போல உயர் ஐ.ஏ.எஸ் அதிகாரிகள் குறி வைக்கப்பட்டிருக்கிறார்கள். முதல்வர் அலுவலகம் மற்றும் முக்கியப் பொறுப்பில் பணியாற்றிய அதிகாரிகள் விடுவிக்கப்பட்டு, புதிய பொறுப்பு எதுவும் கொடுக்கப்படாமல் கட்டாயக் காத்திருப்பில் வைக்கப் பட்டிருக்கிறார்கள். நடுநிலையாகச் செயல்பட்டவர்கள்கூட 'எப்போது நம் மீது கை வைக்கப் போகிறார்களோ' என்று நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். இது போன்ற அதிரடி மாற்றங்களால் நிர்வாகத்தில் ஏதேனும் மந்த நிலை ஏற்படுமா? இது போன்ற சூழலில் ஓர் அதிகாரி தம்மை எவ்வாறு காத்துக் கொள்ள வேண்டும்? தலைமைச் செயலாளராக இருந்த, ஓய்வு பெற்ற மூத்த ஐ.ஏ.எஸ் அதிகாரியான வி. கார்த்திகேயனைக் கேட்டோம்:

"ஒவ்வொரு முறை ஆட்சி மாறும்போதும் அதிகாரிகள் மாற்றம் என்பது தொடர்ந்து நடந்து வரும் போக்குதான். இன்றைய சூழ்நிலையில் ஓர் அதிகாரி, தன் மீது எந்த அரசியல் அல்லது அரசியல்வாதி நிழலும் விழாமல் செயல்படுவது கடினமான காரியம். நடுநிலையான பாதையில் செல்லும் அதிகாரிகூட, அரசியல்வாதிகளுக்கு வளைந்து கொடுக்க வேண்டிய சூழ்நிலை உருவாவதைத் தவிர்க்க முடியாது. அவர்கள் விருப்பப்படி செயல்படாவிட்டால், நம்மைத் தூக்கிவிட்டு, வேறு யாரையாவது தானே போடுவார்கள் என்று, சில அதிகாரிகள் பல காரியங்களுக்கு உடன்பட்டு விடுகிறார்கள். தவறு செய்யாமல் இருப்பது மட்டுமல்லாமல் தவறு செய்யத் துணியும் அரசியல்வாதிகளைத் தட்டிக் கேட்டு எச்சரிக்கும் தைரியமும் உறுதியும் ஓர் ஐ.ஏ.எஸ் அதிகாரிக்கு இருந்தால் நிர்வாகம் சிறப்பாகவும், குறைகளின்றியும் இருக்கும்.

"நிர்வாகம் எப்போதும் தூய்மையாகவும், திறமையாகவும் இருக்க வேண்டும் என்பதில் எல்லோரும், முக்கியமாக அரசியல் கட்சிகளும் அரசு அதிகாரிகளும், பொதுமக்களும், தங்கள் ஆர்வத்தையும், உறுதியையும் தொடர்ந்து காட்ட வேண்டும். இதனால் பெரும் பயன் மக்களுக்கே கிட்டும்."

தற்போது கட்டாய காத்திருப்பில் இருக்கும் அதிகாரிகளுக்கு, குறிப்பிட்ட காலத்துக்குள் பொறுப்பு கொடுக்க வேண்டும் என்ற கட்டாயம் ஏதும் கிடையாதாம். ஆனால் தொடர்ந்து சம்பளம் கிடைக்கும். நீண்ட காலம் கட்டாயக் காத்திருப்பில் வைத்திருந்து சம்பளம் கொடுப்பதற்குத் தணிக்கை அதிகாரிகள் ஆட்சேபிக்கும் வாய்ப்பு இருக்கிறதாம்.

— ப்ரியன்

## அழைக்கிறது அமெரிக்கா!

'அழைக்கிறது அமெரிக்கா' – க்விஸ் போட்டிக்கு ஏராளமான கூப்பன்கள் வந்து குவிந்திருக்கின்றன. மிகத் துல்லியமாக பரிசீலிக்க வேண்டியிருப்பதால், முடிவுகள் அறிவிக்கத் தாமதமாகிறது. வாசகர்கள் பொறுத்தருள்க!

— (ஆர்)



கல்கி, மங்கையர் மலர், கோகுலம், துக்ளக் ஆகிய பத்திரிகைகளின் பெங்களூர் முகவர் திரு. எஸ்.ஆர். வெங்கடாசலம் அவர்களின் சதாபிஷேகம் சமீபத்தில் பெங்களூரில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. உறவினர்களும், நண்பர்களும், பத்திரிகை அன்பர்களும் திரளாக வந்திருந்து வாழ்த்தினார்கள்.

நல்ல மனம் படைத்த திரு எஸ். ஆர். வெங்கடாசலம், திருமதி டி.எஸ். பங்கஜம் நீண்ட காலம் ஆரோக்கியத்துடனும், வளமுடனும் வாழ இறைவனை பிரார்த்திக்கிறோம்.



## உயிர் காக்க உதவுங்கள்

அன்புடையீர்,

படத்திலிருக்கும் A. செண்பகா தேவி என்கிற எனக்கு (வயது 30) திருமணமாகி 2 வருடங்கள் ஆகின்றது. நான் இரத்த அழுத்த நோயாலும், சிறுநீரக கோளாறு நோயாலும் மிகவும் அவதிப் பட்டு சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை செய்தால்தான் உயிர்வாழ முடியும் என்ற நிலையில் வரும் ஜூன் மாதம் மதுரை ஸ்ரீ மீனாட்சி மிஷன் மருத்துவமனையில் சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சைக்கு ஏற்பாடு செய்து அதற்கு சுமார் ரூ. 4 இலட்சம் செலவாகும் என மருத்துவ நிபுணர்கள் கூறியுள்ளனர். ஒரு பஸ் நிறுவனத்தில் சாதாரண ஊழியராகப் பணியாற்றும் என் கணவரின் சொற்ப வருமானத்தில் இந்த பெரிய தொகையை ஈடு செய்ய முடியாமல் மிகவும் கஷ்டப் படுகிறோம். ஆகவே இதைக் கண்ணுறும் நல்ல இதயம் படைத்தவர்கள் தங்களால் இயன்ற அளவு பண உதவி செய்து என் உயிரைக் காக்க வேண்டுகிறேன்.

உதவிகள் அனுப்ப வேண்டிய முகவரி:

**Mrs. Shenbaga Devi,**
**36A, Viswanatha Das Lane,**
**Bavabai Compound,**
**Thirumangalam - 625 706.**
**Madurai Dist.**

## ஏக கிராக்கி!

நம்ம ஊர் வாழைப் பழங்களுக்கு இங்கிலாந்தில் ஏகக் கிராக்கி. எங்கு விற்பனைக்கு வந்தாலும் அடுத்த சில நிமிடங்களில் அங்கு விற்றுத் தீர்ந்து விடும். அந்த அளவிற்கு அதை விரும்பிச் சாப்பிடுகின்றனர். இந்தியாவில் இருந்து ஆண்டுதோறும் பல கோடி ரூபாய்க்கு வாழைப் பழம் ஏற்றுமதி செய்யப் படுகிறது. நல்ல தரமான ஒரு டஜன் வாழைப்பழம் அங்கு 20 ரூபாயிலிருந்து 25 ரூபாய் வரை விற்கப்படுகிறது.

– எஸ். ரஜினிப்பிரியன், ஈரோடு.

## அழகான கப்ஸா?

அமர்நாத் புனித யாத்திரை போகும் வழியில் சுமார் 13,000 அடி உயரத்தில் உள்ளது 'சேஷ் நாக்' ஏரி. பனிமலைகளால் சூழப்பட்டு வானத்தையே பிரதிபலிக்கும் நீல நிற நீர்ப்பரப்பு ரம்யமாக காட்சி அளிக்கிறது. இந்த ஏரியின் விசேஷம் என்னவென்றால், இந்த ஏரிக்குள் ஐந்து தலை நாகம் ஒன்று வாழ்ந்து வருகிறதாம். இந்த நாகம் சீறிக் கொண்டு நீர்ப் பரப்பிற்கு வரும்போது, நீல நிறத் தண்ணீர், பால் போல வெண்மையாக மாறி விடுமாம். ஆனால் இந்த நாகம் மிக அபூர்வமாகத்தான் மேலே வருமாம்!



அந்த வட்டாரத்தில் கூறப்படுகிற இந்த விஷயம் உண்மையா, அல்லது யாத்திரிகர்களின் கற்பனைக்குப் போடப்படுகிற தீனியா என்று தெரியாவிட்டாலும் ஏரியின் அழகு யாத்திரிகர்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விடுகிறது.

- சியாமளா சுவாமிநாதன், திருவனந்தபுரம்





## முடிந்ததைச் செய்தவர்!

பால்ய விவாகம் அதிகமாக அமுலில் இருந்த காலம். ஆனந்திபாய்க்கு வயது 14. ஆனால் அந்த வயதிலேயே அவள் ஒரு ஆண் மகவைப் பெற்றெடுத்தாள். குழந்தை பிறந்து சில நாட்களிலேயே தக்க வைத்திய வசதி இல்லாமல் இறந்துவிட்டது.

ஆனந்தியும், அவள் கணவன் கோபால்ராவும் மிகவும் வேதனையுற்றனர். அப்பொழுதெல்லாம் ஆங்கில வைத்தியம் படிக்க வெளிநாட்டில் மட்டுமே வசதி. அதிலும் பெண்கள் படிப்பறிவில்லாத காலம். ஆனால் ஆனந்தி எப்பாடுபட்டாவது, தாம் ஒரு ஆங்கில வைத்தியர் ஆக உறுதி பூண்டாள்.

தற்செயலாக ஒரு அமெரிக்கப் பெண்மணிக்கு அவளது ஆசை தெரியவர, அந்தப் பெண்மணி அவளை அமெரிக்கா அழைத்துச் சென்றார். பென்சில்வேனியா பெண்கள் மருத்துவக் கல்லூரி- சேர்ந்து 1886ல் டாக்டர் பட்டம் பெற்றார். அந்த வருடமே இந்தியா திரும்பினார். ஆனந்தி அமெரிக்கா சென்றபொழுது அவளது சமுதாய மனிதர்கள் வெறுத்து ஒதுக்கி வைத்தனர். ஆனால் அவர் டாக்டராகி ஊர் திரும்பியதும் சமுதாயம் மரியாதையுடனும் அன்புடனும் அவரை ஏற்றுக் கொண்டது. ஆனால் அவரது 22 வயதிலே காசநோய் காரணமாக, இறந்துவிட்டார். இறக்கும்பொழுது அம் மாதரசி "என்னால் முடிந்ததைச் செய்தேன்" எனக் கூறிய கடைசி வார்த்தைகள் - இன்று பல்லாயிரக்கணக்கான இந்திய பெண் மருத்துவர்களுக்கு வழி காட்டுகிறது.

ஆதாரம்: பவன்ஸ் ஜர்னல்

– தையு ராமமூர்த்தி,
சென்னை – 10.

## 'பல்'லாண்டு வாழ்க!

கடிப்பதற்கு எட்டு; கிழிப்பதற்கு நான்கு; வெட்டுவதற்கு எட்டு; அரைப்பதற்குப் பன்னிரண்டு – என்ன தெரியுமா?

நமக்கு உள்ள 32 பற்களின் நான்குவிதமான அமைப்பும், செயலும்தான்.

ஒரு சுவையான செய்தி: பற்கள் விழுந்து முளைப்பது மனித இனத்துக்கே உரிய தன்மை.

எக்காரணம் கொண்டும் பல்லைத் தேய்க்கக் கூடாது. துலக்க வேண்டும்.

'டென்டைன்' என்ற மிக மென்மையான பொருளால் ஆனது பல்.

கசப்பு, துவர்ப்பு, காரம் போன்ற சுவைகளைக் கொண்டவற்றால் பல் துலக்குவதுதான் மிக மிகச் சிறந்தது.

– முத்து. இரத்தினம்,
ஈரோடு.

## மெகா ஊர்வலம்!

உலக அதிசயங்களில் ஒன்றான சீனப்பெருஞ்சுவரைக் கட்டிய ஷி.ஹீவாங்.கி என்ற சீன அரசர், கி.மு. 210ல் மரணம் அடைந்தார். இவரது சடலத்தை ஓர் அழகிய நாற்காலியில் வைத்து, சீன நாடு முழுவதும் எடுத்துச் சென்று மக்களைத் தரிசனம் செய்ய வைத்தனர். இந்தச் சவ ஊர்வலம் 9 மாதங்கள் நடந்தது. உலகிலேயே 9 மாதங்கள் சவ ஊர்வலம் நடைபெற்ற ஒரே மனிதர் இவர்தான்!

ஆதாரம்: 1001 – அதிசய உண்மைகள்

– என். சண்முகம், எம்.ஏ.,
திருவண்ணாமலை.

# இதயத்தால் இணைந்த குடும்பங்கள்!

சில வருடங்களுக்கு முன் அந்தச் செய்தியை எல்லா பத்திரிகைகளும் (கல்கியும்தான்) வெளியிட்டபோது, அதைப் படித்தவர்கள், மருத்துவம் முன்னேறி விட்டதை நினைத்துப் பெருமைப்படுவதா அல்லது விதியின் விளையாட்டை வென்று விட்ட மனித பெருந்தன்மையைப் பாராட்டுவதா என நெகிழ்ந்து போய் நின்றார்கள்.

ஹேமா சுந்தர்ராஜன் என்ற பெண், சாலை விபத்தில் அடிப்பட்டு, 'கோமா' நிலைக்குப் போய்விட, அவர் இறக்கும் தருவாயில் ஹேமாவின் இதயத்தை 'மைமூன் பீபி' என்ற ஏழைப் பெண்ணுக்குத் தானம் செய்திருக்கிறார் கணவர் சுந்தர்ராஜன். இந்தியச் சரித்திரத்திலேயே முதன்முறையாக இந்த இதயமாற்று அறுவை சிகிச்சையை எம்.எம்.எம். மருத்துவமனை டாக்டர் செரியன் வெற்றிகரமாகச் செய்து முடித்தார்.

இந்தச் சாதனை நிகழ மூல காரணமாக இருந்த சுந்தர்ராஜன், தாயை இழந்து தவித்த பிள்ளைகள், மாற்று இருதயம் பொருத்தப்பட்ட மைமூன் பீபி, இவர்கள் அனைவரும் இப்போது எப்படியிருக்கிறார்கள் எனத் தெரிந்துகொள்ள விரும்பி, சம்பந்தப்பட்டவர்களைச் சந்தித்தோம்.



• ஹேமா



• மைமூன் பீபி

"இருதயம் கெட்டுப் போய், மூச்சு விட முடியாம உயிருக்குப் போராடிக்கிட்டு ஜி.எச்.லே மூணு மாசம் இருந்தேன். என் கணவருக்கு கர்சீப் வியாபாரம். சாப்பாட்டுக்கே கஷ்டப்படற வாழ்க்கை. ஆபரேஷன் பண்றதுக்கு வசதியில்லாம கணவரும் பிள்ளைங்களும் கலங்கிப் போய் நின்னாங்க. நான் நாள் பூரா அல்லாவைப் பிரார்த்தனை பண்ணிக்கிட்டேயிருந்தேன். அப்போ ஒரு நாள் விஜயா ஆஸ்பத்திரியிலிருந்து ஆம்புலன்ஸ் வண்டி வந்து என்னை அழைச்சுக்கிட்டுப் போனாங்க. பெரிய டாக்டர் செரியன் எனக்கு மாற்று

இதயம் பொருத்தப் போற தாச் சொன்னாங்க. 'நீங்க பிழைப்பீங்க'ன்னு நம்பிக்கை தந்தாங்க. ஆபரேஷன் நல்ல படியா நடந்துச்சு. அவங்களும் இதுவரைக்கும் என் கிட்டே எந்தக் கட்டணமும் வாங்காம இலவசமாதான் செஞ்சாங்க. யாருக்கு ஷுக்ரியா சொல்றது? எனக்கு உயிர்ப்பிச்சைக் குடுத்த அல்லாவுக்கா? ஒரு பைசா கூட வாங்காம ஆபரேஷன் செஞ்ச டாக்டருக்கா? இல்ல, பரந்த மனசோட இருதயத்தைத் தானம் கொடுத்த ஹேமா குடும்பத்துக்கா... எனக்குத் தெரியலீங்க" என்று கண்ணீர்த் துளிக்கிறார் மைமூன் பீபி.

படுத்த படுக்கையாக இருந்த பீபி, இப்போது மூச்சுத் திணறல் இல்லாமல், உடல் நலத்துடன் இருக்கிறார். ஓடியாடி வேலை செய்ய முடியாவிட்டாலும், மருமகள்கள் அன்பாக கவனிப்பதால், சிரமம் ஏதும் இல்லை என்கிறார்.

"ஏதாவது கொஞ்சம் சுகவீனமா இருந்தாலும் உடனே எம்.எம்.எம். ஆஸ்பத்திரிக்குப் ஃபோன் செய்யச் சொல்வேன். உடனே, அவங்க வண்டி அனுப்புவாங்க. 'செக்-அப்' செய்து, தேவையான மருந்து மாத்திரைகளையும் அவங்களே கொடுத்து அனுப்பிடுவாங்க" என்கிறார் பீபி.

தமக்கு இருதய தானம் கொடுத்த குடும்பத்தின் மீது அளப்பரிய பாசம் காட்டிப் பேசுகிறார்.

"அவங்கம்மாவோட இதயம் என்கிட்டே இருக்கிறதனாலேயோ என்னவோ, என்கிட்டே அந்தக் குழந்தைகள் சங்கரி, ஊர்மிளா ரெண்டு பேரும் ரொம்ப பாசமா இருப்பாங்க. என்னையும் அவங்க குடும்பத்துல ஒருத்தராத்தான் நினைக்கிறாங்க. எனக்கு ஆபரேஷன் ஆகி நான் உயிர் பிழைச்ச நாள்தான், அவங்கம்மாவோட நினைவு நாள்ன்றதால, அன்னிக்கு மறக்காம என்னைப் பார்க்க வருவாங்க. சேலை, இனிப்பு, பரிசுப் பொருள்னு கொடுத்து அன்பா பேசிக்கிட்டிருப்பாங்க. ரொம்ப தங்கமான குழந்தைங்க. அவங்க குடும்பம் செஞ்ச தியாகம்தான் இன்னிக்கு நான் உயிரோட இருக்கேன்... என் ஆயுசு இருக்கிறவரை நான் டாக்டர் செரியனையும், சுந்தர்ராஜன் குடும்பத்தையும் மறக்க மாட்டேங்க..." என்று சேலைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொள்கிறார் மைமூன் பீபி.



• ஊர்மிளா, சுந்தர்ராஜன், சங்கரி

பக்கத்து வீட்டில் இருந்த ஹேமாவைக் காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கிட்டேன். பன்னிரண்டு வருஷம் ரொம்ப அந்நியோன்யமா வாழ்ந்தோம். சம்பவம் நடந்த அன்னிக்கு மத்தியானம், தன்னோட பெற்றோரைப் பார்க்கிறதுக்காக சைக்கிள்ல போயிருக்காங்க... தாம்பரம் சானடோரியம் ராம ஆஞ்சநேயர் கோயில்கிட்டே ஒரு லாரி மோதிடுச்சு... ரொம்ப மோசமான நிலைமையில் ஆஸ்பத்திரியில சேர்த்தோம். அங்கிருந்து விஜயா ஹாஸ்பிடல்... இதற்கு இடையிலே ஒரு வாரம் ஓடிருச்சு. அவங்களுக்கு நினைவே திரும்பலை. ஒவ்வொரு உறுப்பா செயலிழந்துக்கிட்டே வந்தது. அப்போதான் டாக்டர் செரியன் என்கிட்டே இருதய தானம் பற்றிப் பேசினார். நான் ஒரு ஸ்போர்ட்ஸ்மேன்றதனாலே, இந்த விஷயத்தையும் ஸ்போர்ட்டிவ்வா பார்க்க முடிஞ்சது. 'சரி'ன்னுட்டேன். தானம் செய்ய நாம தயார்னாலும் பொருத்தக்கூடிய நிலையில் மைமூன் பீபி இருந்ததும், டிஷ்யூ மேச் சிங், பிளட் குரூப் போன்றவையும் ஒத்துப் போனதும் கடவுள் செயல் அல்லாமல் வேறென்னவாக இருக்க முடியும்" என்கிறார் சுந்தர்ராஜன்.

வீட்டில் இருந்தால் அம்மாவின் நினைவாகவே இருப்பதால், ஹாஸ்டலில் தங்கிப் படிக்கிறார்கள் சங்கரியும், ஊர்மிளாவும். எரித்தோ, புதைத்தோ வீணாகிப் போயி

# லால்குடி லக்..!

தமிழக சட்டமன்ற உறுப்பினர்களில் நான்கு பேர் லால்குடி மற்றும் அதனருகில் உள்ள கிராமங்களைச் சேர்ந்தவர்கள்

• லால்குடியை அடுத்த அன்பில் கிராமத்தைச் சேர்ந்த பெரியசாமி மறைந்த முன்னாள் அமைச்சர் அன்பில் தர்மலிங்கத்தின் இரண்டாவது மகன். அவர் திருச்சி இரண்டாவது சட்டமன்றத் தொகுதியில் தி.மு.க வேட்பாளராக நின்று இரண்டாவது முறையாக வெற்றி பெற்றுள்ளார்.



• முன்னாள் அமைச்சர் நேருவின் உறவினரும், திரைப்பட நடிகருமான நெப்போலியன் லால்குடிக்கு அருகில் உள்ள பெருவளநல்லூர் கிராமத்தைச் சேர்ந்தவர். தி.மு.க சார்பில் வேட்பாளராகப் போட்டியிட்டு இவர் வென்றது வில்லிவாக்கத்தில்.

• லால்குடி சிறுதையூர் பகுதியில் பிறந்து வசித்து வருபவர் எஸ்.எம். பாலன். லால்குடி சட்டமன்றத் தொகுதியில் அ.தி.மு.க வேட்பாளராகப் போட்டியிட்டு இவர் வென்றது தி.மு.க.வின் முன்னாள் அமைச்சர் கே.என். நேருவை.

• லால்குடியை அடுத்த வாளாடி கிராமத்தைச் சேர்ந்த ராஜராஜன் வேளாண் துறையில் உதவி அலுவலர். அவரது மகள் சசிகலா, கிருஷ்ணராயபுரம் சட்டமன்றத் தொகுதியில் அ.தி.மு.க.வின் வெற்றி பெற்ற வேட்பாளர்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

ருக்கக் கூடிய உறுப்பை, அப்பா, சரியான சமயத்தில் கொடுத்து, ஓர் உயிரை வாழ வைத்த காரியத்தினால் இருவருக்கும் பெருமை. அதிலும் ஊர்மிளாவின் பாடப் புத்தகத்திலேயே இந்த தானம் பற்றிய செய்தி வந்திருப்பதால் இரட்டிப்பு பெருமிதமாம்.

"என்னோட மனைவிக்கு ரொம்ப இளகின மனசு. தானம் தருமம்னு நிறைய செய்வா. இப்ப பாருங்க. அவ இறந்து போயிருக்கிற அந்த நிலைமையில்கூட, தானம் பண்ணிட்டுதான் போயிருக்கா. அதுவும் ரொம்ப ஏழைப் பொண்ணுக்கு... இந்த ஆபரேஷன் நடந்த தினத்தை, உறுப்பு தான விழிப்புணர்வு நாளாகக் கொண்டாடறாங்க" என்கிறார் சுந்தர்ராஜன்.

"எங்க அம்மா இருந்த இடத்துல இன்னொரு பெண்ணைக் கற்பனை கூட பண்ண முடியாமதான் அப்பா மறுமணமே பண்ணிக்காம தனியா வாழ்ந்துக்கிட்டிருக்காரு. அம்மா, அவ்ளோ ப்ரியமானவங்க.. நான் ஸ்கூல்ல படிக்கும்போது, மேடையிலே பேசி நிறைய பரிசு வாங்கணும்னு அம்மா ஆசைப்படுவாங்க. அதுக்காக என்னைத் தயார் பண்ண ரொம்பவே சிரமப்படுவாங்க. ஆனா இப்ப, அவங்க மரணத்துக்கப்புறம் நான் மனித உறுப்பு தானம் தரப்படுவதன் அவசியத்தை வலியுறுத்தி மேடைகள்ல பேசிக்கிட்டிருக்கேன். அதைக் கேட்கிறவங்க என்னோட கோரிக்கையில இருக்கிற வலியைப் புரிஞ்சுக்கிட்டு அப்படியே நெக்குருகிப் போயிடறாங்க. ஆனா இதையெல்லாம் பார்க்க அம்மாதான் இல்லை" என்கிறார் ப்ளஸ் டூ முடித்திருக்கும் சங்கரி.

— அனு, லட்சுமி ஸ்ரீனிவாஸன்



# ஆஸ்துமா ஈஸ்னோபீலியா அலர்ஜி, சைனஸ், காசநோய்களுக்கு தெய்வீக மூலிகை சிகிச்சை



பல வருட ஆராய்ச்சியின் மூலம், வேதங்களும், ஞானிகளும் போற்றியதும், கடவுளுக்கு சமமாகவும், நம் நாட்டின் பல பொக்கிஷங்களில் ஒன்றாகவும் கருதக் கூடிய பல தெய்வீக மூலிகைகளைக் கொண்டு பக்க விளைவுகள் இல்லாத வகையில், தாமே தயார் செய்த தெய்வீக மூலிகை மருந்துகள் மூலம் குழந்தைகளுக்கு வரும் பிரைமரி காம்ப்ளக்ஸ், எதிர்ப்பு சக்தி குறைவின் காரணமாக வரும் டஸ்ட் அலர்ஜி, சீதோஷ்ண நிலை மாற்றத்தால் வரும் மூக்கில் நீர் வடிதல், சளி, தும்மல், தொடர் இருமல், சுவாசிக்க முடியாதபடி மூக்கடைப்பு, சைனஸ், தொண்டை கரகரப்பு, தலைவலி, மலச்சிக்கல், ஈஸ்னோபீலியா, மூச்சு விடும் போது விசில் சத்தம் வருதல் (நின்றால் - நடந்தால் - படுத்தால் - மூச்சு வாங்குதல்) சாப்பிட முடியாமை, உடல் மெலிவு, உடல் வெளுத்து காணப்படுதல் போன்ற அறிகுறிகளை உடைய ஆஸ்துமா நோய்களுக்கு சிறப்பான சிகிச்சை அளிக்கப்படுகின்றது மற்றும் **எய்ட்ஸ், எல்லாவித புற்றுநோய், BP, இதய நோய், சிறுநீரக கோளாறு, சர்க்கரை வியாதி, ஆண்மைக் குறைவு, குழந்தையில்லாத குறை, அல்சர், மூட்டுவலி, சோரியாசிஸ்** போன்றவைகளுக்கு சிறப்பான ஆலோசனைகளும் & சிகிச்சைக்கும் அணுக வேண்டிய முகவரி

## தெய்வீக மூலிகை வைத்தியர்கள்



தலைமை முகவரி : Dr. M.குருபரன் & Dr. M. சபாபதி, Dr. M.சிவசக்தி,S/O. Dr. C.K.மாணிக்கவாசகம்
P.B. NO. 30, 3,திருநாத முதலி நகர் (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் DT 635601 ✆ : 04179-20469, 22769
சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 600 010. ✆ : 044-6424285, 6427638.
இரு முகவரிகளிலும் ஆலோசனை நேரம் காலை 10.00-1.00 P.M. மாலை 5.00-7.00 P.M.

## ஒவ்வொரு மாதமும் வெளியூர்களில் டாக்டரை நேரில் சந்திக்க

| | | | | |
|---|---|---|---|---|
| **வேலூர்**<br>2 ந்தேதி 12.00 P.M. TO 2 P.M.<br>(N.S.K. லாட்ஜ் 24/A, ஆரணி ரோடு<br>பஸ் ஆபீஸ் அருகில்)<br>✆ : 0416/21359 | **காஞ்சிபுரம்**<br>2 ந்தேதி 5 P.M. TO 6 P.M.<br>ராஜம் லாட்ஜ் (பஸ் நிலையம்<br>அருகில் காமராஜர் தெரு<br>✆ : 04112 /22159 | **கடலூர் (S.A. DT.)**<br>4 ந்தேதி 9 A.M. TO 11 A.M.<br>ஆர்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல்,<br>✆ : 04142 / 36767, 36770 | **விழுப்புரம்**<br>4 ந்தேதி - 2 P.M. TO 3 P.M.<br>ஹோட்டல் ஆனந்தா, பஸ் நிலையம்<br>எதிரில் ✆ : 04146 / 22942, 24960 | **திருவண்ணாமலை**<br>4 ந்தேதி 5 P.M. TO 6 P.M.<br>ராஜா லாட்ஜ் (பஸ் நிலையம் எதிரில்)<br>✆ : 04175/22534 |
| **மும்பை**<br>7 & 8 ந்தேதி 10 A.M. TO 8 P.M.<br>The South Indian Concerns Ltd.,<br>401, Telang Road Matunga (CR),<br>PH : 022/4011580 | **பெங்களூர்**<br>9 ந்தேதி 11 A.M. TO 1 P.M.<br>ஹோட்டல் பிராட்வே, (கல்பனா<br>தியேட்டர் அருகில் கெம்பேகவுடா<br>ரோடு ✆ : 080 / 2264374 / 2873003 | **ஓசூர்**<br>9 ந்தேதி - 4 P.M. TO 5 P.M.<br>மீனாட்சி லாட்ஜ், பாகலூர் ரோட்,<br>✆ : 04344 / 42899, 43321 | **சேலம்**<br>12 ந் தேதி 11 A.M. TO 1 P.M.<br>ஹோட்டல் செல்வம், புதிய பஸ்<br>நிலையம் எதிரில்<br>✆ : 0427/ 449333/ 449332. | **ஈரோடு**<br>12 ந்தேதி 4 P.M. TO 6 P.M.<br>ஹோட்டல் ஆக்ஸ்போர்டு, பஸ்<br>நிலையம் எதிரில்,<br>✆ : 0424 / 224410/12/14 |
| **கோயம்புத்தூர்**<br>13 ந்தேதி - 9 A.M. TO 1 P.M.<br>சேரன் டவர்ஸ் லாட்ஜ் (காந்தி -<br>தியேட்டர் பின்புறம்)<br>✆ : 0422 / 302219, 302220 | **மதுரை**<br>14 ந்தேதி - 9 A.M. TO 11 A.M.<br>ஹோட்டல் ஜெயண்ட்ஸ் சென்ட்ரல்,<br>மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு,<br>✆ : 0452 / 743941 | **தஞ்சாவூர்**<br>14 ந்தேதி 5 P.M. TO 7 P.M.<br>அசோகா லாட்ஜ்,<br>✆ : 04362 /30021 / 30022 | **திருச்சி**<br>15 ந்தேதி 9 A.M. TO 11 A.M.<br>ஹோட்டல் ஆனந்த்,<br>சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில்,<br>✆ : 0431 / 415545 | **நாமக்கல்**<br>15 ந்தேதி 2 P.M. TO 4 P.M.<br>ஹோட்டல் தேவி அன்னபூர்ணா<br>✆ : 04286 / 20433, 21336 |
| **நியூடெல்லி**<br>18&19 ந்தேதி 8 A.M. to 8 P.M.<br>South Indian Hotel, 10211,<br>Padam Singh Road, Ajmal Khan Road<br>Karol Bagh ✆ 011/5717126, 5723864 | **தர்மபுரி**<br>22 ந்தேதி - 8 A.M. TO 10 A.M.<br>ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், 103,<br>அதியமான் கைமாக் ரோடு,<br>✆ : 04342 /60226, 61472 | **திருப்பூர்**<br>22 ந்தேதி 2 P.M. TO 3 P.M.<br>ராமகிருஷ்ணா லாட்ஜ், கல்யாண்<br>கோவில் தெரு, ✆ : 0421 / 74098. | **உடுமலைபேட்டை**<br>22 ந்தேதி - 6 P.M. TO 7 P.M.<br>ஹோட்டல் குறிஞ்சி,<br>(பஸ் நிலையம் எதிரில்<br>✆ : 04252 / 24253 | **திண்டுக்கல்**<br>23 ந்தேதி - 9 A.M. TO 11 A.M.<br>ஹோட்டல் குறிஞ்சி, பஸ் நிலையம்<br>பின்புறம் ✆ : 0451 / 421054, 42707 |
| **தூத்துக்குடி**<br>23 ந்தேதி - 5 P.M. TO 6 P.M.<br>ஹோட்டல் ஆஸ்வின்,<br>தேவர் புரம் ரோடு,<br>✆ : 0461 / 327780 | **திருநெல்வேலி**<br>24 ந்தேதி 8 A.M. TO 11 A.M.<br>ஹோட்டல் ஸ்ரீ சீதாபதி,<br>மதுரை ரோடு,<br>✆ : 0462 / 33332. | **நாகர்கோவில்**<br>24 ந்தேதி 2 P.M. TO 3 P.M.<br>ஹோட்டல் ஏஞ்சல், மீனாட்சிபுரம்<br>✆ : 04652 / 36678 | **விருதுநகர்**<br>25 ந்தேதி 8 A.M. TO 10 A.M.<br>அண்டன் லாட்ஜ், மதுரை ரோடு,<br>✆ : 04562 / 45327 | **கரூர்**<br>25 ந்தேதி 2 P.M. TO 4 P.M.<br>அஜி லாட்ஜ், ஜவகர் பஜார்,<br>✆ : 04324 / 42543, 42463 |

**நேயர்கள் : SUN, RAJ, VIJAY, D.D T.V.** களில் எமது பேட்டியை காணத்தவறியவர்கள். டாக்டரின் மூலிகைகள் பற்றிய 26 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய **"எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்"** இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய **"என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்"** என்ற இரு புத்தகத்தையும் பதிவுத் தபாலில் பெற ரூ. 130/-மேற்கண்ட முகவரிக்கு **D.D.** அல்லது **M.O.** அனுப்பவும்.

# கர்வ

பாரதப் போரில் அர்ஜுனனின் தேர்க் கொடியில் இருந்து, பாண்டவர்கள் பெற்ற வெற்றியைப் பார்த்து மகிழ்கிறான் அனுமான்.

பின்னர், சிரஞ்சீவியான அவன், யமுனைக் கரையிலேயே ராமநாமத்தை ஜபித்துக்கொண்டு சில காலம் இருக்க முடிவு செய்கிறான்.

போரில் வெற்றி பெற்ற தரும புத்திரன் முடி சூட்டிக் கொள்கிறான். வெற்றிப் பெருமிதம் அர்ச்சுனனைக் கர்வம் கொள்ள வைக்கிறது. பரந்தாமன் சிரிக்கிறான்.

ஒரு நாள் யமுனைக் கரையில் உலவிக் கொண்டிருந்த அர்ச்சுனன், ராமநாமத்தை ஜபித்துக் கொண்டிருந்த ஆஞ்சனேயனைப் பார்க்கிறான். இருவரும் சிறிது நேரம் உரையாடுகின்றனர்.

திடீரென்று அர்ச்சுனன் வினவுகிறான், 'நீங்கள் கடலைக் கடக்க ஒரு பாலம் அமைக்க, எவ்வளவு சிரமப்பட்டீர்கள்? நான் என் வில்லையும் அம்பையும் கொண்டே எளிதாகப் பாலம் அமைத்து விடுவேன். ஏன், உங்கள் இராமன் அவ்விதம் செய்யவில்லை?'

அனுமான் பதிலளிக்கிறான். "அர்ச்சுனா! அம்பினால் அமைக்கப்படும் பாலம் எங்கள் வானர சேனை கடந்து செல்ல உதவுமா? முதலில் என் ஒருவனையே தாங்குமா?"



"கண்டிப்பாகத் தாங்கும்" என்று அர்ச்சுனன் கூறவும் அனுமான் அதைப் பரீட்சித்துப்

**எஸ். ராஜம்மாள்**



பார்க்க விரும்புகிறான். அர்ச்சுனன் அலட்சியமாகக் காண்டீபத்தை எடுத்து யமுனை நதியைக் கடக்க ஒரு அம்புப் பாலத்தை அமைக்கிறான். ஆஞ்சனேயனை அதன் பலத்தைப் பரீட்சித்துப் பார்க்கச் சொல்கிறான்.

ஆஞ்சனேயரும் கதையுடன் பாலத்தின் அருகே செல்கிறார். 'ராம்! ராம்!' என்று கூறி பாலத்தின் மீது ஓரடி எடுத்து வைக்கிறார். சடசடவென முறியத் தொடங்குகிறது பாலம். அடுத்த அடி எடுத்து வைத்த வுடன் உடைந்து நொறுங்கிய பாலத்திலிருந்து, கரையில் குதித்த அனுமான் பெருமிதத்துடன் சிரிக்கிறார்.

அர்ச்சுனன் தலைகுனிந்து 'கிருஷ்ணா! கிருஷ்ணா!' என்று மனதிற்குள் அரற்றுகிறான்.

அப்போது அந்தணரொருவர் நதியில் நீராட வரு கிறார். இருவரையும் பார்த்து, "இங்கு என்ன நடந்தது? ஏன் இப்படி நிற்கிறீர்கள்?" என்று வினவுகிறார். அர்ச் சுனன் பதில் சொல்வானா?

வெற்றிக் களிப்புடன் அனுமான் நடந்ததை விவரிக் கிறார்.

அந்தணர் உடனே, "நடுவர் இல்லாது நடந்த எந்தப் போட்டியும் சரியானதல்ல. நான் நடுவராக இருக் கிறேன். மறு முறை போட்டியை நடத்தலாம்." என்று கூறுகிறார்.

அவரது வற்புறுத்தலால் விருப்பமே இன்றி, மனத் திற்குள் 'கிருஷ்ணா! கிருஷ்ணா!' என்று அரற்றியபடி ஒவ்வொரு அம்பையும் தொடுக்கிறான் அர்ச்சுனன். பாலத்தை அமைத்துத் தலைகுனிந்து நிற்கிறான்.

அனுமனோ நிமிர்ந்த நடையுடன் பாலத்தின்மீது அலட்சியமாகக் காலை வைக்கிறார். 'என்னஇது! அசையவே இல்லையே!' என்று நினைக்கிறார். மற்றொரு காலையும் தூக்கி வைக்கிறார். அப்போதும் எந்த மாற்ற மும் இல்லை. அர்ச்சுனன் மெதுவாகத் தலை நிமிர்ந்து பார்க்கிறான். அனுமனோ பாலத்தின் மீது நடக்கிறார். அங்கும் இங்கும் ஓடுகிறார். 'தொம், தொம்' என்று குதிக்கிறார். தலை குனிந்து பாலத்தினின்று இறங்கி அந்தணனைப் பரிதாபமாகப் பார்க்கிறார். அர்ச்சுனன் வியந்து நிற்கிறான்.

அந்தணனாக வந்த பரந்தாமன் இருவருக் கும் இராமனாகவும், கிருஷ்ணனாகவும் மாறி மாறிக் காட்சி கொடுக்கிறான். இருவரும் அவனது அருளே அவர்களது வெற்றி தோல்வியை நிர்ணயித்ததைப் புரிந்து கொள்கின்றனர். தன் திறமையில் பெருமிதம் கொண்டு அர்ச்சுனன் முதலில் அமைத்த பாலம் நொறுங்கிய தையும், முடிவில் வெற்றிக் களிப்பில் ராம நாமத்தை மறந்த ஆஞ்சனேயனால் பாலத்தை அசைக்க முடியாமல் போன தையும் உணர்ந்து கொள்கின்றனர்.



# பந்தயம்

✉ ஹாசிம் ரஹ்மான், ஹாலிஃபை பாக்ஸிங் போட்டியில் வென்றாலும், 'அவர் திறமையான சாம்பியன்' என்று எதிராளியை அங்கீகரித்து, தமது வெற்றிக்காக அல்லாவுக்கு நன்றி கூறியிருக்கிறாரே... நம் அரசியல்வாதிகள் கவனிக்க வேண்டிய விஷயம்.

**கே.வி.ராமன்**
**சென்னை,**

✉ ஆழ்ந்த சிந்தனையின் வெளிப்பாடாய் அமைந்த 'தனிக் குடித்தனம்' - கவிதை வரிகள் வெகு அற்புதம். தஞ்சை ராகவ், மகேஷ் பாராட்டுக்குரியவர்...

**பாலசுப்ரமணியன்**
**போடிநாயக்கனூர்,**

✉ எளிமை, இனிமை, புதுமை! கனிமொழி பேட்டி ஏ ஒன். டி.வி. தொடர் குறித்த அவரது கருத்தை மாதர் குல மாணிக்கங்கள் செவி மடுக்க வேண்டும்.

**வி. சிவா.**
**மதுரை,**

✉ மறதியால் பலருடைய வாழ்க்கை திசை மாறிய கப்பலாய்ப் போவதைத் தடுத்து நிறுத்தி, அவர்கள் நினைவாற்றலைப் பெருக்கி பெருமைப்பட 'மாண்புமிகு மெமரி' புதிய தொடர் பயனுள்ளதாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

**வி.கே. சுப்பிரமணியன்**
**ஈரோடு,**

✉ '102 டால்மேஷன்ஸ்' ஹாலிவுட் அசத்தலை எப்படி குடும்பத்தோடு நாங்கள் பார்ப்பது? உங்கள் ஊருக்கு வந்தால்தான் உண்டு. உங்கள் விமர்சனத்தைப் பார்த்துப் படித்து மகிழ்ந்து கொள்ள வேண்டியதுதான்.

**செ.ரா. ரவி**
**திண்டுக்கல்,**

# பிரார்த்தனை பலிக்க பிரார்த்தனை!

✉ அ.தி.மு.க.வின் வெற்றி அமோகமானது. ஆனால் உங்கள் தலையங்கத்திலோ சற்றும் நடுநிலைமையின்றி ஜெ. வென்றது ஏதோ 'தகாத செயல்' போல் எழுதியுள்ளீர்கள். கல்கியின் கருத்துகளும் துரதிருஷ்டவசமானது.

**எஸ்.ஸ்ரீதர்**
**மதுரை,**

✉ 13.5.2001 ஞாயிறு அன்று வெளியான தேர்தல் முடிவுகளினால் புளகாங்கிதம் அடைந்திருந்தேன். "சென்னை, தங்களது கோட்டை" என இறுமாந்திருந்த தி.மு.க.வினருக்கு மரண அடி கிடைத்ததையும், கல்கி இதழின் கருத்துகள், கார்ட்டூன்கள், வாசகர்களிடையேயும், மக்களிடையேயும் சிந்துவார் இன்றிப் புறக்கணிக்கப்பட்டதையும் எண்ணினால் பிரம்மானந்தமாக இருக்கிறது.

**பிரபாகரன்**
**சென்னை-1**

✉ 'மிருகபல மெஜாரிட்டி' தலையங்கம் படித்தேன். இதனை விட தெள்ளத் தெளிவாக எடுத்துரைக்க யாரால் முடியும்? உங்களது பிரார்த்தனை பலிக்க இறைவனை பிரார்த்தனை செய்கிறேன். 'நமது கவலைகள்... ஏமாற்றமடையாமலிருக்கட்டும்!' என்ற கடைசி வரிகள் மனத்தைத் தொடுகின்றன.

**எஸ். லட்சுமி**
**சென்னை-44**

கல்கி
KALKI
தேர்தல் முடிவுகள்
எப்போ கல்யாணம்?


வட்டமேஜை

குமுதம்
# பக்தி

ஜூன் 2001 ஸ்பெஷல்

விலை ரூ 15.00 பதினைந்து ரூபாய்

## உங்கள்
குடும்பத்தில்
குதூகலம்
நிலவப் போகிறது.

இந்த இதழுடன்

## ராகவேந்திரர்
# மோதிரம்

மந்திராலய
அட்சதை,
மிருத்திகை

மற்றும்

ராகவேந்திரர்
## பிருந்தாவனம்
வண்ணப்படம்

அன்பளிப்பு.

**இலவச இணைப்பு**

குரு பெயர்ச்சி
பலன்கள்
கையடக்கப் புத்தகம்



# தற்போது விற்பனையில்

**8**

**அருண் சரண்யா**

**ப**ல்லி வெகு கவனத்துடன் சுவரில் துளித்துளியாக தனது 'லட்சியத்தை' நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது. பூச்சி பறந்து விடுவதற்குள் அதைப் பிடித்து விட வேண்டுமென்ற வேகம். அதே சமயம் தன்னைக் கண்டு அது பறந்துவிடாமல் இருக்குமளவிற்குத் தனது முன்னேற்றத்தை ரகசியமாக வைத்துக் கொள்ள வேண்டிய கட்டாயம்.

'ளப்'. ஒரே இழுப்பில் தனது நீண்ட நாக்கால் பூச்சியைக் கௌவித் தனது வாய்க்குள் தள்ளிக் கொண்டது பல்லி. அடுத்த நிமிடமே சுற்று முற்றும் பார்த்தது. வேறெங்காவது மற்றொரு இரை இருக்காதா என்ன?

அந்தப் பெருத்த பல்லியைப் பார்த்துக் கொண்டிருந்த சிவப்ரியாவுக்கு வழக்கமாக எழும் சந்தேகம் இப்போதும் எழுந்தது. 'இந்தப் பல்லிகள் பிறவியெடுத்ததன் ஒரே நோக்கம் மாறி மாறிப் பூச்சிகளைத் தின்பதற்குதானா? இரை தேடுவதைத் தவிர வேறெந்தக் காரியத்தையும் எந்தப் பல்லியும் செய்து பார்த்ததாக அவளுக்கு நினைவில்லை.

அவளது கேள்வியை உணர்ந்து கொண்டதுபோல் மற்றொரு காரியத்தை செய்து அந்தப் பல்லி சிவப்ரியாவை அதிர வைத்தது.

பொத்.

'ஆ'

சிவப்ரியாவின் அலறல் கேட்டு வேகமாக வரும் போதே மாமி



# மனம்... மீனமய ஆவல்

கவனித்துவிட்டாள். "என்னடி பாதத்திலே பல்லி விழுந்ததா? அப்படியானா வெளியூர்ப் பயணம் இருக்கு உனக்கு!"

வெளியூர்ப் பயணம் மட்டுமல்ல, வெளிநாட்டுப் பயணமே வாய்த்துவிட்டது.

"லண்டனிலே நாலுநாள் ஷூட்டிங். நீங்களும் வரீங்க. பாஸ்போர்ட், விசா பற்றிக் கவலை வேணாம். தயாரிப்பாளர் ஏற்பாடு செய்துடுவார்."

**க**லாபூர்வமான அந்த ஹோட்டலில் தனக்கென ஒதுக்கப்பட்டிருந்த மூன்றாவது மாடி அறையிலிருந்து பார்க்கும்போது தேம்ஸ் நதி ரம்மியமாக, அமைதியாக ஓடிக் கொண்டிருப்பது தெரிந்தது. இதற்கு நேரெதிராக துள்ளித் ததும்பி ஓடிய காவிரியை அவள் பார்த்திருக்கிறாள். அதுவும் பெருக் கெடுத்த ஆடியில். மணற்படுகையில் அப்படியேயும் துண்டை விரித்து அதன்மீதும் குடும்பம் குடும்பமாக அமர்ந்து கொண்டு, பெரியவர்கள் எடுத்துவிடும் கதைகளையும், குழந்தைகளின் ஓடிப்பிடி விளையாட்டையும் ரசித்தவாறே, கலவை சாதங்களை உண்ணுவது

பேரானந்தம்.

தேம்ஸ் நதியையும் தெய்வீகமானதாக் கருதி லண்டன் மக்களும் ஆடிப்பெருக்கு போன்ற ஒரு விழாவை எடுத்தால் எப்படி யிருக்கும் என்ற விசித்திர யோசனை தோன்றியது அவளுக்கு. வரிசைக்கிரமாக அமர்ந்து கொண்டு அல்லேலுயா பாடிய பிறகு சாண்ட்விச்சும் பர்கரும் சாப்பிடுவார்களோ? நினைப்பே புன்னகையைத் தந்தது.

"என்னங்க, எதையோ நினைச்சு சிரிச்சிக்கிட்டிருக்கீங்க?" என்றபடி உள்ளே நுழைந்தாள் சிரிஷா. திரைப்படத்தின் இரண்டாவது கதாநாயகி.

கதவைத் தட்டாமல் உள்ளே நுழைந்தது அநாகரிகம். எனினும் அதைக் கூறவில்லை சிவப்ரியா. 'இங்கு நான்கு, இந்தியாவில் பத்து என்று சுமார் இரண்டு வாரங்களில் முடிந்து விடப் போகிறது படம். அதற்குப் பிறகு திரையுலகத்திற்கும் அவளுக்குமிடையே எந்தத் தொடர்பும் இருக்கப் போவதில்லை. இதற்குள் யாரையுமே எதற்குப் புண்படுத்த வேண்டும்?'

"என்ன இதுக்கும் சிரிப்புதான் பதிலா? இப்படியே பேசாமலேயே சமாளிச்சுக்கிட்டிருக்கீங்க. பெரிய ஆள்தான். குறைந்தபட்சம் ஒரு நன்றி கூட சொல்ல மாட்டேங்கறீங்களே?"

"எதற்காக நன்றி?" கேள்விக்குறியுடன் பார்த்தாள் சிவப்ரியா.

"புதுசா பைனான்ஸ் கம்பெனி ஆரம்பிச்சாரே, அவர் தலையிலே என்ன கட்டு போட்டிருக்கார்?"

"அதுவா, அவர் காலையில உடற்பயிற்சிக்காக ஓடினதை தப்பா புரிஞ்சுகிட்டு, பணத்தோட ஊரைவிட்டு ஓடுறார்னு நினைச்சு நம்ம ஊர் ஜனங்க பின்னிட்டாங்க!"

- தோப்புத்துறை
விஜய. ஆனந்த்



"நான் ஒருத்தி இருப்பதாலேதான் உங்க கவர்ச்சியைப் பிழியாம விட்டாங்க. அதுக்காக ஒரு தாங்ஸ் பாக்கி. அப்புறம் நான் கூடவே இருக்கறதினாலேதான் நம்ம ஹீரோ சாரோட தனிப் பார்வையிலேயிருந்து நீங்க தப்பிச்சிட்டு வர்றீங்க. அதுக்கு ஒரு தாங்க்ஸ். ஆக நான் ரெண்டு 'நோமென்ஷன்' சொல்றதுக்காகக் காத்துக்கிட்டிருக்கேன்."

அவள் கூறும் இரண்டு காரணங்களிலுமே உண்மை ஓரளவு உண்டு. ஆனால் அவளுக்குத் தெரியாத காரணங்களும் இருந்தன.

கதைப்படி சிவப்ரியா ஒரு வழக்கறிஞர் என்பதுடன் ரொம்பவும் ஹோம்லியான ஒரு பாத்திரம். இதற்கு மாறாக அவளை ஏதாவது காட்சியில் அதிகக் கவர்ச்சிகரமாகக் காட்டினால் அவளது பாத்திரம் பாதிக்கப்பட்டு விடும் என்ற எண்ணம் மணிசங்கருக்கு தொடக்கத்திலிருந்தே இருந்து வந்தது. அதே சமயம் படத்தில் வரும் கவர்ச்சிக் காட்சிகள் இடம் பெற சிரிஷாவை புக் செய்துவிட்டார்!

கூட நடிக்கும் நாயகியுடன் அதிக சுதந்தரம் எடுத்துக் கொண்டே பழக்கப்பட்ட கதாநாயகன் சிவப்ரியாவிடம் மட்டும் கண்ணியமாக நடந்து கொண்டதற்கு வேறொரு காரணமும் உண்டு. அவனது மனைவி!

பட பூஜைக்கு வந்திருந்தபோதே சிவப்ரியாவும், முத்துலட்சுமியும் மலர்ந்து போனார்கள். கைகளை பலமாகப் பிடித்துக் கொண்டே பல நிமிடங்கள் பேசுகையில் அவர்களுக்கிடையே உள்ள அன்பு வெளிப்பட்டது. "அம்மா வந்திருக்காங்களா சிவப்ரியா?"



"இல்ல முத்து. அவங்களுக்கு நான் சினிமாவில நடிக்கறதிலே இஷ்டமே கிடையாது. நான்தான்..." தொடராமல் நிறுத்திக் கொண்டாள். முத்துலட்சுமி மிகப்பொறுப்புடன் தன் கணவனை அழைத்தாள்.

"என்னங்க இவ என்னோட பெஸ்ட் ஃப்ரெண்ட். முதல் படம் வேறே. நீங்கதான் இவளை நல்லவிதமாக கவனிச்சுக்கணும். முக்கியமாக யாரும் இவகிட்டே வாலாட்டாம பாத்துக்க வேண்டியது உங்க பொறுப்பு."

'யாரும் என்பதில் நீங்களும் நிச்சயம் அடக்கம்' என்பதையும் அவள் சொல்லாமல் சொன்னது ஹீரோவுக்குப் புரிந்தது.

எப்படியோ தானாகவே அரண்கள் அமைந்துவிட்டன.

"தாங்க்ஸ்" என்ற வார்த்தை சிவப்ரியாவின் வாயிலிருந்து உதிர்ந்தது.

"அப்பாடா. இன்னிக்கு மழைதான் போங்க. ஆமாம், இந்த லண்டன் நம்ம மெட்ராஸை விடப் பெரிசு போலிருக்கே."

"சந்தேகமில்லாமல். உலகின் மிகப் பெரிய ஆறு நகரங்களிலே லண்டனும் ஒண்ணு."

"இங்கே மகாராணியின் அரண்மனையைத் தவிர என்ன பெரிசா இருக்குது? இதுக்கோசரமா இங்கே ஷூட்டிங் நடத்தறாங்க?"

"நிறைய இடங்கள் இருக்குது சிரிஷா. சுற்றுலாத் தலங்கள்தான் என்றில்லை. இசை மற்றும் மருத்துவ துறையில் ஆலயமாகவே கருதக் கூடிய தலங்கள் பல உண்டே லண்டனில்."

ஒரு டாக்டர் என்ற முறையில் அந்த நாட்டின் மருத்துவ உதவிகளை நினைக்க நினைக்க பிரமிப்பேற்பட்டது அவளுக்கு. அத்தனை பேருக்கும் இலவச மருத்துவம். முதியவர்களென்றால் மூக்குக் கண்ணாடியிலிருந்து பற்களை ஒழுங்கு படுத்திக் கொள்வது வரை எல்லாமே இலவசம். தேசிய பட்ஜெட்டில் சுமார் நாலுசதவீதம் மருத்துவத்துக்கென்றே ஒதுக்கப்படுகிறது!

மருத்துவர்களைப் பொருத்தவரை பிரிட்டன்தான் பூலோக சொர்க்கம் எனலாம். ஒவ்வொரு டாக்டருக்கும் அரசே ஒரு குறிப்பிட்ட தொகையை வழங்கும். ஒவ்வொரு நோயாளிக்கு இவ்வளவு தொகை என்று கணக்கிட்டு அளிக்கும். இரவில் சிகிச்சை செய்தால் அரசின் மானியம் மேலும் அதிகமாக இருக்கும்.

அடுத்த நாள் மதியம் படப்பிடிப்பில் அவளுக்கு வேலை இல்லை என்றிருந்தான் வேணு. அப்போது டாக்டர் மாகியை சந்திக்கலாம் என்று நினைத்தாள் சிவப்ரியா.

டாக்டர் மாகி எனப்படும் டாக்டர் மார்கரெட் அவளது தோழி. பேனாநட்பு. பி.பி.ஸியில் ஒளிபரப்பான அவளது மருத்துவப் பேச்சைக் கேட்டதிலிருந்து அவளது ரசிகையாகிவிட்டிருந்தாள் சிவப்ரியா. கடிதத் தொடர்பு கொண்டாள். சிவப்ரியாவின் மொழிவல்லமையும், மருத்துவ ஆர்வமும் மாகிக்குப் பெரிதும் பிடித்துப் போக கடிதப் போக்குவரத்து விடாமல் தொடர்ந்து கொண்டிருந்தது.

அடுத்த நாள் படப்பிடிப்பு திட்டமிட்டபடி நடந்தது. சிவப்ரியா லண்டன் வீதிகளில் ஓடி வந்தாள். பிரம்மாண்டமான மாதாகோவிலைப் பின்னணியாகக் கொண்டு சில வசனங்கள் பேசினாள். வேண்டுமென்றே வேணு சில ரீடேக்குகள் எடுத்தது வேறு விஷயம். 'என் நேரம், அது பொன் நேரம்' என்ற பாடலின் வரி ஒலிக்க, பிக்பென் கடிகாரத்தின் பின்னணியில் அவள் வாயசைத்தாள்.

பத்து நிமிட இடைவெளியில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோது "உங்களைப் பார்க்க ஒரு லோக்கல் லேடி வந்திருக்காங்க" என்றார்கள்.

டாக்டர் மாகி!

ஓடிச் சென்று கைகுலுக்கினாள். "நானே மதியம் உங்கள் வீட்டுக்கு வருவதாக இருந்தேனே" என்றாள்.

"அதற்கேற்ற நிலையில் என் வீடு இல்லை சிவா. நாளைக்கு ஒரு மருத்துவ செமினார் இருக்கு. அதற்கடுத்த நாள் அயர்லாந்தில் ஒரு அரசுக் கருத்தரங்கம். நான் அங்கிருந்து திரும்பி வருவதற்குள் நீ திரும்பிப் போயிடுவியே. அதனால்தான் நானே புறப்பட்டு வந்தேன்."

தொடர்ந்து சிறிது நேரம் இருவரும் மருத்துவத் துறை குறித்துப் பேசினர். பிறகுதான் திடீரென்று சிவப்ரியாவுக்கு அந்த முரண்பாடு உறைத்தது. கேட்டாள்.

"நான் வரும் நிலையில் உங்க வீடு இல்லேன்னு ஏன் சொன்னீங்க டாக்டர்?"

சில கணங்கள் தலையைக் குனிந்து கொண்டு மௌனமாக இருந்த மாகி "என் கணவர் முந்தாநாள் இறந்துவிட்டார் சிவா" என்றாள்.

(தொடரும்)



"ஏன் ஜெயில் சூப்பரின்டெண்ட் டென்ஷனா இருக்காரு?"

"ஒரு கைதி வந்து தண்டனை முடிஞ்சு போகும்போது பென்ஷன், பிராவிடண்ட் ஃபண்ட் எல்லாம் உண்டானு கேட்டானாம்."

– வந்தவாசி பா. ஜெயக்குமார்





# பாறையில் பூக்கள்!

திருச்சி அருகிலிருக்கும் திருவெறும்பூரில் உள்ள மலைக்கோயிலில் திரு எறும்பீஸ்வரர் உறைகிறார். பாடல் பெற்ற சிவஸ்தலம். 1752ல் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் இடையே நடைபெற்ற போரில் இந்த மலைக் கோயில் இராணுவ முகாமாக இருந்துள்ளது.

சுவாமி தரிசனத்திற்காக திருச்சி பெல் நிறுவனத்தில் கூடுதல் பொதுமேலாளர் ஹர்ஷா இங்கு வந்து செல்வது வழக்கம். இந்த மலைப் பாறைகளெங்கும் மலர்ச்செடிகளை வளர்த்தால் என்ன என்கிற எண்ணம் அவர் மனசுக்குள். அதுவும், சுவாமி பூஜைக்குப் பயன்படும் நந்தியாவட்டை, சரக்கொன்றை, செம்பருத்தி, அரளி, மந்தாரை போன்ற பூச்செடிகளையும் வில்வம், புங்கன், மகோகனி போன்ற மரங்களையும் வளர்க்க அவர் ஆசைப்படவே அவரது விருப்பத்துக்கு உதவியாளர்கள் அர்ஜுனன், சுந்தரராஜன் இருவரும் உரமிட்டனர்.

இந்த மலைக்கோயில் தொல்பொருள் ஆய்வுத் துறையின் நிர்வாகத்தின் கீழ் உள்ளது. இதனால் பெல் நிறுவனம், சம்பந்தப்பட்ட அலுவலக மேலிடத்துக்கு எழுதிக் கேட்டது. ஒப்புதல் கிடைத்ததும் நூற்றியிருபத்தைந்து படிகள் உயரம் கொண்ட மலைப் பாறையில் பெரிய சிமெண்ட் குழாய்களையிட்டு, அதனுள்ளே தேங்காய் நார், செம்மண், எரு போன்றவற்றை இரண்டரை அடி உயரத்திற்குப் போட்டு தினமும் தண்ணீர் இட்டு அழகான பூச்செடிகள் வளர்த்துள்ளனர்.

இப்போது மலை உச்சியில் எறும்பீஸ்வரர் மூலஸ்தான வெளிப் பிராகாரத்தில் ஆளுயரத்துக்கும் மேற்பட்ட மலர்ச்செடிகள் வண்ணமயமாக பூத்துக் குலுங்குகின்றன. மலைப் பாதையே ஜில்லென்ற பூக்காடாகக் காட்சியளிப்பதோடு, மலர்களின் நறுமணத்தால் உள்ளமும் கொள்ளை போகின்றது.

கட்டுரை, படங்கள்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# தலைக்குள் ஓர் அற்புதம்!












மாண்புமிகு மெமரி - 4

**வா**ன் நியூமேன் என்று ஒருவர் இருந்தார். இவருக்கு எட்டு வயதாக இருக்கும் போதே, ஒரு டெலிபோன் டைரக்டரியின் எல்லா பக்கங்களையும் ஒரே ஒருமுறை மட்டும் பார்த்துவிட்டு அப்படியே கடகடவென்று ஒப்பிப்பாராம்!

இது எப்படிச் சாத்தியம்?

அவர் தமது இரண்டு பக்க மூளை


திருவள்ளூர்
என்.சி.ஸ்ரீதரன்



''கட்சில உள்ள காலி இடத்துக்கு நீங்க ஏன் போட்டியிடல?''

''தலைவர் எனக்கு ரௌடித்தனம் போதாதுனுட்டார்!''

– அம்பை தேவா

---

யையும் உபயோகித்து, நினைவாற்றலை வளர்த்துக் கொண்ட காரணத்தால்!

இரண்டு பக்க மூளையா?

ஆம். நமது மூளையில், வலதுபுறம், இடதுபுறம் என்று இரண்டு பாகங்கள் உண்டு.

மூளையில் இடது பாகம் சில குறிப்பிட்ட வேலைகளைச் செய்கின்றது. அதே போல், வலது பாகம் சில குறிப்பிட்ட வேலைகளைச் செய்கின்றது.

இரண்டு பாகங்களும் என்னன்ன வேலைகளைச் செய்கின்றன என்று முதலில் பார்ப்போம்.

முதலில் இடது பாகம்.

- நாம் பேச ...
- நாம் பார்க்கும், படிக்கும், கேட்கும் பல விஷயங்களை அவை எந்த அளவுக்குச் சரியானவை என்று பகுத்து ஆராய ...
- சொற்களுக்குண்டான அர்த்தத்தைப் புரிந்து கொள்ள ...
- கணக்குகள் போட....
- நமது வலது பக்க உறுப்புகளை இயக்க... உதாரணமாக, நமது வலது கையை உயர்த்த நினைக்கிறோம் என்றால், அதற்கான கட்டளையைப் பிறப்பிப்பது இடது பக்க மூளைதான்.

வலது பக்க மூளை என்ன காரியங்களைச் செய்கின்றது தெரியுமா?

- ஒருவர் பெயர் நமது நினைவுக்கு வரும்பொழுது அவருடைய முகமும் நமது மனக்கண் மூலம் நமது கற்பனையில் வருகிறதென்றால், அதற்குக் காரணம் நமது வலது பக்க மூளை.
- ஒரு விஷயத்தை முழுமையாகப் பார்க்க, உதாரணமாக, ஒரு நிகழ்ச்சியைக் கொண்டு மட்டும் ஒருவரை எடை போடாமல், பல சூழ்நிலைகளையும் மனத்தில் கொண்டு ஒரு முடிவுக்கு வர நமது வலது பக்க மூளைதான் உதவுகிறது.
- நமது வீட்டிலோ அல்லது ஒரு புது இடத்திலோ நம்முடைய வழியைத் தவற விடாமல் நாம் போவதற்கு, அதாவது, இடம் மற்றும் பரப்பு சம்பந்தமான செயல்களில் வலது பக்க மூளைதான் துணை செய்கின்றது.
- பாடவோ, இசைக் கருவிகளை இசைக்கவோ, இசையை ரசிக்கவோ தேவையான திறமையை, ரசனையை வலது பக்க மூளைதான் தருகிறது.
- நமது கற்பனை சக்திக்குக் காரணமாக இருப்பதும், நமது கனவுகளைத் தூண்டுவதும் வலது பக்க மூளை.
- சிற்பிகளும் சித்திரம் வரைபவர்களும் இந்தப் பக்க மூளையின் வளர்ச்சி காரணமாகத்தான் சிறந்து விளங்குகிறார்கள். ஆக, கலையார்வம் என்பது வலது பக்க மூளையின் பிரதிபலிப்புதான்.
- கோபம், மகிழ்ச்சி, அன்பு, இரக்கம் போன்ற உணர்ச்சிகளைத் தூண்டுவது நமது வலதுபக்க மூளைதான்.
- நமக்குள் தெய்வ நம்பிக்கை ஏற்படுவதற்கு வலது பக்க மூளையின் இயக்கம்தான் காரணம்.
- நமது இடது பக்க உறுப்புக்களை இயக்குவது வலது பக்க மூளைதான்.

நம்மில் நூற்றுக்கு 95 சதவிகிதம் பேர் இடது பக்க மூளையை மட்டும்தான் பயன்படுத்துகிறார்கள். ஆனால் வலது பக்க மூளையையும் சேர்த்துப் பயன்படுத்தினால் தான் நம்முடைய நினைவாற்றல் பெருகும். ஒரு குறிப்பிட்ட செய்தியை நினைவில் கொள்ள வேண்டுமென்றால், அதைப் படித்துப் பார்த்தோ எழுதிப் பார்த்தோ நினைவில் கொள்ளலாம். இது இடது மூளையை மட்டும் உபயோகிப்பதாகும். ஆனால் ஒரு தகவலை நினைவில் வைக்க வலது பக்க மூளை தூண்டும் கற்பனை சக்தியை உபயோகித்தால், அந்தத் தகவலை நாம் மிகவும் சுலபமாக நினைவில் வைத்துக் கொண்டு தேவையானபோது நினைவிற்குக் கொண்டு வர முடியும். இதைத்தான் வான் நியூமேன் செய்தார்.

ஒரு தகவலை நமது மனத்தில் பசுமையாகப் பதிய வைக்க வேண்டுமென்றால், நமது மனத்தில் அந்தத் தகவலை ஒரு நிழல் பிம்பம் போல கற்பனை செய்து பார்க்க வேண்டும். இதைத்தான் 'விஷுவலைசேஷன்' என்பார்கள்.

இதை எப்படிச் செய்வது என்பதை அடுத்த வாரம் விரிவாகப் பார்ப்போம்.

# சர்க்கரை நோய்க்கு இனிப்பு மருத்துவம்!
# ...கல்கி 12.3.2000 இதழிலிருந்து

இருபது வகையான சர்க்கரை வியாதிகள் உண்டு. நாங்கள் அனைத்து வகைக்கும் பொருத்தமான சிகிச்சை அளிக்கிறோம். சாதாரணமான சர்க்கரை நோயாளிகளை அதிகபட்சம் ஆறு மாதங்களுக்குள்ளும், தீவிர நோயாளிகளை ஓர் ஆண்டுக்குள்ளும் குணப்படுத்த முடியும். எங்கள் லேகியம் பச்சைக் காய்கள் மற்றும் பழங்கள் சேர்த்துத் தயாரிக்கும் இனிப்பான லேகியம்!

இந்த இயற்கை லேகியத்தை, அலோபதி மருந்து சாப்பிடுகிறவர்களாக இருந்தாலும் சாப்பிடலாம். லேகியம் சாப்பிடத் தொடங்கிய இரண்டு மூன்று நாட்களிலேயே, சிறுநீர்ப் போக்கில் மாற்றம், களைப்புக் குறைவு, பசி போன்ற வித்தியாசங்களை உணர முடியும்.

இந்த இயற்கை மருத்துவ முறையில் பக்கவிளைவு ஏதும் இல்லை.

In November 1999 during a routine health check up I had found that my P.P. Blood Sugar was high (220 mgs%)

Luckily in March 2000 I happened to read an article about a Diabetic Treatment with Neela Raw Vegetable food (NATUROPATHY) in "KALKI" magazine. Also I read about Dr. Rajkumar who is treating diabetic patients with the above treatment

I immediately started his treatment without any allopathic medicines. In eight days my blood sugar had come down to almost normal range and all my health conditions improved. Except for some restrictions on some food items he had permitted me to take full stomach rice, wheat etc.

Within six months of treatment I am totally free from Diabetic and all other complications of diabetic. My P.P. Blood Sugar level has never gone above 120 mgs%. The treatment was totally free from any side effects or reactions and it is only a mixture of raw vegetable,s roots and fruits.

After six months of treatment doctor advised me to stop the Neela Food. Then without any treatment and normal intake of food I had a check up after one month it showed P.P. Blood Sugar level as only 93 mgs%, Even the HbA1C was only 2.8% which is below normal.

Now I am totally free from Diabetic, as well as any treatment for diabetic and I am living like a normal person and eat all kinds of food and am physically very healthy.

**Mr. A. Vinayagamurthy,**
**No.1, Nethaji Street, Adambakkam,**
**Chennai - 600 088.Phone : 245 61 06.**

- ❑ Purely Naturopathy (No drugs, No chemicals, No Metals, No side effects).
- ❑ Early Diabetic who have not started on any allopathic medicine can get complete cure within 6 months.
- ❑ Those who are already on insulin or tablet can gradually reduce the intake of insulin & tablet.
- ❑ Blood sugar can be kept very much under control. All symptoms related to diabetic will disappear fast.
- ❑ All internal/external wounds heals faster.
- ❑ Plenty of rice can be consumed, all non-veg food allowed.

**For Appointments Contact :**

# LEO DIABETIC CARE CENTRE

G-2, P.A. Towers, 869, P.H. Road, (Near Sangam Theatre),
Chennai - 10. Phone : 642 3233, 620 3435 Cell : 98410-18904
Open from 8 a.m. to 12 noon / 4 p.m. to 7 p.m. **SUNDAY HOLIDAY**

‘எங்க அப்பா வாங்கித் தந்த குதிர! அதுல நானும் போகப் போறேன் மதுர!’ என்று ஐந்து வயது குழந்தை நட்சத்திரமாகப் பாட்டுப்பாடி, ஆட்டம் ஆடி தமிழ் ரசிகர்களை வசீகரித்த அதே சிலம்பரசன். இப்போது தோற்றத்தைப் போலவே, “சொன்னால்தான் காதலா?” என்று பாடல் வரிகளும் மாறியிருக்கின்றன. இந்தப் பாடலை ஒரு தொழில்முறைப் பாடகரைப் போல நெளிவு சுளிவுகளோடு பாடி, எக்ஸ்பிரஸ் வேகத்தில் ஆடி, இளம் ஹீரோக்களின் வயிற்றைக் கலக்கியிருக்கும் சிலம்பரசன் நம்மிடம் சிக்கிக் கொண்டார்.

# “சிம்பேரு படையப்பா”



***அப்பா ஆல்ரவுண்டர் என்பதால் நீங்களும் பாட ஆரம்பிச்சுட்டீங்களா? இல்லை, பாட வெச்சுட்டாரா?***

உண்மையச் சொல்லணும்னா சின்ன வயசுலேருந்து எனக்கு மியூசிக்குன்னா ரொம்ப உயிர். அதுக்குக் காரணம், அப்பாதான். நான் சின்ன பையனா இருக்கும்போது, அதிகாலை ஐந்து மணிக்கு நல்ல தூக்கத்துல என்னை அடிச்சு, எழுப்பி உட்கார வெச்சு ‘தம்பி... தம்பி... ஒரு டியூன் போட்டுருக்கேன். கேட்டுட்டு எப்படியிருக்குன்னு சொல்லுடா’ன்னு மியூசிக்கோட பாட ஆரம்பிச்சுடுவாரு. எனக்குக் கோபம் கோபமா வரும். அவ்வளவு கோபத்திலேயும், அவரோட டியூன் ஏதோ ஒரு வகையில என்னை ஈர்க்கும். ‘போய் மரியாதையா தூங்குறீங்களா இல்லையா’ன்னு கத்துவேன். அவ்வளவு திட்டையும் வாங்கிக்கிட்டுப் போய்... அரை மணி நேரம் கழிச்சு திரும்ப வருவார்.

அவருக்கு அப்போ வீட்லே நான் மட்டும்தான் ஃபீட் பேக். அதனால

## சிலம்பரசன் சொல்கிறார்

குளிக்கும்போது, சாப்பிடும்போது பாடிக்கிட்டே இருக்கிற மாதிரி, வாழ்க்கையே ரிதமிக்கா மாறிப் போச்சு... அப்புறம் அப்பாகூட ட்யூன் கம்போசிங்... ரெக்கார்டிங்னு போக ஆரம்பிச்சேன்... அப்போ ஏ.ஆர். ரகுமான், அப்பாவுக்குக் கீ போர்டு வாசிப்பார். அவர் மடியிலே போயி உட்கார்ந்துகிட்டு, கீ போர்டுடன் விளையாடுவேன். 'டேய் வாலு, இப்படி பிரல் பண்ணனும்'னு சொல்லிக் கொடுப்பார். இப்படித்தான் கீ போர்டு கத்துக்கிட்டேன். அப்புறம் டெமோ டிராக்கில் பாடுவேன். இப்படி நிறைய பாடியிருக்கேன். இதனாலத்தான் வாய்ஸ் மெச்சூரிட்டி ஆகியிருக்குன்னு நினைக்கிறேன். கிளாசிக்கலோ வேறு எந்த இசையோ யாருகிட்டேயும் கத்துக்கலை. பழக்கத்துலத்தான் இந்த அளவுக்குப் பாட முடிஞ்சிருக்கு. இதுக்கு காரணமே அப்பா... அப்புறம் கடவுள்..."

**இசை, நடனம், நடிப்பு மட்டும்தான் தெரியுமா? இல்லே, அப்பா மாதிரி ஆறேழு துறையிலே மந்தவங்களுக்கு வேலை இல்லாமல் செய்யப் போறீங்களா?**

"திறமையிருக்கிற யாரையுமே கலையுலகம் கைவிட்டது கிடையாது. அறிமுகம் கிடைக்கிற வரைக்கும் கொஞ்சம் போராடித்தான் ஆகணும்.




முதல் தலைமுறையா அப்பா இந்தத் துறைக்கு வந்து கஷ்டப்பட்டு ஜெயிச்சார். அதனால் அவரோட வெற்றி நிரந்தர வெற்றியா இருக்கு. எனக்கு அறிமுகத்துக்குக் கஷ்டம் இல்லேன்னாலும், திறமை இருந்தாத்தான் ஏத்துக்குவாங்க. இல்லேன்னா 'போயி வேற வேலை இருந்தா பாரு தம்பி'னு கூலா விட்டுக்கு அனுப்பிடுவாங்க. அதனால முதல் தலைமுறையை விட இரண்டாவது தலைமுறைக்குத்தான் பொறுப்பும்

போராட்டமும் அதிகம்னு நினைக்கிறேன்.

நல்லா வரைவேன், கிரிகெட் விளையாடுவேன், டிரம்ஸ் வாசிப்பேன், மேடையிலே பேசி அசத்துவேன். இதுமாதிரி பல திறமைகளை வளர்த்துகிட்டேன். ஆனா அதுக்குப் பின்னாலே நான் நிறைய அவமானப் பட்டிருக்கேன். ஆறாம் வகுப்புலேருந்து பத்தாம் வகுப்பு வரைக்கும் எல்லா கலை விழாப் போட்டிகளிலும் மண்ணைக் கவ்வியிருக்கேன். அந்த நாலு வருஷத் தோல்விகள் கத்துக் கொடுத்த பாடம்தான் என்னை ப்ளஸ்டூவில் நம்பர் ஒன் மாணவன் ஆக்கியது. நிறைய திறமையை வளர்த்துக்கலாம். ஆனா நாம போய்ச் சேர்ற இடம் எதுவோ, அதுக்கு அந்தத் திறமையெல்லாம் பயன்படணும் அவ்வளவுதான். என்னோட இடம் நடிப்பு. சிலம்பு ஒரு நல்ல நடிகன்னு சொல்லணும். அவ்வளவுதான். இயக்கத்தைப் பற்றியெல்லாம் நான் நினைச்சே பார்க்கலை"

**'சொன்னால்தான் காதலா' படத்துல ரஜினி மாதிரியெல்லாம் மேனரிசம் காட்டுறீங்களே. என்ன மாதிரி நடிகரா வரணும்னு விரும்புறீங்க?**

ரஜினி ஒரு லெவல். தனிச்சுத் தெரியறவர். அதுக்குக் காரணம் அவரோட ஸ்டைல். ஆனா நிஜ வாழ்க்கையிலே, அவர் ரொம்ப சாப்ட்.

அவரோட பாதிப்பு இந்தத் தலைமுறை கலைஞர்கள்கிட்டே கொஞ்சம் இருக்கத்தான் செய்யும். அதுக்காக அவரோட ஸ்டைலை அப்படியே ஃபாலோ பண்ணினா ரசிகர்கள் காணாமல் அடிச்சுடுவாங்க. நான் இயல்பாவே முரட்டு கேரக்டர். என்னோட பாடி லாங்குவேஜ் சின்ன வயசுலேர்ந்தே ரொம்ப வேகம். துருதுருன்னு வால்தனம் பண்ணுவேன். அதோட பிரதிபலிப்புதான். நான் ரஜினி ஸ்டைல் பண்ற மாதிரி தெரியுது. இதனால ஸ்கூல்லே கூட என்னை எல்லோரும் படையப்பான்னுதான் கூப்பிடுவாங்க. சத்தியமா நான், என்னைத் தான் பிரதிபலிக்கிறேன். நான் ஒரு சாப்ட் ஹீரோன்னு பேரு வாங்க மாட்டேன். இது எனக்கே தெரியுது.

**ரஜினி ஸ்டைல் இல்லேன்னா எதுக்கு தலையிலே இவ்ளோ முடி, தாடி?**

முதன் முதல்லே 'காதல் அழிவதில்லை' படத்தில் கதாநாயகனா அறிமுகம் ஆறேன். அதுக்காகத்தான் கொஞ்சம் முடி வளர்க்கிறேன். நிச்சயமா என்னை ரசிகர்கள் ஏத்துக்குவாங்க. அது மாதிரி ஒரு அறிவியல் காதல் கதை அது.

**பள்ளிக் கூடத்துல ஆங்கிலத்தில் பேச மாட்டேன்னு தகராறு செஞ்சீங்களாமே?**

ஆமா... வகுப்புல தமிழ் பேசக் கூடாதுன்னு சொன்னாங்க. தமிழ் நாட்டுல, ஒரு தமிழனா பொறந்துட்டு, தமிழ்லே பேசக் கூடாதுன்னு சொன்னா எப்படி? பாடம் சம்பந்தமா கேள்வி கேட்கும்போது ஆங்கிலத்துலதான் பதில் சொல்றேன். ஆனால் பள்ளி வளாகத்தை விட்டு வெளியே போற வரைக்கும் ஆங்கிலம்தான் பேசணும்னு சொன்னாங்க. 'டி.சி. கொடுத்தாலும் பரவாயில்லை, தேவையில்லாம பேச முடியாது'ன்னு சொல்லிட்டேன்.

ஒரு வெளி மாநிலத்துக்காரன், இல்லை தமிழ் தெரியாதவங்ககிட்டே ஆங்கிலத்துல பேசினா அது ஓகே. தமிழ் தெரிஞ்சவங்ககிட்டே ஆங்கிலத்துலே பேசினா என்னை மனநிலை சரியில்லாதவன்னு நினைக்க மாட்டாங்களா? மத்தவங்களுக்காக எனக்குள்ளே இருக்கிற யதார்த்தத்தை எப்படிக் கொல்றது... இப்போ தள்ளுவண்டியிலேதான் நான் ஃபிரெண்ட்ஸ் கூட சாப்பிடுவேன். ஸ்டார் ஹோட்டல் அலர்ஜி. தியேட்டர்லே போயி இருபத்தஞ்சு ரூபா டிக்கெட்லே ரசிகர்கள் மத்தியிலேதான் உட்கார்ந்து படம் பார்ப்பேன். நான் சொந்த வாழ்க்கையிலே ஒரு சாதாரண மனுஷனாக இருக்க விரும்புறேன். நடிப்பு சினிமாவுல மட்டும்தான். வாழ்க்கையிலே எதுக்கு?"

இனிமே படிப்புக்கெல்லாம் 'டாட்டா'

"குளிர்பான விளம்பரத்தில் எல்லாம் நடிக்காதீங்கன்னு சொன்னா கேட்டீங்களா?"

"ஏன், என்னாச்சு?"

"உங்க லேட்டஸ்ட் படம் டப்பா ஆனதுக்கு, அவர் 'ஊத்தி'க் கிட்டாராமேன்னு எல்லாரும் துக்கம் விசாரிக்கிறாங்க!"

- என். தாமோதரன்



தானா?

"நிச்சயமா இல்லே. நிறைய படிக்கணும்கிற தாகமும் இருக்கு. அதுக்கு சினிமா தடையா இருக்காது. இங்கே இருந்துகிட்டு கலிபோர்னியா யுனிவர்சிட்டியிலே நெட் மூலமா படிக்கலாம். வாய்ப்பு அதிகமா யிடுச்சு. அதைப் பயன் படுத்திக்கணும். இப்போதைக்கு ஸ்கூல் ஆஃப் சவுண்ட் எஞ்சினியரிங்லே டிப்ளமா இன் ஆடியோ எஞ்ஜினியரிங் படிக்கிறேன்.

அப்பாவோட தேர்தல் தோல்வி பாதிச்சதா?

ரொம்பவே! நாங்க யாருமே எதிர்பார்க்கல. ஆனா அப்பா இந்தத் தோல்வியை சகஜமா எடுத்துகிட்டது ஆச்சர்யமா இருந்தது. அவர்கிட்டேருந்து மட்டுமில்லே அவர் தோல்விகள்லேருந்துகூட நான் நிறைய கத்துக்கறேன்.

சந்திப்பு : **விஷ்ணுவல்தாசன்**

படங்கள் : **ராஜன்**

"நம்ம டாக்டர் காலையில் இருந்து பயங்கர கடுப்பில் இருக்காரே! ஏன்?"

"நம்ம ஆஸ்பிடல் வாசலில் 'ஒன்-வே' சிம்பல் போர்டை இன்னிக்கு நட்டாங்களே! அதனாலதான்!!"

- என். தாமோதரன்



# திடீர்ப் பரிசுப் போட்டி 6 முடிவு

## ஐஸ்ஸ்ஸ்ஸ்ஸ்!

டீன்-ஏஜ் ஹீரோக்களின் மனம் குளிர்ந்து போகும்படி, உங்களுக்கு அவர்களிடம் ரொம்பப் பிடித்த விஷயத்தை 'நச்'சென்று நாலே வரிகளில் எழுதி அனுப்பக் கேட்டிருந்தோம்.

இளைஞர்களின் ரத்த தான விழிப்புணர்வைப் பாராட்டி வெண்பாவில் வெனிலா ஐஸ் வைத்துப் புகழ்ந்திருக்கும்

**கே.பி. பத்மநாபன்,**
**6. இந்திரா நகர்,**
**சிங்காநல்லூர், கோவை – 641 005.**

**ரூ. 100** பரிசு பெறுகிறார்!

**பிடியுங்கள் பாராட்டை, மிஸ்டர் பத்மநாபன்!**



> அடிபட்டோர் மற்றும் அறுவைசிகிச்சைக்கும்
> கடிதில்நல் ரத்தம்தான் வேண்டும்; –
> பிடியென்று
> நல் ரத்ததானத்தின் வேகத்தில் முந்துவர்
> கல்லூரி ஹீரோக்கள் தான்!

# பொன்னியின் செல்வன்



எண்பத்து இரண்டாம் அத்தியாயம்

## சீனத்து வர்த்தகர்கள்

ஆதிகாலத்திலிருந்து பற்பல தேசங்களிலும் மக்கள் வருங்கால நிகழ்ச்சிகளைப் பற்றி அறிவதற்குப் பிரயத்தனங்கள் செய்து வந்திருக்கிறார்கள். ஏழை எளியவர்களையும் படிப்பில்லாத பாமர மக்களையும் போலவே அரச குலத்தவர்களும் புலமை மிக்க அறிவாளிகளும் எதிர்காலத்தை ஊடுருவிப் பார்க்க முயன்றிருக்கிறார்கள். சோதிட சாஸ்திரிகள், ஆரூடக்காரர்கள், நிமித்தங் கூறுவோர், குறி சொல்லுவோர், ரேகை பார்ப்போர் முதலியவர்கள் கல்வியறிவிலும் நாகரிகத்திலும் சிறந்த சமூகங்களிலும் பல்கிப் பெருகியிருந்திருக்கிறார்கள். அதைப் போலவே, சோதிட சாஸ்திரத்தின் உண்மையைப் பற்றி சந்தேகித்து அந்தக் கலையையே கண்டனம் செய்தவர்களும் இருந்து வந்திருக்கிறார்கள்.

**அமரர் கல்கி**

அறிவிற் சிறந்த மங்கையர் திலகமான இளையபிராட்டி குந்தவையின் உள்ளத்திலும் இத்தகைய போராட்டம் அடிக்கடி எழுந்துகொண்டிருந்தது. ஆயினும் சோழ சாம்ராஜ்யத்தின் வருங்காலத்தைப் பற்றிக் கவலைப்பட நேர்ந்தபோதெல்லாம், அந்தக் கவலை குந்தவை தேவியைச் சோதிடர் வீட்டைத் தேடிப் போகும்படி செய்தது.

நியாயமாகப் பார்க்கப் போனால், இப்போது குந்தவையின் உள்ளம் சுந்தர சோழ சக்கரவர்த்தி பெற்றிருந்த மன அமைதியைப் பெற்றிருக்க வேண்டும். எதிர்பாராத நிகழ்ச்சிகள் என்னென்

னவோ நேர்ந்து, அருள்மொழிவர்மர் சோழ சிங்காதனம் ஏறி முடி சூட்டிக் கொள்வது நிச்சயமாகிவிட்டது. பிள்ளைப் பிராயத்திலிருந்து குந்தவை தன் இளைய சகோதரனிடம் கொண்டிருந்த எல்லையில்லா வாஞ்சையை நாம் அறிந்திருக்கிறோம். கரங்களில் சங்கு சக்கர ரேகைகளுடன் பிறந்த அருள்மொழிவர்மனால் சோழப் பேரரசு மகோந்நதத்தை அடையப் போகிறது என்று அவள் உள்ளத்தில் பலமான நம்பிக்கை குடி கொண்டிருந்தது. காவேரி வெள்ளத்தில் தவறி விழுந்தவனை, தெய்வமே போன்று வந்த பெண் மணி ஒருத்தி எடுத்துக் காப்பாற்றிய நிகழ்ச்சியும் இன்னும் இதுபோன்ற வேறு பல சம்பவங்களும் அவளுடைய நம்பிக்கையை மேலும் மேலும் வலுவடையச் செய்து வந்தன. அந்த நம்பிக்கை மெய்யாகும் காலம் இப்போது நெருங்கி வந்திருந்தது. ஆனாலும் அந்த அரசிளங்குமாரியின் உள்ளத்தில் இன்னமும் அமைதி ஏற்படாமற் போன காரணம் என்ன?

அருள்மொழிவர்மனைப் பற்றிக் கூறியது போலவே கொடும்பாளூர் இளவரசி வானதியின் ஜாதக விசேஷத்தைப் பற்றியும் பலர் கூறி வந்தார்கள். உண்மையாக நாளையும் கோளையும் ஆராய்ந்து வருங்காலத்தை உணர்ந்துதான் கூறினார்களோ, அல்லது அச்சமயம் குந்தவை தேவிக்கு உவப்பாக இருக்கட்டும் என்றுதான் சொன்னார்களோ, தெரியாது. ஒருமுகமாகப் பலர் சேர்ந்து கூறும் வாக்கு சில சமயம் அதிசயமாக உண்மையாகி விடுவதைப் பார்க்கிறோம். இன்னும் சிலருடைய வாக்கிலேயே ஏதோ விசேஷம் இருக்கிறது. அவர்கள் சொன்னது சொன்னபடி பலித்து விடுகிறது.

குடந்தையிலிருந்து திருவையாற்றுக்கு வந்து குடியேறிய சோதிடர், அன்றைக்கு மார்கழி மாதத் திருவாதிரை நாள் என்பதை நினைவு கூர்ந்து, "சோழ குலத்துக்கு மிக்க சிறப்பை அளிக்கப் போகும் நன்னாள் அது!" என்று சற்று அழுத்தமாகக் கூறி வைத்தார்.

இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அதே மார்கழித் திருவாதிரையில் சோழர் குலத்தில் ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அந்தக் குழந்தை வளர்ந்து உரிய பிராயம் அடைந்தபோது, சந்திரகுப்தன், அசோகன், விக்ரமாதித்தன், ஹர்ஷ வர்த்தனன் ஆகியவர்களுடன் ஒப்பிடக்கூடிய சக்கரவர்த்தியாகி விளங்கினான். இராஜேந்திரன் என்ற அபிஷேகப் பெயர் பெற்று இலங்கை முதல் கங்கை வரையில், லட்சத்தீவு முதல் ஸ்ரீ விஜயத் தீவு வரையில் வெற்றி கொண்டு ஆணை செலுத்தினான்.

ஜோசியர் கூறிய வார்த்தை இவ்விதம் அதிசயமான முறையில் பின்னால் பலித்து விட்டது. ஆனால் அன்றைக்கு அவர் அவ்விதம் கூறியபோது குந்தவைக்கு அதில் பூரண நம்பிக்கை ஏற்படவில்லை. வானதிக்கோ சோதிடரின் வார்த்தைகள் கோபத்தையே உண்டாக்கின. அந்தக் கோபத்தை உடனே காட்டுவதற்கு ஒரு வழியும் ஏற்பட்டது.

சோதிடச் சுவடியைத் தூக்கி அந்தப் பெண்ணரசி பூனையின் மேல் எறிந்து விட்டு, "சோதிட சாஸ்திரத்துக்கும் உபயோகம் உண்டு!" என்று கூறினாள்.

அதைக் கேட்ட சோதிடர் திரும்பிப் பார்த்து விஷயம் இன்னதென்பதைத் தெரிந்துகொண்டு, "இளவரசி! வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பார்கள். அது போல் தங்கள் திருக்கரம் பட்ட மகிமையினால் இந்த ஓலைச் சுவடியும் ஓர் உயிரைக் காப்பாற்றியது. வருங்காலத்தில் எத்தனை எத்தனையோ உயிர்களுக்கு அபயம் அளித்துக் காப்பாற்றப் போகும் மலர்க்கரம் அல்லவா?" என்றார்.

வானதி "அக்கா! இந்தச் சோதிடர் முகஸ்துதி கூறுவதில் மிகவும் கெட்டிக்காரர். வாருங்கள், போகலாம்!" என்றாள்.

"தேவி! இன்றைக்கு நான் சொல்லும் வார்த்தைகள் தங்களுக்குப் பிடிக்கவில்லை. ஒரு காலத்தில் நான் கூறியவையெல்லாம் உண்மையாகியே தீரும். அப்போது இந்த ஏழையை மறந்து விடாதீர்கள்!" என்றார் சோதிடர்.

குந்தவைப்பிராட்டி குறுக்கிட்டு, "ஐயா! இந்தப் பெண்ணுக்குத் தங்கள் வார்த்தைகள் பிடிக்காமலில்லை. கேட்கக் கேட்க இவள் மனத்திற்குள் சந்தோஷமாக இருக்கிறது. ஆனால் 'யோசனையில்

லாமல் ஏதோ ஒரு சபதம் செய்து விட்டோமே' என்று ஆத்திரப்படுகிறான்! அந்த ஆத்திரத்தைத் தங்கள் ஒலைச் சுவடியின் பேரில் காட்டினான்! அதைத் தாங்கள் பொருட்படுத்த வேண்டாம்!'' என்று கூறினான்.

''நல்லவர்களுக்கு வரும் ஆத்திரமும் நல்ல பயனையே அளிக்கும்! தங்களை இனிய மொழியால் அழைத்த என் அருமைக் கிளி பிழைத்தது அல்லவா?'' என்றார் சோதிடர்.



பின்னர் குந்தவை சோதிடரிடம் இன்னும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தாள். முக்கியமாக அருள்மொழிவர்மருக்குத் திருமணம் எப்போது நடக்கும் என்று கேட்டாள்.

அதைப் பற்றி இளையபிராட்டி குந்தவைக்குக் கவலை ஏற்படக் காரணம் இருந்தது.

ஏனெனில், நேற்றைய தினம் சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி இளைய பிராட்டியிடம் வந்து, "தாயே! நான் கொடும்பாளூர் போகிறேன். என் சகோதரன் மகள் வானதியையும் அழைத்துச் செல்லலாம் அல்லவா?" என்று கேட்டார்.

குந்தவை திடுக்கிட்டு, "மாமா! இது என்ன அவசரம்? பட்டாபிஷேகத்துக்கு இல்லாமலா போகிறீர்கள்?" என்றாள்.

"தாயே! பட்டாபிஷேகத்தின்போது வந்து விடுவேன். அதுவரையில் இங்கு ஏன் காத்திருக்க வேண்டும்? நான் வரும்போது பெரும் சைன்யத்தோடு வந்தேன். தெய்வதீனமாக, நம்முடைய மனோரதம் சண்டை ஒன்றுமில்லாமலே நிறைவேறுவதாகி விட்டது. சக்கரவர்த்தித் திருமகன் முடிசூட இணங்கிவிட்டார். அதை எல்லாச் சிற்றரசர்களும் ஒப்புக்கொண்டு விட்டார்கள். இனி இவ்வளவு பெரிய சைன்யத்தை இங்கு வைத்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. இவ்வளவு பேருக்கும் உணவு அளித்து நிர்வகிப்பதும் தஞ்சை நகரத்தாருக்குச் சிரமமாக இருந்து வருகிறது. ஆகையினால் என் சைன்யத்தை அழைத்துப் போய் அங்கங்கே பிரித்து விட்டு விட்டு வர வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது!" என்றார் சேநாதிபதி.

"அப்படியே செய்யுங்கள்! ஆனால் என் தோழி வானதியை எதற்காக அழைத்துப் போக வேண்டும்?" என்று கேட்டாள்.

"தேவி! அதற்கும் ஒரு காரணம் இருக்கிறது. நேற்று சிற்றரசர்களாகிய நாங்கள் எல்லாரும் கூடி யோசித்து ஒரு முடிவுக்கு வந்தோம். தங்கள் பாட்டனார் அரிஞ்சய தேவரின் தந்தையாகிய பராந்தக சக்கரவர்த்தி பெண்ணரசிகள் அறுவரை மணந்திருந்தார். 'என்னுடைய குலத்திலிருந்தும், மிலாடுடையார் குலத்திலிருந்தும், பழுவேட்டரையர், மழவரையர், சம்புவரையர் குலங்களிலிருந்தும் ஒவ்வொரு பெண்ணை மணந்து கொண்டிருந்தார். ஆகையால் அவருடைய காலத்தில் சிற்றரசர்களிடையில் பூசல் ஏதும் இல்லாமலிருந்தது. தங்களுடைய பாட்டனார் அரிஞ்சயரும் அவ்வாறே பல சிற்றரசர் குலப் பெண்களை மணந்துகொண்டார். அவர் வெற்றி கொண்ட வைதும்பராயர் குலத்திலிருந்து தங்கள் பாட்டியாரை மணந்து கொண்டார். ஆனால் தங்கள் தந்தை இந்த நல்ல வழக்கத்தை அனுசரிக்கவில்லை. தங்கள் அன்னையாகிய மலையமான் மகளாரை மட்டும் மணந்தார். அதனால் சிற்றரசர்களுக்குள்ளே பொறாமையும் பூசலும் விளைந்தன. இனி, இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொள்கிறவர்கள் பராந்தக சக்கரவர்த்தியையும் அரிஞ்சய தேவரையும் போல் பல சிற்றரசர் குலங்களிலிருந்தும் பெண் கொள்ள வேண்டும் என்று நேற்றைக்கு ஏக மனதாக முடிவு செய்திருக்கிறோம். பொன்னியின் செல்வரின் முடிசூட்டு விழா நடந்த பிற்பாடு அவரிடம் இவ்வாறு விண்ணப்பம் செய்து கொள்ள எண்ணியிருக்கிறோம். வானதியை ஏன் ஊருக்கு அழைத்துச் செல்ல விரும்புகிறேன் என்று தாங்கள் ஊகித்துக் கொள்ளலாமே? அவளை இங்கே விட்டிருந்தால் நான் உடன்படிக்கைக்கு விரோதமாக நடக்கப் பார்க்கிறேன் என்று மற்றவர்கள் சந்தேகிக்கக் கூடும்!" என்றார் கொடும்பாளூர் வேளார்.

இதைக் கேட்ட குந்தவைக்கு உள்ளத்தில் பெரிதும் ஆத்திரம் உண்டாயிற்று. அதை அவள் வெளிக்காட்டிக் கொள்ளாமல், "சேநாதிபதி! அன்னை தந்தையை இழந்த தங்கள் தம்பி மகளுக்கு நானே தந்தையும் தாயுமாயிருக்க வேண்டும் என்று முன்னொரு சமயம் கேட்டுக் கொண்டீர்கள். அதை மறந்து விட்டீர்களா? வானதியைக் கொடும்பாளூருக்கு அனுப்ப முடியாது. அவளை விட்டுக் கண நேரமும் என்னால் பிரிந்திருக்க இயலாது. நான் வேண்டுமானால் வானதியையும் அழைத்துக்கொண்டு பழையாறைக்குப் போய் விடுகிறேன். முடிசூட்டு விழாவுக்குக் கூட வராமல் அங்கேயே இருந்து விடுகிறோம். கல்யாணத்தைப் பற்றிய பேச்சே இப்போது வேண்டாம். பட்டாபிஷேகம் ஆன பிறகு சிற்றரசர்களின் விருப்பத்தைப் பொன்னியின் செல்வரிடம் சொல்லுங்கள்! பிற்பாடு

பார்த்துக் கொள்ளலாம்!" என்றான்.

சேநாதிபதியும் அதை ஒப்புக்கொண்டு போய்விட்டார்.

குந்தவை தேவி சோதிடரைத் தேடிக் கொண்டு வருவதற்கு இது ஓர் அதிகப்படியான காரணம் ஆயிற்று. ஆகையினாலேயே பொன்னியின் செல்வரின் திருமணத்தைக் குறித்து அவ்வளவு கவலையுடன் சோதிடரிடம் கேட்டாள்.

அதேசமயத்தில் வானதியின் நினைவு பழையதொரு சம்பவத்துக்குப் போயிருந்தது. அதிலும் ஒரு பறவையும் பூனையும் பாத்திரங்களாயிருந்தன. பூனையுடன் ஒரு யானையும் யானைப் பாகனும் அதில் சம்பந்தப்பட்டிருந்தார்கள்.

மரக் கிளையிலிருந்து தொங்கிய ஒரு பறவையின் கூட்டை அந்தக் காட்டுப் பூனை தாக்கி அதிலிருந்து பறவைக் குஞ்சுகளைக் கபளீகரம் செய்ய முயன்றது. தாய்ப் பறவை கூட்டைச் சுற்றி வந்து பூனையைத் தடுக்கப் பார்த்தது. வானதி அதைக் கண்டு செய்வதறியாது அலறினாள். நதியில் நீந்திக் கொண்டிருந்த இளைஞன் ஒருவன் ஓடி வந்து பார்த்தான். பிறகு அவன் விரைந்து சென்று ஒரு யானையின் மீது ஏறி வந்தான். பறவைக் கூண்டையும் அதிலிருந்த பச்சிளம் குஞ்சுகளையும் அந்தக் காட்டுப் பூனையின் வாயிலிருந்து காப்பாற்றினான்.

அந்த இளைஞன் யானைப்பாகன் என்று வானதி அப்போது கருதினாள். பின்னால் அவன்தான் பொன்னியின் செல்வன் என்று தெரிந்தது. ஆகா! அவன் வெறும் யானைப் பாகனாகவே இருந்திருக்கக் கூடாதா? அவன் சுந்தரசோழச் சக்கரவர்த்தியின் திருமகனாக இருப்பதால் அல்லவா தான் இத்தகைய தொல்லைகளுக்கு ஆளாக நேர்ந்தது? தன்னையொத்த தோழிமார்களும், பூங்குழலி போன்றவர்களும், சோழ நாட்டுப் பட்டத்தரசியாக விரும்பும் கள்ள நோக்கமுடையவள் என்று தன்னைப் பற்றி அவதூறு கூறும்படி நேர்ந்தது...!

வானதி இத்தகைய நினைவுகளிலும் குந்தவை வருங்காலத்தைப் பற்றிச் சோதிடம் கேட்பதிலும் ஈடுபட்டிருந்த சமயத்தில் சோதிடரின் வீட்டு வாசலில் "சீனத்துப் பட்டு வேண்டுமா? சீனத்துப் பட்டு!" என்ற பெருங் குரல் ஒன்று கேட்டது. வேறு குரல்களும் கேட்டன.

குந்தவையும் வானதியும் தாங்கள் வந்து நேரமாகிவிட்டது என்பதை உணர்ந்து எழுந்தார்கள்.

அப்போது சோதிடரின் சீடன் உள்ளே வந்து, "சுவாமி! சீனத்து வர்த்தகர்கள் இருவர் வந்திருக்கிறார்கள். தங்களிடம் சோதிடம் கேட்க வேண்டுமாம்! அவர்களை நாளைக்கு வரும்படி சொல்லட்டுமா?" என்று கேட்டான்.

குந்தவை, "வேண்டாம்! இப்பொழுதே வரட்டும். நாங்கள்

விடைபெற்றுக் கொள்கிறோம்" என்று சொல்லிவிட்டு வானதியின் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு புறப்பட்டாள்.

இளவரசிகள் இருவரும் வாசலில் வந்தபோது, அங்கே ஒரு யானை நிற்பதையும் அதன் பேரில் இரண்டு சீன வர்த்தகர்கள் பெரிய துணி மூட்டைகளுடன் உட்கார்ந்திருப்பதையும் பார்த்தார்கள். கீழே நின்ற யானைப்பாகனிடம் அந்தச் சீனத்து வர்த்தகர்கள் ஏதோ கேட்டுக் கொண்டிருப்பதாகத் தோன்றியது.

அவர்கள் மீது அதிக கவனம் செலுத்தாமல் இளவரசிகள் தங்களுடன் வந்த வீரனை அழைத்துக்கொண்டு சோழ மாளிகை போய்ச் சேர்ந்தார்கள்.



## எண்பத்து மூன்றாம் அத்தியாயம்

# அப்பர் கண்ட காட்சி

அன்று முன் இரவில் திருவாதிரைத் திருவிழாவை முன்னிட்டு ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும் திருவையாற்றின் விசாலமான மாட வீதிகளில் திருவோலக்கம் எழுந்தருளினார்கள்.

வெள்ளிப் பனி மூடிய கைலையங்கிரியை நினைவூட்டுமாறு வெள்ளியினால் அமைத்த கைலாச வாகனத்தில் அன்று சுவாமியையும் அம்மனையும் அலங்கரித்து வீற்றிருக்கச் செய்திருந்தார்கள்.

ஊர்வலத்தின் முன்னணியில் யானைகளும், ஒட்டகங்களும், பெரிய பெரிய ரிஷபங்களும் சென்றன. அவற்றின் மீது ஏற்றியிருந்த பேரிகைகளும் முரசுகளும் எட்டுத் திசைகளும் எதிரொலி செய்யும்படி முழங்கின. அவற்றின் பின்னால் வரிசை வரிசையாகப் பல வகைத் திருச் சின்னங்களை ஏந்தியவர்கள் சென்றார்கள். விதவிதமான வாத்தியங்களை வாசித்தவர்கள் கோஷ்டி கோஷ்டியாகச் சென்றார்கள். நடன கணிகையர் ஆங்காங்கு நின்று நடனம் ஆடி விட்டுச் சென்றார்கள். நந்தி பகவானும், சண்டிகேசுவரரும், விநாயகரும், வள்ளி தேவயானை சமேதரான முருகக் கடவுளும் தனித்தனி விமானத்தில் அமர்ந்து சென்றார்கள். கடைசியாக, பார்வதியும் பரமேசுவரனும் கைலாச வாகனத்தில் அமர்ந்து சேவை தந்து கொண்டு வந்தார்கள்.

இன்னும் பின்னால் தேவார கோஷ்டியினர் வீணை, மத்தளம், தாளம் முதலிய இசைக் கருவிகளுடன் அப்பரும் சம்பந்தரும் சுந்தரரும் பாடிய திருவையாற்றுத் திருப்பதிகங்களை இசையோடு பாடிக்கொண்டு நடந்து வந்தார்கள்.

முன்னாலும் பின்னாலும் ஆயிரமாயிரம் ஜனங்கள் வீதிகளை

அடைத்துக்கொண்டு மெள்ள மெள்ள ஊர்வலத்தோடு போய்க்கொண்டிருந்தார்கள்.

ஜனங்கள் அவரவருடைய மனப்போக்குக்கு ஒத்தபடி, சிலர் யானை ஒட்டகை முதலியவற்றைப் பார்ப்பதிலும், சிலர் வாத்தியக் கோஷ்டிகளின் கீதங்களைக் கேட்பதிலும், சிலர் தேவ கணிகையரின் நடனங்களைப் பார்ப்பதிலும், பெரும்பாலோர் திருவோலக்கம் வந்த தெய்வ மூர்த்திகளைத் தரிசித்துப் பரவசமடைந்து துதிப்பதிலும் ஈடுபட்டிருந்தார்கள்.

கண்ணுக்கெட்டிய தூரம் முன்னும் பின்னும் நூற்றுக்கணக்கான தீவர்த்திகள் பிரகாசித்து அந்த அபூர்வமான தெய்வ ஊர்வலத்தை ஒரு கனவு லோகக் காட்சியாகச் செய்துகொண்டிருந்தன.

இந்தக் காட்சியைச் சோழ மாளிகையின் மேன்மாடத்திலிருந்து குந்தவையும் வானதியும் பூங்குழலியும் பார்த்துக்கொண்டிருந்தார்கள். முதன் முதலில் வந்த முரசு சுமந்த யானைகளிலிருந்து கடைசித் தேவார கோஷ்டி வரும் வரையில் ஆர்வத்துடன் பார்த்து மகிழ்ந்தார்கள். பரவச நிலையிலிருந்த பக்தர்களையும் பலவித வேடிக்கைகளில் மனத்தைச் செலுத்தியிருந்த பாமர மக்களையும் பார்த்தார்கள். நந்தி தேவர் முதல் சிவன் பார்வதி வரையில் வீதி வலம் வந்த தெய்வ வடிவங்களையும் அவர்கள் தரிசித்து மகிழ்ந்தார்கள்.

அவ்வளவு ஜனக் கூட்டத்துக்கு மத்தியில் ஒரு யானையின் மீது இரண்டு சீன வர்த்தகர்கள் ஏறிக்கொண்டு வருவதையும், அவர்கள் அவ்வப்போது யானை மேலிருந்து கீழிறங்கி ஜனக் கூட்டத்தினிடையில் மறைந்து விடுவதையும், பிறகு மறுபடியும் வந்து யானை மீது ஏறிக்கொள்வதையும் கண்டார்கள்.

"ஆகா! இந்தச் சீனர்கள் இருவரும் உண்மையில் வர்த்தகர்களா? அல்லது அயல்நாட்டிலிருந்து வேவு பார்க்க வந்த ஒற்றர்களா?" என்ற ஐயம் குந்தவையின் உள்ளத்தில் ஏற்பட்டது.

சோழ இராச்சியத்து அரசுரிமை சம்பந்தமாகச் சில நாட்களாக ஏற்பட்டிருந்த தகராறுகள் - குழப்பங்கள் பற்றிய செய்திகள் உலகெங்கும் பரவியிருக்கக் கூடியது இயல்பேயாகும்.

அதை முன்னிட்டு, பகை அரசர்கள் இந்த ஒற்றர்களைச் சீனநாட்டு வர்த்தகர்களின் தோற்றத்தில் அனுப்பி வைத்திருக்கக் கூடும் அல்லவா?

இதைப் பற்றிக் குந்தவையும் வானதியும் பேசிக்கொண்டிருந்தது பூங்குழலியின் காதில் விழுந்தது. அந்தப் பெண், "தேவி! அவர்கள் கோவில் கோபுர வாசலில் என்னை அணுகிச் 'சீனத்துப் பட்டு வேணுமா?' என்று கேட்டார்கள். நான் அவர்களிடம் 'சோழ மாளிகைக்கு வாருங்கள்; தஞ்சையிலிருந்து இளவரசிகள் வரப் போகிறார்கள்; அவர்கள் ஒருவேளை வாங்குவார்கள்!" என்று சொல்லியிருக்கிறேன். ஆகையால் ஒருவேளை இங்கு வந்தாலும் வருவார்கள்! உங்கள் சந்தேகத்தை நேரிலேயே கேட்டுத் தீர்த்துக் கொள்ளலாம்!" என்றாள்.

அச்சமயம் கைலையங்கிரி வாகனத்தில் அமர்ந்திருந்த ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும் சோழ மாளிகையின் வாசலுக்கு வந்திருந்தார்கள். அங்கே சுவாமியை நிறுத்தச் செய்து தீபாராதனை முதலியன நடந்தன. தெய்வ ஊர்வலத்துடன் வந்த செம்பியன்





மாதேவியும் அவருடைய புதல்வரும் விமானம் அங்கிருந்து சென்ற பிறகு அரண்மனைக்குள் பிரவேசித்தார்கள். இளவரசிகள் அங்கேயே வந்து சேர்ந்தார்கள்.

உற்சவத்தின் சிறப்பைக் குறித்துச் சிறிது நேரம் சம்பாஷணை நடந்தது. பின்னர், சிவஞான கண்டராதித்தரின் தேவி தம் அருமை மகனைப் பார்த்துக் "குழந்தாய்! இந்தத் திருவையாற்றில் அப்பர் பெருமான் கண்ட காட்சியைப் பற்றி ஒரு பதிகம் பாடியிருக்கிறாரே! அதை நீ ஒருமுறை



பாடு, கேட்கலாம்! தேவார கோஷ்டியார் பாடக் கேட்டது எனக்கு அவ்வளவாகத் திருப்தி அளிக்கவில்லை!" என்றார்.

இளவரசிகளும் பூங்குழலியும் அந்தக் கோரிக்கையை ஆமோதித்தார்கள்.

பின்னர், சேந்தன் அமுதனாகிய மதுராந்தகத் தேவர் அந்தப் பதிகத்தைத் தமது இனிய குரலில் பாடினார்.

"மாதர்
பிறைக்கண்ணியானை
மலையான்
மகளொடும்பாடிப்
போதொடு
நீர்சுமந்தேத்திப்
புகுவாரவர்
பின்புகுவேன்
யாதுஞ் சுவடுபடாமல்
ஐயாறு
அடைகின்றபோது
காதன்மடப் பிடியோடுங்
களிறு வருவன
கண்டேன்!
கண்டேனவர்
திருப்பாதம்!
கண்டறியாதன
கண்டேன்!"

இந்த அடியுடன் தொடங்கிப் பின்வரும் பத்து அடிகளையும் மதுராந்தகர் தன்னை மறந்த நிலையில் பாடினார்.

கேட்டுக்கொண்டிருந்தவர்களும் தங்களை மறந்திருந்தார்கள்; அன்று அப்பர் பெருமான் கண்ட காட்சிகளையெல்லாம் அவர்களும் கண்டார்கள்.

பாடல் முடிந்து சிறிது நேரம் வரையில் அங்கே மௌனம் குடிகொண்டிருந்தது. பின்னர், குந்தவை செம்பியன் மாதேவியைப் பார்த்து, "அம்மா! அப்பர் இந்தப் பதிகம் பாடிய வரலாற்றை முன்னொரு முறை எனக்குச் சொல்லியிருக்கிறீர்கள். இப்போதும் இன்னொரு தடவை சொல்லுங்கள்; இவர்களும் கேட்கட்டும்!" என்றாள்.

மற்றவர்களும் வற்புறுத்திக் கேட்டதன் பேரில் பெரிய பிராட்டி செம்பியன்மாதேவி அந்த வரலாற்றைக் கூறினார்.

அப்பர் சுவாமி பிராயம் முதிர்ந்து உடல் தளர்ச்சியுற்றிருந்த சமயத்தில் கைலையங்கிரிக்குச் சென்று இறைவனைத் தரிசிக்க விரும்பினார். நெடுந்தூரம் வடதிசை நோக்கிப் பிரயாணம் செய்தார். மேலே நடக்க முடியாமல் களைத்து விழுந்தார். அச் சமயம் ஒரு பெரியவர் அங்கே தோன்றி, "அப்பரே

கைலையைத் தேடி நீர் எங்கே செல்கிறீர்? பொன்னி நதிக் கரையிலுள்ள திருவையாற்றுக்குச் செல்லுங்கள்! பூலோக கைலாசம் அதுதான்!" என்று அருளிச் செய்து மறைந்தார். அது இறைவன் வாக்கு என்று அறிந்த அப்பர் திரும்பித் திருவையாறு வந்தார். அந்த ஸ்தலத்தை நெருங்கி வந்தபோதே அவருடைய உள்ளம் பரவசம் அடைந்தது. பல அடியார்கள் கையில் பூங்குடலையும் சென்டியில் காவேரி நீரும் ஏந்தி ஐயாறப்பனைத் தரிசிப்பதற்காகச் சென்று கொண்டிருப்பதைப் பார்த்தார். அவர்கள் இறைவனுடைய புகழைப் பாடிக்கொண்டு சென்றார். அப்போது திருவையாறு நகர்ப்புறத்தில் ஆணும் பெண்ணுமாக இரு யானைகள் வந்தன. அந்தக் களிறும் பிடியும் சிவமும் சக்தியுமாக அப்பருக்குக் காட்சி அளித்தன. ஆலயத்தை அடைவதற்குள் இவ்வாறு பல விலங்குகளையும் பறவைகளையும் ஆண் பெண் வடிவத்தில் அப்பர் பார்த்தார். கோழி பெடையோடு கூடிக் குலாவி வந்தது; ஆண் மயில் பெண் மயிலோடு ஆடிப் பிணைந்து வந்தது. அருகிலிருந்த சோலையில் ஆண் குயிலோடு பெண் குயில் பாடிக் களித்துக் கொண்டிருந்தது; இடி முழக்கக் குரலில் முழங்கிக்கொண்டு ஏனம் ஒன்று அதன் பெண் இனத்தோடு சென்றது; நாரையும் அதன் நற்றுணையும் சேர்ந்து பறந்து சென்றன; பைங்கிளியும் அதன் பேடையும் பசுமரக் கிளைகளில் மழலை பேசிக்கொண்டிருந்தன; காளையும் பசுவும் கம்பீரமாக அசைந்து நடந்து சென்றன. இவ்வாறு ஆணும் பெண்ணுமாக அப்பர் சுவாமிகளின் முன்னால் தோன்றியவையெல்லாம் சிவமும் சக்தியுமாக அவருடைய அகக் கண்ணுக்குப் புலனாயின. உலகமெல்லாம் சக்தியும் சிவமுமாக விளங்குவதைக் கண்டார். "இந்த உலகமே கைலாஸம்; தனியாக வேறு கைலாஸமில்லை" என்று உணர்ந்தார். இத்தகைய மெய்ஞான உணர்ச்சியோடு மேலே சென்றபோது, ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும் கைலாஸ வாகனத்தில் எழுந்தருளி வீதி வலம் வருவதையும் பார்த்தார். தாம் அன்று புறக்கண்ணாலும் அகக் கண்ணாலும் பார்த்து அனுபவித்ததையெல்லாம் ஒவ்வொன்றாக இனிய தமிழில் இசைத்துப் பாடி அருளினார். இத்தனை காலமும் தாம் கண்ணால் கண்டும் கருத்தினால் அறியாமலிருந்தவற்றை இன்று திருவையாற்றில் கண்டு அறிந்து கொண்டதாக ஒவ்வொரு பாடலின் முடிவிலும் "கண்டறியாதன கண்டேன்!" என்று திரும்பத் திரும்ப வியந்து வியந்து கூறினார்.

முதிய எம்பிராட்டியார் கூறி வந்த இந்த வரலாற்றை எல்லாரும் மெய் மறந்து கேட்டுக் கொண்டு வந்தார்கள்.

வரலாறு முடிந்த பிறகு கொடும்பாளூர் இளவரசி ஒரு கேள்வி கேட்டாள்:- "அம்மா! அப்பர் சுவாமிகள் விலங்கினம் - பறவை இனங்களின் காதலைக் குறித்து இப்படியெல்லாம் வியந்து வியந்து கூறியிருக்கிறாரே? மனித இனத்தைப் பற்றி மட்டும் ஏன் குறிப்பிடவே இல்லை?" என்றாள்.

"மனித குலத்தில் பிரதிப் பயனை விரும்பாமல் உண்மையான அன்பு கொண்ட ஆண் - பெண்கள் இல்லவே இல்லை. அதனாலேதான் அப்பர் மனித குலத்து ஆண் பெண்களைக் குறிப்பிடவில்லை!" என்றாள் பூங்குழலி.

"அது சரியல்ல, மகளே! உன்னையும் என் மகனையும் அப்பர் சுவாமிகள் பார்த்திருந்தால், மனித குலத்தின் காதலையும் சேர்த்துக்கொண்டு பாடியிருப்பார்!" என்றார் செம்பியன்மாதேவி.

"ஆமாம்; ஆமாம்!" என்று மற்ற இரு பெண்மணிகளும் ஆமோதித்தார்கள்.

இந்தச் சமயத்தில் அந்த மாளிகையின் வாசலில் ஏதோ சலசலப்பு உண்டாயிற்று. சேவகன் ஒருவன் உள்ளே வந்து, "சீனத்துப் பட்டு வர்த்தகர்கள் இருவர் வந்திருக்கிறார்கள். இளவரசிகளைப் பார்த்து விட்டுத்தான் போவோம் என்கிறார்கள்!" என்றான்.

இளையபிராட்டி வியப்பும் கோபமும் அடைந்து, "அவர்கள் யார் அவ்வளவு அதிகப் பிரசங்கிகள்? இப்போது ஒன்றும் வேண்டாம் என்று சொல்லி அவர்களைப் போகச் சொல்!" என்றாள்.

இதற்குள் பூங்குழலி, "தேவி! அவர்களை நான் வரச் சொல்லியிருந்தேன். மன்னிக்க வேண்டும்!" என்றாள்.

"அப்படியானால் வந்து விட்டுப் போகட்டும்!" என்றாள் இளையபிராட்டி.

சற்று நேரத்துக்கெல்லாம் சீனத்து வர்த்தகர்கள் இருவரும் இரண்டு மூட்டைகளுடனே அங்கு வந்தனர். (தொடரும்)

# அதிசயங்கள் நிகழ்த்தும் அற்புத மருத்துவர்

## அறுவை சிகிச்சை இல்லாமலேயே இதய நோய் குணமான அதிசயம்!



முக்திரியாபேகம், அந்தோனி பிள்ளை தெரு, கிழக்கு தாம்பரம், சென்னை – 59.

எனக்கு இதயத்தில் அடைப்பும் வலியும் அடிக்கடி வந்ததால் நான் சில ஆண்டுகளாக மயக்கம் மற்றும் உடல்பலவீனத்தால் அவதியுற்றேன். இதனால் சென்னையில் உள்ள ஒரு பிரபல மருத்துவ மனைக்கு சென்று சிகிச்சை பெற்றேன். ஆனால் அங்கு என்னை சோதனை செய்து என் இதயத்தில் ஒரு மேஜர் ஆ∴பரேசன் செய்ய வேண்டும் என்று கூறிவிட்டார்கள். இதனால் என் மனம் மிகவும் வேதனைப்பட்டு சில நண்பர்கள் மூலம் ரப்பானி **வைத்யசாலா** சென்றேன். இங்கு எனக்கு நல்ல சிகிச்சை கிடைத்ததின் மூலம் என் நோய் படிப்படியாக இப்போது குறைந்துவிட்டது. நான் இப்போது மகிழ்ச்சியாக இருக்கிறேன்.

## மலட்டுத் தன்மை என்பதே இல்லாமல் போச்சு!



குழந்தை இல்லை என்று நாங்கள் ஏறாத ஆஸ்பத்திரி வாசல்கள் இல்லை. பிறகு பலரின் ஆலோசனையைக் கேட்டு ரப்பானி வைத்தியசாலாவிற்கு வந்து தொடர்ந்து மருந்து சாப்பிட்டதில் குழந்தை பெற்று தனது மன மகிழ்ச்சியை அனைவருக்கும் தெரிவிக்கின்றனர். சென்னை தேனாம்பேட்டையைச் சேர்ந்த ஜெயசங்கர்–மாரியம்மாள் தம்பதி.

## மருந்தில்லை என்ற சோரியாஸிஸ் மாயமாய் மறைந்து போச்சு!



நான் கடந்த சில வருடங்களாக உடம்பில் அரிப்பு ஏற்பட்டு சோரியாசிஸ் என்ற நோயாலும், கடுமையான மூட்டு வலியாலும் பாதிக்கப்பட்டேன். பல சிகிச்சைகளும் எனக்கு பலன் தராமல் ரப்பானி வைத்தியசாலாவில் காண்பித்தேன். தொடர்ச்சியாக சில மாதங்கள் அங்கு பெற்ற சிகிச்சையின் பலனாக என் பிரச்சனைகள் அனைத்தும் தீர்ந்தது தெரிவிக்கிறார் திருமதி பத்மா ஸ்வாமிநாதன், ரெய்ன் ரிச் அபார்ட்மெண்ட்ஸ், மௌனசாமி மடம் தெரு, வெங்கடபுரம், சென்னை – 53.

## கர்ப்பப்பை ஆபரேஷன் என்ற பேச்சுக்கே இடமில்லை என்றாச்சு!



வயிற்று வலிக்காக சென்னையில் உள்ள ஒரு பெரிய ஆஸ்பத்திரியில் 3 ஆண்டு வைத்தியம் பார்த்தபின் கர்ப்பப்பையை எடுத்துவிடச் சொன்னார்கள். ரப்பானி வைத்தியசாலாவில் 3 மாதம் மருந்து சாப்பிட்டதில் சரியாப் போச்சு. கர்ப்பப்பையை எடுக்க தேவையில்லை என்று அதே ஆஸ்பத்திரியில் சொல்லிவிட்டார்கள் என்கிறார் போரூர், அண்ணாசாலையைச் சேர்ந்த கோவிந்தராஜின் மனைவி **G.** செல்வி.

## பக்கவாத நோய் பளிச்சென்று தீர்ந்தது!



பல ஆண்டுகளாக பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டு செயலற்று இருந்த நான் ரப்பானி வைத்யசாலா **டாக்டர் ஹக்கீம் S.A. சையத் சத்தார்** அவர்களிடம் சிகிச்சை பெற்றபின் இரண்டே மாதங்களில் பூரண குணமடைந்தேன் என்று காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் தெருவில் வசிக்கும் திரு கே. கட்சீஸ்வரன் தெரிவிக்கிறார்.

**மேலும் கை கால் வாதம், மூளை வளர்ச்சி குறைவு, லிவர் பெயிலியர், மூலம், நரம்புத் தளர்ச்சி, ஆண்மைக் குறைவு, யானைக்கால் வியாதி, காக்காய் வலிப்பு போன்ற சகல வியாதிகளுக்கும் சிறந்த சிகிச்சை அளிக்கப்படுகிறது.)**

மாதந்தோறும்
Dr. சையத் சத்தாரின்
யுனானி மருத்துவ மாத
இதழ் கடைகளில் கேட்டு
வாங்குங்கள்

டாக்டர் ஹக்கீம் S.A. சையத் சத்தார்
ரப்பானி வைத்ய சாலா

73/1, டாக்டர் பெசன்ட் ரோடு,
மீர்சாகிப்பேட்டை மார்க்கெட் அருகில்,
இராயப்பேட்டை, சென்னை – 600 014.
போன்: 8510969, 8410874



காட்டாங்குளத்தூர் சிவானந்தா குருகுலத்தில் உள்ள முதியோர் இல்ல வாசிகளான சாவித்திரி, ராஜகோபால், ரங்கராஜன், அவருடைய மனைவி கமலா ஆகியோர் நாரத கான சபாவில் நடைபெற்ற நாடக மந்திர் குழுவினரின் புதிய நாடகமான 'இன்று நான்; நாளை நீ' பார்ப்பதற்காக, பிரத்யேகமாக அழைத்து வரப் பட்டார்கள். நாடகத்தைப் பார்த்துவிட்டு, அதில் பிரதான பாத்திரத்தில் சிறப்பாக நடித்த தில்லைராஜனுடன், நாடகத்தைப் பற்றிக் கலந்துரையாடினார்கள்.


• சாவித்திரி, கமலா, ரங்கரா

**ராஜகோபால்** : ''தில்லை ராஜன், நாடகம் ரொம்பப் பிரமாதம்! முதியோர் இல்லத்து கேரக்டர்களை மையமாக வைத்து, மிக அற்புதமாக நாடகம் போட்டிருக் கிறீர்கள். எங்களுடைய நிஜ வாழ்க்கையில் நடந்த சம் பவங்களை, மேடையில் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்திவிட் டீர்கள்.


• தில்லைராஜன்

**சாவித்திரி:** முதியோர் இல்லத்தை வைத்து நாடகம் போடும் ஐடியா உங் களுக்கு எப்படி வந்தது? இன் றைக்குக் காமெடி நாடகங் களுக்குத்தானே நிறைய வரவேற்பு?

# இன்று நான்

**தில்லைராஜன்:** நாடகாசிரியர் ராது, தம்மிடம் இப்படி ஒரு சப்ஜெக்ட் இருப்பதாகச் சொல்லி, கதைச் கருக் கத்தைச் சொன்ன மாத்திரத் திலேயே, எனக்கு ரொம்ப பிடித்துவிட்டது. இதுவரை நான் போட்ட நாடகங்களிலேயே இது மாறுபட்டது.

**ராஜகோபால்** : மனைவியை இழந்த உங்கள் கேரக்டரில் நான் என்னையும், என்னைப் போலவே எங்கள் குருகுல முதி யோர் இல்லத்தில் இருக்கிற இன்னும் சிலரையும் பார்த்தேன். நான் கடந்த ஒருவருடமாக முதியோர் இல்லத்தில் இருக் கிறேன். எனக்கு மூன்று பெண்கள். ஆனாலும், அவர்களுக்குப் பாரமாக இருக்கவே கூடாது என்ற காரணத்துக்காகவே இந்த இல்லத்துக்கு வந்துவிட்டேன். நீங்கள் அடிக்கடி, இறந்து போய் விட்ட உங்கள் மனைவியை நினைத்து சில வசனங்களைப் பேசுவீர்களே, அது ரொம்ப யதார்த்தம். நான் கூட அடிக்கடி, மனைவியின் நினைவுகளில் ஆழ்ந்து போய்விடுவதுண்டு.

**சாவித்திரி** : கிராமங்களிலாவது, வீடுகளில் கூடம், ரேழி, திண்ணை, தோட்டம் என்றிருக்கும். வீட்டுக்குப் பெரியவர்கள், தனிமையில் ஓய்வு எடுத் துக் கொள்ள முடியும். ஆனால், நகர்ப்புறங் களில் உள்ள ஃபிளாட் களில், நமக்கும் சரி, மற்றவர்களுக்கும் சரி, பிரைவசியே இல்லை. பார்த்த முகத்தையே நான் முழுக்க பார்த்துக் கொண்டு, நமக்காவது வேறு வழியில்லை. அடுத்த தலைமுறையினருக்கு, சலிப்பு ஏற்படுகிறது. எரிச் சல் சகஜமாகிவிடுகிறது. கணவனை இழந்த, குழந் தைகள் இல்லாதவளான எனக்கு, முதியோர் இல்லத் தில் நிம்மதி கிடைக்கிறது. இந்த வயதில் வேறு என்ன வேணும்?

**தில்லைராஜன்** : எனக்கு வயது அறுபது- ஒரு பையன் வெளிநாட்டில்



லைராஜன், ராஜகோபால்

இருக்கிறான். இன்னும் ஒரு பையனும், இரண்டு பெண்களும் இங்கே தான் இருக்கிறார்கள். குடும்பத்தோடு இருக்கிற போது, பெரியவர்களும் ஒரு சில தவறுகள் செய்து விடுகிறோம். கோபம்தான் நமக்கு எதிரி. அதனால்தான் குடும்பத்தில் பாதி பிரச்னை, நான்கூட அதை அனுபவபூர்வமாக உணர்ந்திருக்கிறேன்.

**ரங்கராஜன் :** இதில் நடிப்பதற்காக, எந்த முதியோர் இல்லத்துக்காவது போய் அங்குள்ளவர்களிடம் பேசினீர்களா?

**தில்லைராஜன் :** போரூரில் உள்ள முதியோர் இல்லம் ஒன்றில், டி.வி. தொடர் படப்பிடிப்பு நடந்தது. அது, முதியோர் இல்லம் சம்பந்தப்பட்ட கதை இல்லை. அந்த இல்லத்தின் கட்டடம், தோட்டம் போன்றவை அந்தக் கதைக்குப் பொருத்தமாக இருந்ததால், அங்கே படப்பிடிப்பு நடந்தது. அந்த சமயம், அங்கே இருந்த

# நாளை நீ!



• நாடகத்தில்...

முதியவர்களிடம் பேசினேன். நெஞ்சம் நெகிழ்ந்தேன்.

**கமலா:** வழக்கமாக, குழந்தையில்லாத தம்பதிகள்தான், தத்து எடுத்துக் கொள்ளுவார்கள். ஆனால், உங்களது நாடகத்தில், ஒரு புதுமை செய்திருக்கிறீர்கள். பெற்றோர் இல்லாத இளைஞன், முதியோர் இல்லத்திலிருந்து ஒருவரை தகப்பனாராக தத்து எடுத்துக் கொள்ளுகிறாரே. ரொம்ப டச்சிங்.

**தில்லைராஜன்:** நாடகாசிரியர் ராது, இந்த நாடகத்தில் சர்ச்சைக்குரிய ஒரு கருத்தைச் சொல்லியிருக்காரே. 'இன்றைய தலைமுறையினர், தமது பித்ருக்களுக்கு, திவச தினத்தில், சாஸ்திரப்படி, சடங்குகளைச் செய்யாமல், முதியோர் இல்லங்களுக்கோ, அனாதை இல்லங்களுக்கோ சென்று, சாப்பாடு போடுகிறார்கள். நமது சௌகரியங்களுக்காக, சம்பிரதாயங்களை மாற்றுவது சரியல்ல. செய்தால், முறைப்படிச் செய்ய வேண்டும். இல்லையெனில் செய்யாமல் விட்டு விடுவதே மேல்' என்று சொல்லியிருப்பது குறித்து உங்கள் கருத்து என்ன?

**ராஜகோபால் :** திவசத்தன்று, சாஸ்திரப்படி செய்ய வேண்டியதைச் செய்துவிட்டு, பிறந்த நாளன்று, அவர் நினைவாக அன்னதானம் செய்யலாமே.

**கமலா :** இந்த நாடகத்தை எங்களுடைய குருகுலத்துக்கு வந்து நீங்கள் நடத்தினால் அங்கே இருக்கிற எல்லாரும் பார்த்து ரசிக்கலாம்.

**தில்லைராஜன் :** அந்த ஐடியா எனக்கும் இருக்கிறது. முதியோர் இல்லங்களுக்கே போய், இந்த நாடகத்தை விரைவில் நடத்தப் போகிறோம்.

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

படங்கள் : **ஸ்ரீஹரி**

# புனைபெயர் மகாத்மியம்...



• ஞாநி (படம்: ஸ்ரீஹரி)

## ஞாநி:

நம்மிடம் இருக்கிற இயல்பைப் புனை பெயராகக் கொண்டது போல, இல்லாததற்கு ஆசைப்படும் உணர்ச்சியின் அடையாளமாகத்தான் 'ஞாநி' என்ற பெயரைச் சூட்டிக் கொண்டேன்!

ஏற்கெனவே, 'ஞானி' என்ற பெயரில் பழனிச்சாமி என்ற மார்க்சிய விமர்சகர் இயங்கி வந்ததால், குழப்பத்தைத் தவிர்க்க என் பெயர் 'ஞாநி' என்றானது. இதற்கு உந்துதல் என் ஆதர்சப் படைப்பாளி பாரதி. 'ஞான பாநு' என்ற கவிதையில் 'னு'வுக்குப் பதில் 'நு'வைப் பயன்படுத்திய அவரது புதுமை. இப்படி நான் 'நி' என மாற்றி எழுதிய போது, பிழை திருத்துபவர்கள் பலர், நான் தவறாக எழுதியதாக நினைத்துத் திருத்தியதும் உண்டு.

பல கட்டுரைகள் எழுத வேண்டிய சமயங்களில் 'மனிதன்', 'முனிவன்', 'சினிக்', ரேஞ்சர்', 'ரிமோட்', 'நந்தன்', 'மானஸா', 'சித்தார்த்தன்' என விதவிதமாய் புனைபெயர்கள் சூட்டிக் கொண்டதுண்டு. இயற்பெயர்: என்.வி.சங்கரன்.

## புனிதன்:

இயற்பெயர் பா. சண்முகசுந்தரம். 'கல்கண்டு' பத்திரிகையில் சேர்ந்த சமயத்தில் 'தேசபந்து' என்ற பெயரில் எழுதிக் கொண்டிருந்தேன். குமுதத்துக்கு வந்ததும், வேறு புனை பெயர் வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் வந்தது. 'புனிதா' என்ற என் தங்கையின் பெயருடன் 'ன்' சேர்த்து 'புனிதன்' என்று சூட்டிக் கொண்டுவிட்டேன். கதாகாலட்சேப பாணியில் நான் கதைகள் எழுதி வந்ததால், என் ஒரிஜினல் பெயரில் இருக்கும் சுந்தரத்துடன் பாகவதரைச் சேர்த்து, 'சுந்தர பாகவதர்' ஆக்கியவர் ரா.கி. ரங்கராஜன்

கிட்டதட்ட நாற்பது வருடங்களாக 'புனிதன்' என்ற பெயரில் எழுதிக் கொண்டிருக்கும் நான், அந்தப் பெயரை, முதன் முதலில் 'கற்றது காதல் அளவு' என்ற நாவலுக்குப் பயன்படுத்தினேன்.

## மெரீனா:

ஒரே இறைவனுக்கு, பிரம்மா,



• புனிதன்



• மெரீனா (நன்றி: ஆனந்த விகடன்)

விஷ்ணு, மகேஷ்வரன் என மூன்று அம்சங்கள் இருப்பதுபோல, எனக்கும் ஸ்ரீதர், மெரீனா, பரணிதரன் என்று மூன்று புனை பெயர்கள். கார்ட்டூன், ஜோக்ஸ்க்கு ஸ்ரீதர், கதை,



• ஸ்டெல்லா புரூஸ் (நன்றி: ஆனந்த விகடன்)

நாடகத்துக்கு மெரீனா, ஆன்மீகத்துக்கு பரணிதரன். 'பெயரில் என்ன இருக்கு?' என்றார் ஒரு கவிஞர். அதே போலதான் எனக்கும். விஷயத்துக்கு ஏற்ற மாதிரி சிந்தனைகள் பரிணமிக்கும். ஐ என்ஜாய் ஆல் நேம்ஸ்.!

என்னோட நண்பருக்கு அழகான பெண் குழந்தையிருந்தது. பெயர் மெரீனா. நம்ம ஊர் கடற்கரையின் மீதும் எனக்குக் காதல் இருந்தது. உலகப் பிரசித்திப் பெற்ற அழகிய பீச் ஆச்சே! அதுதான் புதுமையாக இருக் கட்டுமே என்று அந்தப் பெயரை வைத்துக் கொண்டேன்.

முதலில் 'மெரீனா' என்ற பெயரில், ஆனந்தவிகடனில் கால்பக்க, அரைப்பக்க மேட்டர் எழுதுவேன். தேவன் ரொம்ப ரசிப்பார். '65க்குப் பிறகு நான் அந்தப் பெயரில் எழுதிய 'தனிக் குடித்தனம்', 'காதல் என்ன கத்திரிக்காயா?', 'வடபழனி வால்மீகி' போன்றவை வாசகர்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றன.

## ஸ்டெல்லா புரூஸ்:

ராம்மோகனான நான் 'ஸ்டெல்லா புரூஸ்' ஆனது ரொம்பவே தற் செயல். 'அது ஒரு நிலாக் காலம்' என்ற தலைப்பில் ரோஸ்மேரி என்ற கதாபாத்திரத்தின் உண் மைக் கதையை எழுதி குமுதத்துக்கு அனுப்பினேன். அந்த ரோஸ் மேரியின் அசல் பெயரான ஸ்டெல்லா புரூஸையே புனை பெயராக வைத்துக் கொண் டேன். கதை 'கிளிக்'ஆனதும், புனை பெயரும் நிரந்தர மாகி விட்டது.

## சாருப்ரபா சுந்தர்:

ஒரிஜினல் பெயரான சுந்தருடன் குடும்பப் பெயரான ராஜு சேர்த்து 'சுந்தர் ராஜு' என்று எழுதிக் கொண்டிருந்தேன்.

திருச்சியில், பள்ளியில் படிக்கும்போது, 'அரட்டை' என்ற பெயரில் கையெழுத்துப் பத்திரிகை நடத்திக் கொண்டிருந்தேன். அதன் பிரதிகளை சாவி சாருக்கு அனுப்பி வைக்க, அவர் அதிலிருந்து சில, பல பகுதி களை 'தினமணி கதிரி'ல் பிரசுரிக்க ஆரம் பித்தார். ஒரே இதழில் நிறைய படைப்புகள் இடம் பெற்றதால், அவ்வப்போது என்



• சாருப்ரபா சுந்தர்



* அம்பை

பெயரை 'மஞ்சு ராஜ்' என அவரே மாற்றி விடுவார். சரி, நாமாகவே ஒரு புனைபெயர் வைத்துக் கொள்ளலாமே என யோசித்தேன். என்னிடம் சகோதரிகள் போல பழகிய என்னுடைய பள்ளித் தோழிகளின் (சாரு, ப்ரபா) பெயர்களை அன்பின் அடையாளமாக வைத்துக் கொண்டேன். சாரதா, பிரபாவதி என்ற அந்தச் சகோதரிகளின் குடும்பத்துடன் இன்றைக்கும் நட்பு நிலவுகிறது.

## பாக்கியம் ராமசாமி:

'53ல் 'குமுதம்' அலுவலகம் சேர்ந்த போது, ஒரு கற்பனை பெயர் வேண்டும் என்றார்கள். என்னோட உண்மையான பெயர் ஜலகண்டாபுரம் ராமசாமி சுந்தரேசன்... அதைத்தான் சுருக்கி ஜ.ரா.சு. ஆனேன். ஹாஸ்ய கதைகள் எழுதின போது பிரத்யேகமாக ஒரு பெயர் தேவைப்படவே அம்மா பாக்கியத்தோட பெயரையும், அப்பா ராமசாமி பெயரையும் இணைத்து 'பாக்கியம் ராமசாமி'என்று எழுத ஆரம்பித்தேன். அந்தப் பெயர் 'கிளிக்' ஆயிடுச்சு.

சீரியஸ் கதைகளுக்கு, 'வனமாலி', 'மிருணாளினி', 'யோகேஷ்', 'செல்வமணி' என்று நிறைய புனைபெயர் உண்டு.

## அம்பை:

பதினாறு வயதிலேயே கதை எல்லாம் எழுத ஆரம்பித்துவிட்டேன். அப்போ புனை பெயர் சூட்டிக்கிறது ரொம்ப ஃபேஷனா இருந்தது. என்னோட உண்மையான பெயர் சி.எஸ். லக்ஷ்மி. ஏற்கெனவே அந்தப் பெயரில் பிரபல எழுத்தாளர் இருந்ததால், அழகான புனைபெயரைத் தேடிக் கொண்டிருந்தேன்.

அந்த சமயத்தில் 'ஆனந்த விகடனில் தேவன் எழுதிய 'பார்வதி சங்கல்பம்' குறுநாவல் படித்தேன்.



* பாக்கியம் ராமசாமி

கதாநாயகியின் பெயர் பார்வதி. குடும்பப் பெண்ணான அவளை, அவளுடைய கணவன், 'நீ எனக்கு ஈடானவள் இல்லை'னு மட்டம் தட்டிக்கிட்டே இருப்பான். அவளுடன் வாழப் பிடிக்காமல், வீட்டை விட்டே விரட்டியும் விடுவான். 'நான் யாராகவாவது உருவாகிக் காட்டணும்' என்று இலட்சிய வெறியோடு கிளம்பும் அந்தப் பெண் 'அம்பை' என்ற பெயரில் கதைகள் எழுத ஆரம்பித்து, சிறப்பான எழுத்தாளராகவும் ஆயிடுவா. 'அம்பை'தான் தன் மனைவி என்று தெரியாத அவளுடைய கணவன், அவளைச் சந்திக்க விரும்புவான். நேரில் பார்க்கும் அவனுக்கு அதிர்ச்சி. புகழும், சமுதாய உயர்வும் பெற்றுவிட்ட நிலையில் மீண்டும் வாழ விரும்பி அவன் அழைக்க, பார்வதி மறுத்து விடுவாள்.

அந்தப் பெண்ணின் துணிவு, பிடிவாதம் எனக்குப் பிடித்திருந்தது. அந்த குணங்கள் எனக்கும் இருந்ததால், 'அம்பை'னு பெயர் வைச்சுக்கிட்டேன். அந்தப் பெயரில் வந்த முதல் சிறுகதை 'ஞானம்.'

பதினேழு வயதில், என்னவோ வாழ்க்கையை ரொம்ப நல்லா புரிஞ்சுக்கிட்டோம் என்ற எண்ணத்துல ரொம்ப வேதாந்தமா எழுதின கதை. அதைப் படிச்சுட்டு என் பாட்டி அடித்த காமெண்ட்:

''பிஞ்சுல பழுத்த கதையா இருக்கே!''

— அனு



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்




72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63. Tel : 237 6129.

E-mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com


## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

- காலை சிற்றுண்டி (150 பேருக்கு) — ரூ. 1,000/-
- மதிய உணவு — ரூ. 2,000/-
- இரவு சிற்றுண்டி — ரூ. 1,000/-
- மாலை சிற்றுண்டி — ரூ. 1,000/-
- ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை — ரூ. 1,000/-
- ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) — ரூ. 3,000/-
- ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) — ரூ. 12,000/-
- குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு — ரூ. 2,00,000/-



## -: விவேகானந்தர் தேசீய இயக்கம் :-

ஸ்ரீ சாரதா சக்தி பீடத்தின் சார்பில் "விவேகானந்தர் தேசீய இயக்கம்" என்ற அமைப்பு கிராமபுறத்தில் உள்ள ஏழை மாணவ, மாணவியர்களின் கல்வி, மத நல்லிணக்கம், மனித நேயம், சமய சமரசம் மற்றும் ஆன்மீக முன்னேற்றத்திற்காக ஏற்படுத்தப்பட்டுள்ளது.

இதன்மூலம் 504 கிராமங்களில் சுமார் 17,500 ஏழை மாணவ, மாணவியர்களுக்கு மாலை நேரத்தில் இலவச சிறப்புக் கல்வியும், (டியுஷன்) ஆன்மீக பயிற்சியும் அளிக்கப்படுகிறது. இந்த மேலான தொண்டுகள் சிறப்பாக நடைபெற தங்களின் அன்பையும், உதவியையும் நாடுகிறோம்.

ஒரு மையத்தின் (கிராமத்தின்) ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு (பௌர்ணமி அன்று சிறப்பு விருந்து உட்பட) — ரூ. 1,500/–

ஒரு மையத்தின் ஓராண்டிற்கு பராமரிப்புத் தொகை (12 மாதம் பௌர்ணமி சிறப்பு விருந்து உட்பட) — ரூ. 18,000/–

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்



# மூன்றாவது

ராமகிருஷ்ணன் சொன்னதில்லை என்றாலும் அதன் முக்கியத்துவம் சாரதாவுக்குத் தெரிந்திருந்தது. காலப் போக்கில் அவனே உணர்ந்தும் அறிந்தும் கொண்ட சூட்சுமங்களுள் ஒன்று, மூன்றாவது பாட்டைப் பற்றியது.

கச்சேரியில் மூன்றாவது பாட்டு மட்டும் சரியாக அமையவில்லையானால் விபரீதம்தான். நங்கூரம் பாய்ச்சாத படகுகளாக ரசிகர்கள் ஆளுக்கொரு திசையில் மிதக்க ஆரம்பிப்பார்கள். பிறகு அத்தனை பேரையும் ஒரு சேரக் கட்டியிழுத்து வர ஒரு சூறாவளியின் சக்தி தேவைப்படும்.

"அப்படித்தானே...?" என்று கேட்டால் ராமகிருஷ்ணன் சாந்தமாகச் சிரித்துவிட்டுப் பேசாமலிருந்து விடுவான்.

ஆனால் சாரதாவுக்குத் தெரியும்.

பிளஸ் டூ ரிசல்ட், புரமோஷன், தண்ணீர்ப் பிரச்னை, ஒன்பதரை மணி மெகா தொடர், டாட்காம் வரன் என்று சுமறலெடுக்கும் விசாரங்களைச் சுமந்துதான் இன்று ரசிகர்கள் கச்சேரிக்கு வருகிறார்கள். அத்தனையையும் தாண்டி வித்வான் கொடி நாட்ட வேண்டும். அதுவும் திட்டமிடலின் பகிரங்கம் துளியும் புலனாகாதபடி ஆட்கொள்ள வேண்டும். கதை கேட்டு வாய் பிளக்கும் குழந்தைக்குச் சட்டென்று கன்னம் வரை நெய் மணத்துடன் பருப்பு சாதத்தை ஈஷி வைப்பதைப்போல் அந்த மூன்றாவது பாட்டு!

ராமகிருஷ்ணனுக்கு அது கை வந்த கலையாகியிருந்தது. நட்சத்திரப் பிரகாசத்துடன் ஒவ்வொரு கச்சேரியிலும் மின்னித் தெறித்த மூன்றாவது பாட்டின் ஒளியில் மனோதர்மச் சுடர்கள் அடுத்தடுத்து ஏற்றப்படுவதும் அவற்றின் கணப்பில் சக இதயங்கள் சேர்ந்து

ஜொலிப்பதுமான ரஸானுபவம், தொடர்ந்து வரும் உருப்படிகளில் உயர்ந்துகொண்டே போகும்.

இதை விவரித்து ஒருசமயம் அவள் அவனிடம் பேசியபோது, "ஏன்...? முதலும் இரண்டாவதும் என்ன பாவம் பண்ணித்தாம்...? அதையும்தான் உசுரைக் கொடுத்துப் பாடறேன்..." என்றான்.

"அப்படி இல்லை. முதல் இரண்டும் குறைன்னு கிடையாது. ஆனா, மூணாவது பாட்டு... என்ன சொல்றது... ஒரு பொண் குழந்தை, பெரியவளாகி சடார்னு வீட்டுப் பொறுப்பை ஏத்துக்கற மாதிரி – அதுதான் மொத்தத்துக்கும் பொறுப்பேத்துக்கறது இல்லியா...?"

அவளை ஏற – இறங்கப் பார்த்துவிட்டு மிருதுவாகக் கேட்டான்: "நமக்குப் பொண்ணு இல்லைன்னு இப்போ குறையா இருக்கா...?"

சட்டென்று அவள் கண்கள் நிறைந்து போயின. அந்தக் கணத்தின் அன்னியோன்னியத்தை நிரந்தரப்படுத்தும் சாட்சியாக ஒரு பெண் பிள்ளையைப் பெற்றுக்கொண்டால் கூட தேவலாமென்றிருந்தது சாரதாவுக்கு. வயதையும் வசதியையும் மீறிய ஆசை!

முதல் இரண்டு பிள்ளைகளைப் போலன்றி, பெண் அவள் அப்பாவைப் போல் பாடக் கூடும் என்ற பேராசையாகவும் இருக்கலாம்.

"பையன்களை நன்னா வளர்த்தா போதாதா...? அடுத்த வருஷம் மோகன் மெடிகல் காலேஜ் போகணும்னா எங்கே லோன் போடறது...?"

ராமகிருஷ்ணன் இம்முறை மௌனமானது பதில் தெரியாததால்.

# பாட்டு

**சா**ரதாவின் சாமர்த்தியத்தினாலும் எளிமையினாலும் அலுங்காமல் குடும்பம் ஓடுகிறது. அடிப்படைத் தேவைகளுக்கு அபாயமில்லை. அதற்கடுத்த வட்டத்திலும் சௌகரியமாக வலம் வர முடிகிறது. டீ.வி, ஃப்ரிட்ஜ், வாஷிங் மெஷின் என்ற மத்திய தர கட்டாயங்கள். 900 சதுரடியில் சங்கீத விலாசம்!

சமுதாயத்தின் எதிர்பார்ப்புகள் அவற்றால் பூர்த்தியாகவில்லை.

"என்ன சாரதா? மோகனை இன்னமும் பல்லவா ஸ்கூலுக்கு அனுப்பறே...? டூ வீலர் வாங்கித் தரக் கூடாதா...?"

யோசிக்காமல், திட்டமிடாமல், பணத்தையோ பிரதிகூலங்களையோ எண்ணிப் பார்க்காமல் செலவு செய்கிற ஒரு பெருங் கூட்டம், தங்களை முந்திக் கொண்டு முன்னேறிவிட்டது தெரிகிறது.

ஆனால் சாரதா வருந்தியதில்லை; சொல்லிக் காண்பித்ததில்லை. 'இரைக்க இரைக்க அந்தப் பெருங்கூட்டத்துடன் ஓடவில்லை என்று யார் அழுதார்கள்?' என போலிக் கசப்புணர்வில் குளிர் காயவுமில்லை.

எனினும், ராமகிருஷ்ணனின் உழைப்புக்கேற்ற ஊதியம் உவந்து அளிக்கப்படு

சீதா ரவி





"செய்ய வேண் டியதை உடனே செய்'னு ஆஃபீஸ்லே போர்டு வச்சது தப்பாப் போச்சா...ஏன்?"

"கேஷியர் அஞ்சு லட்சத்தோட காணாமப் போய்ட்டாரு!"

— தஞ்சை தாமு



வதில்லையே என்கிற ஆதங்கம் இருந்தது. 'தன் தொழிலுடன் அவன் கொண்டுள்ள உறவே விலை மதிப்பற்ற சன்மானம்' என்று அந்தக் குறையையும் துடைக்கக் கற்றிருந்தாள்.

ஒரு தினத்தின் எந்த நேரத்திலும் அவ னால் லயித்துப் பாட முடிகிறது. ராகங்கள், சாஹித்யங்கள், லயவின்யாசங்களுடன் நின்று விடுவதில்லை இந்த உத்தியோகம். சதா உயர் வைத் தேடும்படி உந்திக் கொண்டிருக்கிறது.

இந்த உறவைப் புரிந்து கொள்ளாத உலகத்திடம் அதிகம் எதிர்பார்க்க முடியாது. ஆனால், மூன்றாவது பாட்டு முடிந்ததுமே கச்சேரியை நிறுத்திப் பேச ஆரம்பிப்பார்கள் என்று சத்தியமாக எதிர்பார்க்கவில்லை.

"நமது கீதாஞ்சலியின் நண்பர் சுந்தர மூர்த்தி... இன்று அவர் தலைமை வகிக்க வந்திருப்பது நமது பெரும் பாக்கியம்..." என்று சபா செயலர் பேச ஆரம்பித்து ஐந்து நிமிடங் களாகிவிட்டிருந்தன.

ராமகிருஷ்ணனின் முகத்தைப் பார்த்தாள் சாரதா. உணர்ச்சிகளுக்கு முகமூடி போட்டு மறைத்திருந்தான். தோள்களின் இறுக்கத்திலும் மடியில் பொருத்திக் கொண்ட கைவிரல்கள் கோத்துக் கிடந்த விதத்திலும் கற்பனை ஊற் றுக்கண்களை அடைத்து வைத்த அவஸ்தை தெரிந்தது.

சீஃப் கெஸ்ட் சுந்தரமூர்த்தியிடமிருந்து நகர்ந்து, நாயனார் சுந்தரமூர்த்தியிடம் தாவி யிருந்தார் பேச்சாளர்.

இருவரையும் ஒப்பிட்டுப் பேசிய அவரது அறிவீனத்தைக் கண்டு திகைத்து, மீண்டும் ராமகிருஷ்ணனைப் பார்த்தபோது அவன் கண்கள் இறுக மூடியிருந்தன.

"ஆகவே நண்பர்களே, நமது சுந்தரமூர்த்தி போன்றோரின் வள்ளன்மையினால்தான் கீதாஞ்சலி நடக்கிறது. இசை ரசிகர்களும் கலைஞர்களும் அவருக்கு என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறார்கள். எத்தனையோ விருதுகள் தருகிறார்கள்... ஸ்பான்ஸருக்கு ஒரு விருது தருவதானால் சுந்தரமூர்த்திக்கே தர வேண்டும். சென்னையின் மூத்த சபாக்கள் இதைச் செய்யத் தவறினால், கீதாஞ்சலி நடத் திக்காட்டும் என்று கூறி இப்போதைக்கு இந்தப் பொன்னாடையை மட்டும் அணி வித்து, சுந்தரமூர்த்தியைப் பேச அழைக் கிறேன்..."

ஏழரை நிமிடங்கள் ஏற்கெனவே கடந் திருந்தன. கூட்டம் இலேசாக நெளிந்து கொண் டிருந்தது. மேடையில் மட்டும் ராமகிருஷ் ணனும் சக கலைஞர்களும் அசையாது இருந்தார்கள்.

முதல் வரிசையிலிருந்த சாரதா, சுந்தர மூர்த்தியின் கையிலிருந்த காகிதக் கற்றையைக் கவலையோடு கவனித்தாள். நீளத் தாளில் சுமார் பதினைந்து பக்கங்கள். பக்கத்துக்கு அரை நிமிடம் என்றால்கூட, இன்னும் ஏழெட்டு நிமிடங்களாகிவிடும்.

இந்நேரம் வராளி ஆலாபனை முடித்து 'ஆழி மழைக் கண்ணா' ஆரம்பித்திருக்க வேண்டும். அன்று காலை ராமகிருஷ்ணன் வராளி ஆலாபனை செய்தது ஞாபகத்திற்கு வந்தது. கடுகு வெடிக்கும் ஓசையும், மிளகாய் நெடியும், குக்கரில் இலேசாகப் போட்டுக் கொண்ட சூடும் எட்டே காலுக்குள் இரண்டு சாப்பாட்டு டப்பாக்கள் கட்டியாக வேண்டும் என்ற பரபரப்பும் பக்கம் பக்கமாக அழுத்திக் கொண்டிருந்த நேரம்... அத்தனை புலன் களையும் வென்று ஆட்கொண்டது அந்த வராளி.

"ஆழி மழைக் கண்ணா ஒன்று நீ கை கரவேல்..." என்று பாசுரத்தை அவன் ஆரம் பிக்க, பொலபொலவென்று வடிந்த கண்ணீரில் சமையலறை பார்வையிலிருந்து மறைந்து போயிற்று. மயில் பீலியும் மேக வர்ணமுமான ஒரு மன பிம்பம் தோன்றி அவளைக் குளிர் வித்தது.

இன்று நேற்று கேட்கும் புதுப் பாட் டில்லை. ஆனால் ஒவ்வொரு முறை கேட் கும்போதும் முதல்முறையின் தாக்கம்.

சொல்லப் போனால் தாக்கம் அதிக மாகியிருக்கிறது. தனக்கு வயதாகி விட்டது என்பது மட்டுமே காரணமன்று. ராம கிருஷ்ணனின் உழைப்பும் வளர்ச்சியும்கூட

உள்ளத்தைப் பணிய வைக்கிறது.

சுந்தரமூர்த்தி தமது இளம் வயது குறித்துப் பேசிக்கொண்டிருந்தார்:

"சீனிவாசனும் திருநாகேஸ்வரம், நானும் திருநாகேஸ்வரம். சின்ன வயசுல கோலி விளையாடுவோம், பம்பரம், கில்லிதாண்டு... எல்லாத்துலயும் அவன்தான் ஜெயிப்பான். இந்த கீதாஞ்சலி நடத்துறதுலயும் ஜெயிச்சுக் காட்டியிருக்கான்..."

முட்டுக் கொடுத்து நடுவீதியில் நிறுத்திய தேராக மூச்சுப் பிடித்துக் கலைஞர்கள் மேடையில் அமர்ந்திருக்க, சுந்தரமூர்த்தியின் சொந்த சாஹித்யம் நீண்டு, நெளிந்து தொடர்ந்தது.

கச்சேரிகளிடையே பேச்சைப் பொறுத்துக் கொள்வது கலைஞர்களுக்கும் ரசிகர்களுக்கும் பழக்கமாகிப் போயிருக்கிறது.

"எதுக்காகப் பேசணும்..." ஒருமுறை சாரதா கோபமாகக் கேட்டபோது அவளுக்கும் ராமகிருஷ்ணனுக்குமிடையே ஒரு நீண்ட விவாதம்.

"நமக்கது அவசியமில்லேன்னு தோணும். ஆனா பணம் கொடுக்கறவரை மேடையில ஏத்தி ஜனங்களுக்கு அறிமுகப்படுத்தியாகணும் இல்லையா...?"

"ஏன்? ஏன்...? 'எங்க உப்புத் தூளை வாங்குங்க, எங்க பெருங்காயத்தைப் போட்டுக் குழம்பு வையுங்க'ன்னு ஹால்ல துணித் தோரணம் கட்டி வைக்கறது போதாதா? குடுக்கற காசுக்கும் அந்த விளம்பரத்துக்கும் சரியாப் போயிடுது... அப்புறம் பேச்சு எதுக்கு...?"

"விளம்பரமானாலும் குடுக்க மனசு வரணுமில்லே... அந்த மனசுக்காகத்தான் மேடைன்னு வைச்சுக்கோயேன்..."

சாரதாவுக்கு இதில் உடன்பாடில்லை. சொந்தப் பணத்தையா கொடுக்கிறார்கள்...? கம்பெனி பணம். பெரும்பாலும் பெரிய நிறுவனங்கள். பொதுமக்கள் ஆதரவிலும் முதலீடிலும் ஊழியர்கள் உழைப்பிலும் நடக்கின்ற ஸ்தாபனங்கள்.

"கம்பெனி பணம்ங்கறது பொதுப்பணம் தானே. அதைக் கொடுக்கறதுல தனி ஒருத்தருக்கு என்ன பெருமை...? சங்கீதம்னா வீசை என்ன விலைன்னு கேட்கற ஜன்மங்களையெல்லாம் கூப்பிட்டு மேடையேத்தி, தவத்தைக் கலைக்கற மாதிரி கச்சேரிக்கு நடுவுல பேசவிட்டு..."

இப்போதும் அதுதான் நடந்து கொண்டிருந்தது. எங்கெங்கோ அலைந்து திரிந்த



"தெனாலிராமன் எங்கே?"
"இண்டர்நெட்டில் ஜோக் படித்துக் கொண்டிருக் கிறார் அரசே!"
— வத்திராயிருப்பு
தெ. சுந்தரமகாலிங்கம்



சுந்தரமூர்த்தியின் பேச்சு, வித்வான்கள் ஏன் பொருளுணர்ந்து பாடுவதில்லை? என்று நக்கலாகக் கேள்வி எழுப்பி, அவர்களுடைய அக்கறையின்மையை, உச்சரிப்பு தோஷங்களைச் சாடிக் கொண்டிருந்தது.

ராமகிருஷ்ணனைப் போன்றதொரு கலைஞரை மேடையில் அமர்த்தி விட்டு இத்தகைய அனர்த்த பிரசங்கத்தை அனுமதிக்கிறோமே என்ற உணர்வு துளியுமின்றி, சுந்தரமூர்த்தியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார் செயலர்.

சாரதாவுக்குள் ஆதங்க அலைகள் மோதிக் கொண்டிருந்தன. வல்லின மெல்லினங்களும் வடமொழியின் கம்பீரமும் சுந்தரத் தெலுங்கின் லலிதமும் இந்தச் கச்சேரியின் முதல் மூன்று உருப்படிகளிலேயே பதிவாகிவிட்டிருந்தன. அதிலும் அந்த மூன்றாவது கீர்த்தனையில் நிரவல்... மொழியையும் இசையையும் ஊடுபாவாக்கி நெய்து...

"பொருளுணர்ந்து பாடுங்கள்! வித்வான்களைக் கேட்டுக் கொள்கிறேன் – கூட்டத்துக்காகப் பாடாதீர்கள்; கைதட்டலுக்காகப் பாடாதீர்கள்; புகழுக்காகப் பாடாதீர்கள்; பணத்துக்காகப் பாடாதீர்கள். ஆத்ம திருப்திக்காகப் பாடுங்கள். இறையுணர்வு பெருகவும் பெருக்கவும் பாடுங்கள்..."

சுந்தரமூர்த்தி அடுக்கிக் கொண்டிருந்தார்.

– தொடுத்து சார்த்திய மாலையை அகற்றி, அதன் மலர்களை உருவிப் பிய்த்து, அந்த மூர்த்திக்கே ஓர் அர்ச்சனை! எப்பேர்ப்பட்ட மூர்க்கம் இது!

ராமகிருஷ்ணனைத் தவிப்புடன் நோக்கினாள் சாரதா. அவன் பார்வை அரங்கின் எதிர்ச்சுவரில் ஒரு தூரத்துப் புள்ளியில் நிலை



"ஐம்பது வயசானாலே மாடிப் படியில் ஏறும்போது மூச்சு வாங்கறது சகஜம்தான்; கவலைப்படாதீங்க."

"முதல் படியில் காலை வைக்கும்போது கூடவா மூச்சு வாங்கும் டாக்டர்?"

— ஞா. ஞானமுத்து



குத்தி நின்றிருந்தது. செயலாளர் சீனிவாசனின் முகத்தைப் பார்த்தான். சுந்தரமூர்த்தியிடமிருந்து கீதாஞ்சலிக்கு ஒன்றரை லட்சம் ரூபாய் நன்கொடை பெற்றதை அறிவித்தபோது விரிந்த புன்னகை அப்படியே உறைந்து போயிருந்தது.

ம்ருதங்கம் கேசவன் இலேசாக முன்னே சாய்ந்து ராமகிருஷ்ணனைத் தொட்டழைத்து ஏதோ சொன்னார். பதிலுக்கு அவன் ஒரே ஒருமுறை கண்களை அழுந்த மூடித் திறந்து கரம் கூப்பினான். வயலின் குமாரசாமி விரல்களுக்குச் சொடுக்கெடுத்துக் கொண்டிருந்தார்.

நெஞ்சுக் குழியில் கோபத்தோடு துக்கத்தையும் போட்டழுத்தியதில் சாரதாவுக்குப் படபடவென்று வந்தது. பக்கத்து இருக்கைக்காரர்கள் பார்த்து விடாமலிருக்க வேண்டும்.

'கடவுளே! பணமென்பதாக ஒன்று ஏன் ஏற்பட்டது? இந்த சங்கீதம் போன்ற விலை மதிப்பற்றதொரு பொருளை விலை பேசவா...? எத்தனை உயர்வாய்ப் பாடினாலும் பசிக்காமலிருப்பதில்லை. சாப்பிட மட்டுமின்றி ஜீவிதத்தின் இதர தேவைகளுக்கும் பணம் வேண்டியிருக்கிறது. அதைச் சம்பாதிக்க ஒரு மேடை வேண்டியிருக்கிறது. அந்த மேடையை வழங்கவும்கூட அதே பணம்தான் துணை நிற்கிறது. இத்தனைக்கிடையிலும் கலைஞன் உயர்வைத் தேட வேண்டும். உரசி உரசிப் பார்த்து ஏறுமாறாக எடை போடும் ஒரு கூட்டத்தைச் சதா எதிர் கொள்ள வேண்டும்... அவ்வாறு எதிர்கொண்டு ஜெயிக்கும் பக்குவத்தைப் பெறுவதற்காகவே தினமொரு முறை ராமகிருஷ்ணனின் காலைத் தொட்டு வணங்கலாம்!'

**த**ம்பூரா சுருதி மீண்டும் ஒலிக்க ஆரம்பித்தது. மேடையிலிருந்த கலைஞர்கள் குறித்து மருந்துக்கும் ஒன்று கூறாமல் அமர்ந்துவிட்டிருந்தார் சுந்தரமூர்த்தி.

இப்படிப்பட்ட அபத்த இடைவெளிக்குப் பிறகும் அடைக்கப்பட்ட கற்பனை ஊற்றுக் கண்கள் திறந்தாக வேண்டும். மீண்டும் சுரந்தாக வேண்டும்...

வராளி பெருக்கெடுத்தபோது சாரதா ஆடிப்போனாள். கரு முகில்களின் கனமும் நிதான அசைவும் பூமிக்கு இறங்கி வந்து விட்டாற்போன்ற அந்த ஆலாபனை குமாரசாமியை உசுப்பிவிட்டு வயலினில் பதில் சொல்ல வைத்தது. 'ஆழி மழைக் கண்ணா...' ஆரம்பிக்க, சாரதா பக்கத்து இருக்கைக்காரர்களை மறந்து கண்ணீர் மடைகளைத் திறந்து விட்டு நிறைவு கண்டாள்.

**வீ**டு திரும்பியதும் பையன்கள் கேட்டார்கள்.

"என்னம்மா? அழுதியா...?"

"ஷ்ஷ்ஷ்... சாப்பிடலாமா?"

"ஐயோ! அப்பாவோட பாட்டு இன்னிக்கு அவ்வளவு கொடூரமா? முகாரிதான் மெயினா...?"

வயதைப் பாராமல் மோஹனை ஓங்கி ஓர் அடி வைத்திருப்பாள் சாரதா. அதற்கு இடங்கொடாது அவர்களை அடுத்த அறைக்குத் தள்ளிக்கொண்டு போய்விட்டான் ராமகிருஷ்ணன்.

சமையலறையில் ரசத்தைச் சுட வைக்கையில், சுவாமி அலமாரியில் வைத்திருந்த உறை கண்ணில் பட்டது. கீதாஞ்சலி சபாவின் சன்மானம். நாளை வங்கியில் கட்டியாக வேண்டும். எடுத்து எண்ணிப் பார்த்தாள் சாரதா. பதினைந்து நூறு ரூபாய் நோட்டுகள்! மீண்டும் எண்ணினாள். பதினைந்துதான்! ஏழு வருடங்களாக அதே தொகை!

புரவலர்கள், ஒன்றரை லட்சம் நன்கொடை, மூன்றாவது பாட்டு முடிந்ததுமே நிறுத்தும் அதிகப் பிரசங்கம்... சிகரமான அவமானம் இந்தச் சன்மான உறை.

மிகுந்த கோபத்துடன் சமையற் கட்டிலிருந்து வெளியேறி ராமகிருஷ்ணனைத் தேடினாள். உள் அறையின் மேஜையருகே விளக்கொளியில் குறிப்பெழுதிக் கொண்டிருந்தவன் அவளைப் பார்த்ததும் மலர்ச்சியுடன் கேட்டான்.

"நாளைக்கு ஸ்வர்ணா ஃபைன் ஆர்ட்ஸ்ல பாடணும். வர்ணம், 'வாதாபி கணபதி' போட்டுட்டேன். மூணாவது பாட்டா எதைப் போடலாம்...?" ○

# ஆராரோ ஆரிரரோ...

ஆபிஸில் மார்க்கெட்டிங் மீட்டிங் ஆரம்பித்த ஐந்தாவது நிமிடம் கண்கள் பாலே டான்ஸ் ஆட, தூக்கம் ஜிவ்வென்று இழுக்கிறது. பஸ்ஸில், ரயிலில் போனாலோ, இருக்கை கிடைத்ததுமே, தலை தொங்கித் தொங்கி விழ, சுகமாய்த் தூக்கம். சினிமா போனால், கேட்கவே வேண்டாம். பாதி படத்துக்கு மேலே டால்பி டிஜிட்டல் சவுண்டுக்கு இணையான குறட்டை. ஆனால் இரவு நேரத்தில், 'தூங்கலாம்' என்று தீர்மானித்துக் கொண்டு, படுக்கையில் தலை சாய்த்தால், வாழ்ந்தது, வீழ்ந்தது, வந்தது, நொந்தது என ஏதேதோ நினைவுக்கு வந்து அரை கிலோ மீட்டர் தூரத்தில், மங்கலாய் வந்து கொண்டிருந்த தூக்கத்தையும் விரட்டிவிட... இரவெல்லாம் பக்கத்து வீட்டு இலந்தை மரத்து ஆந்தைக்குத் துணையாய் கொட்ட, கொட்ட விழித்துக் கொண்டு, படுத்திருப்பது... உண்மையிலேயே அவஸ்தைதான்.

**'தூக்கமின்மை' - பெரிய வியாதிகளுக்குப் பிள்ளையார் சுழி போட்டுவிடும் என்கிறார்கள் மருத்துவர்கள். ஆகவே... மேற்கொண்டு படியுங்கள்...**

**தூக்கம் தேவைதானா?**

*கண்டிப்பாக!*

★ சராசரி மனிதனுக்கு எட்டு மணி நேர தூக்கம் அவசியம். மனித உடம்பு விசித்திரமானது. நம்முடைய உடம்புக்குள், பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப, நாமே ஒரு இரகசிய உயிர்க் கடியாரத்தை 'செட்' செய்து வைத்திருக்கிறோம். அது இருபத்து நான்கு மணி நேரமும் ஓடிக் கொண்டே, உடல் வெப்பத்தையும், மெடபாலிஸத்தையும் சீராக்கிக் கொண்டிருக்கிறது. பகல் முழுவதும் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருக்கும் உயிர்க் கடியாரம், மாலை கவியத் தொடங்கியதும், தூக்கத்தைத் தூண்டிவிடுகிறது. இரவு நெருங்க, நெருங்க, உடல் சூடு தானாகவே குறையத் தொடங்க, தூக்கம் அதிகமாகிறது. வெளியே பரவும் இருளின் அடர்த்தியும் ஏகாந்தமும் 'மெலடோனின்' என்ற ஹார்மோனைச் சுரக்கச் செய்ததும், தூக்கம் வந்தே விடுகிறது.



★ 'உஷார்! காலை ஐந்து மணிக்கு எழுந்திருக்கணும்' என்று அலாரத்தைச் சூட்சுமமாகப் பொருத்திவிட்டு, உயிர்க் கடியாரமும் இலேசாய் அசந்து விடுகிறது.

★ தூக்கம் நல்லபடியாய், சொன்ன நேரத்துக்கு வர என்னதான் செய்ய வேண்டும்?

★ மன அழுத்தம், அதிக கவலை, அளவுக்கு அதிகமான காபி, டீ, மது அருந்துதல், வயிறு முட்டச் சாப்பிடுவது போன்றவை இருந்தால் தூக்கம் வர முரண்டு பிடிக்கும். இவற்றைத் தவிர்த்தாலே போதும்.

★ இரவில் தூங்குவதற்கு என பிரத்யேகமாய் ஒரு நேரத்தை வகுத்துக் கொண்டுவிட வேண்டும். எந்த மந்திரி, எந்தத் தொகுதி போனாலும் அல்லது எந்த ராஜா எந்தப் பட்டணம் போனாலும், 'ஷெட்யூல்' மாறவே கூடாது. ஒரு வேளை, தவிர்க்க முடியாத காரணங்களினால், இரவு தூங்குவதற்கு அரை மணி நேரம் தாமதமானாலும், மறு நாள் காலை, அரை மணி நேரம் லேட்டாக எழுந்து கொள்ளாமல், வழக்கமான நேரத்தில் விழித்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் உயிர்க்கடியாரம் 'ரீ அட்ஜெஸ்ட்' செய்து கொள்ள முடியும்.

★ தினமும் காலையில், ஏழு மணி இளம் வெயில், முப்பது நிமிடம் உங்கள் மீது படும்படி, பார்த்துக் கொள்ளுங்கள். உயிர்க் கடியாரத்துக்கு மிகவும் தேவையான வைட்டமின் 'டி' சத்து கிடைத்ததும், உடம்பு ரொம்ப சுறுசுறுப்பாகிவிடும். ஒரு வேளை, காலை நேரம் உங்களுக்குத் தோதாக இல்லை என்றால் மாலை ஆறு மணி வெயிலிலாவது உலவுங்கள்.

★ இரண்டு மணி நேரத்துக்குக் குறையாமல் உங்களைச் சுறுசுறுப்பாக வைக்கக் கூடிய ஏதேனும் வேலையைச் செய்து முடியுங்கள். உடம்பில் தோன்றும் அசதி, தூக்கத்துக்கு முன்னுரை எழுதும்.

★ தூக்கம் வரவில்லை என்றால் கட்டாயப்படுத்தாதீர்கள். புத்தகம் படிப்பது, டீவி. பார்ப்பது, கடிதங்கள் எழுதுவது போன்ற கண்களுக்குக் களைப்பு உண்டாக்கும், விஷயங்கள் செய்தாலே போதும். தூக்கம் தானாய் வரும்.

★ ஒரு தாளில், உங்கள் பிரச்னைகள், மறுநாள் செய்து முடிக்க வேண்டிய வேலைகள் பற்றி எழுதுங்கள். உங்கள் மனைவி அல்லது குடும்ப உறுப்பினர்களிடம் அதுபற்றி விவாதம் செய்யுங்கள். மனரீதியாக, அந்த வேலை பாதி முடிந்து விட்டதான உணர்வு வந்துவிடும். அப்புறம், மறு நாளைப் பற்றிய அதிக சிந்தனை ஏதும் இல்லாமல், மனம் இலேசாகிவிடும். தூக்கமும் ஓடோடி வந்து விடும்.

★ மனச்சோர்வு, கவலை, டென்ஷன் போன்றவற்றால் பாதிக்கப்பட்டிருந்தால் 'ரிலாக்ஸேஷன் டெக்னிக்' மூலம் உடலைத் தளர்த்திக் கொள்ள வேண்டும். இம்முறையை அறிய தியான மையங்களையோ 'ஸ்லீப் தெரபிஸ்ட்'டையோ நாடுவது நலம்.

★ தினமும் தூங்கப் போகுமுன் சூடாக ஒரு தம்ளர் பாலை அருந்திவிட்டுத் தூங்கச் செல்லுங்கள். தூக்கத்தைத் தூண்டும் ட்ரிப்டோஃபேன் எனப்படும் ஒரு வித அமினோ அமிலம் பாலில் அபரிமிதமாக இருப்பதால், தூக்கம் உடனே வந்துவிடும்.



★ இதையெல்லாம் செய்து பார்த்தும் தூக்கம் வரவில்லையா? பாட்டி கையால் முனீஸ்வரன் விபூதியைப் பூசிக்கொண்டு, ஆபீஸ் ஃபைலைத் தலைக்கு வைத்துக் கொண்டபடியே, மனைவியிடம் பேச்சுக் கொடுங்கள். அவங்க 'போர்' அடிக்கத் தொடங்கியதும், நித்திரா தேவி, தனது இஷ்ட மித்ர பந்துக்கள் சகிதமாக, கிராபிக்ஸ் டெக்னிக்கில் வந்து...

என்ன தூங்கிட்டீங்களா?

- ஆர். லலிதா

# ஆப்பிள் பச்சரிசி மாங்காய்!



‘இமாம் பசந்து’ எனப்படும் சிறப்பு உயர் ஒட்டு ரக மாம்பழம் ஸ்ரீரங்கம் தாத்தாச்சாரியார் தோட்டத்தில் மட்டுமே சுவை மாறாமல் விளைந்து வருகிறது. ஒரு டஜன் சுமார் ஐந்நூறு ரூபாய்!

இந்தப் பழங்கள் அப்படியென்ன ஸ்பெஷல்?

“இயற்கை உரம் விட்டு - தேவைப்படும் காலங்களில் தேவைப்படும் அளவு தண்ணீர் விட்டு - மாம்பூ பூக்கும் சமயங்களில் ஹாப்பர் பூச்சிகளிடமிருந்து காப்பாற்றி, கண்காணித்து வளர்த்து வருகிறோம்.

“ஆப்பிள் பச்சரிசி மாங்காய்’ எங்கள் தோட்டத்தின் தனிச் சிறப்பு. இதனை மாங்காயாகவே சுவைத்துச் சாப்பிடலாம். இம்மியளவும் புளிக்காது. மாவு போலக் கரையும். ஆப்பிள் போல ருசிப்பதால் இதற்கு ‘ஆப்பிள் பச்சரிசி மாங்காய்’ எனப் பெயர். இவ்வகை இங்கு மட்டுமே விளைந்து வருவதாகும்.

“இருபது வகையான மாம்பழங்கள் எங்கள் தோட்டத்தில் விளைவிக்கப்பட்டாலும் இமாம்பசந்து, பங்கனப்பள்ளி போன்ற உயர் ஒட்டு ரக மாம்பழம் எங்கள் ஸ்பெஷாலிட்டி. வெளியூர்வாசிகள் பலரும் எங்களிடமிருந்து இமாம்பசந்து ஒட்டு மாஞ்செடிகளை வாங்கிச் சென்று தத்தம் தோட்டத்தில் வளர்த்து உற்பத்தி செய்தபோதிலும் இத் தோட்டத்து இமாம் பசந்து ருசியை அவை இதுவரை தந்ததில்லை. காரணம், இத் தோட்டத்து மண் வாகு மட்டுமல்ல எங்கள் தொடர் கண்காணிப்பும் சலியாத பராமரிப்பு முறைகளுமே. எங்கள் தோட்டத்து மாம்பழங்கள் அனைத்தும் இயற்கைச் சூழலில் வைக்கோல் வெப்பத்தினால் பழுக்க வைக்கப்படுகின்றன. இதனால் மாங்கனிச் சுவையும், தன்மையும் நீண்ட நாட்களுக்கு கெடுவதில்லை” என்று சொல்கிறார் ஸ்ரீரங்கம், தாத்தாச்சாரியார் தோட்டத்தின் உரிமையாளர்களில் ஒருவரும், அதன் நேரடி பராமரிப்பாளருமான எஸ். ரெங்கராஜன்.

கட்டுரை, படங்கள்:
**இருள்நீக்கியான்**

பர்வதாவைப் பார்க்கிற எவரும் அவளைச் சுலபமாக மறந்து விடுகிறார்போல் இருக்கவே இருக்காது.

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கோணத்தில் அவளோடு தோழமை இருக்கும்.

அவள் நட்டு வைத்திருக்கிற செடியோடு கூடத் தோழைமை பூணத் தோணும்.

இதம் என்றால் என்ன, பதம் என்றால் என்ன?

பர்வதாவைப் பார்த்தாலே போதும், புரிந்து கொண்டு விட முடியும்.

அவள் வீட்டு முற்றத்தில் மரம் போல் பெரிய அளவினதாகவும் இல்லாமல், செடி போன்று சிறிய அளவினதாகவும் இல்லாமல் நடுத்தரவாக்கில் ஒரு பவளமல்லிகைத் தாவரம் உண்டு.

இருட்டுகிறபோது முற்றம் முழுவதும் மணக்க மலர்கள் விரியத் துவங்கும்.

இரவு முழுவதும் அதன் சுகந்தம் முற்றம் தாண்டி வீதிக்கும், வீட்டுக்குள்ளும் கூடப் பரவும், காற்றின் சேவையால்.

அதன் சுகந்தத்தில் மெய் மறக்கிறபோதுகூட, மறந்துவிடாமல் வாயு தேவனுக்கு நன்றி சொல்கிற பழக்கம் அவளுக்கு உண்டு.



பரிபூரண சுந்தரப் பெருமாள் கோவிலில் சுப்ரபாதம் ஒலிக்கத் துவங்கும் அந்த அதிகாலை வேளையில் கண்டிப்பாக அவள் முற்றத்தில் வந்து நிற்பாள்.

பவளமல்லிகைத் தாவரம் மேலே குடை பிடித்தாற் போல் விரிந்திருக்க, நேற்று மாலை சுத்தம் செய்யப்பட்ட மண் தரையில் மலர்கள் அனைத்தும் வட்டக் கோலமிட்டாற்போன்று, வெண்ணிறப் பூக்களும் பவளநிறக் காம்புகளுமாய் மாறி மாறி அமைந்து விழுந்து கிடக்கும்.

அதைக் காண்கிறபோதே, அந்தக் காட்சியை அப்படியே மனத்துள் வாங்கிக் கொள்வாள்.

அப்புறம் அந்த மென் மலர்களையெல்லாம் ஒவ்வொன்றாய்ப் பொறுக்கிப்

பித்தளையினால் ஆன, பளபளவென்று மின்னுவது போன்று விளக்கப்பெற்ற சிறு பெட்டியில் சேகரித்து, விளக்கு மாடம் அருகே கொண்டு போய் வைப்பாள்.

அவளின் தினம் இப்படித்தான் துவங்கும்.

மலர்களைப் பொறுக்குகிற போதே சித்தியை மனதாரப் போற்றிக் கொள்வாள்.

தெய்வானைச் சித்திக்குச் சொந்த ஊரே தென் காசிதான்.

பர்வதா என்றால் அப்படி அன்பாக இருப்பாள்.

வருடத்திற்கு இரண்டு மூன்று முறை தவறாமல் வருவது உண்டு. போன வருடத்தில் அப்படி ஒருமுறை வந்தபோதுதான், இந்த பவளமல்லிகைச் செடியை, சிறு பாலிதீன் பையில் நாற்றாக வாங்கிக் கொண்டு வந்திருந்தாள்.

குற்றாலத்தில் வாங்கினாளாம்.

பவளமல்லிகையை நூலில் கோத்து மாலையாக ஆக்குகிறபோது, அந்த முகம் தெரியாத செடி விற்பனையாளனுக்குக்கூட மனதார நன்றி சொல்லிக் கொள்வாள் பர்வதா.

அவளுக்கு இப்படி அதிகாலைப் பொழுதிலேயே சந்தோஷம் உண்டு பண்ணிக் கொண்டிருக்கிற செயலைச் சேவித்துக் கொள்ளும் மானசிகமாக.

ஆம், சேவித்துவிட்டுப் போகத்தான் தோன்றும் அவனுக்கு.

பளபளவென்று மினுங்கும் மஞ்சள் முகமும், நெற்றியை அலங்கரிக்கும் அரக்கு வண்ணக் குங்குமப் பொட்டும், ஒற்றைக்கல் மூக்குத்தியும், காதை மறைத்தும் மறையாமலுமாய்த் தொங்கும் கோடலி முடிச்சுக் கொண்டையின் சூழ்ந் கற்றைகளும், தடிமனாய்த் தனித்துத் தெரியும் மங்கலச் சரடும், இலேசான வண்ணக் கைத்தறிப் புடைவையும், கௌரவமாய் உடம்பை மறைத்திருக்கும் ஜாக்கெட்டும், கூந்தல் நுனியில் தவழும் சிறு பூச்சரமும், கலகலவென்று ஒலி எழுப்பும் கண்ணாடி வளையல்களும், சன்னமாய்ச் சப்திக்கும் மெட்டிகளும்... கூடி... எல்லாமுமாய்..., பால்கார விசுவநாதனுக்கு அவளை மஹாலெட்சுமியாகவே காண்பித்துவிட, சேவிக்காமல் போகத் தோன்றுமா?

தோன்றாது.

ஒரு நாளேனும், ஒரு நிமிடம் கூட முன்னே பின்னே ஆகாமல் மிகச் சரியான வேளைக்கு வந்து பாலை ஊற்றிவிட்டுப் போகிற விசுவநாதனுக்கும் அவள் ஒரு புன்னகைப் பரிசும் தருவதுண்டு.

எதிர்வீட்டு கோமு

# பூவிலங்கு

**உமா கல்யாணி**

செய்வதற்கு ஆதாரமானவன் அவன்தானே!

வெளியில் சொன்னால், சிரிப்பார்கள்!

அதனால் சொல்லாமல், நினைத்துக் கொள்வாள்.

பால் சைக்கிளின் மணி ஓசைக்கு, பாத்திரத்தோடு வாசலுக்கு விரைந்து வருவாள்.

கடிகாரம் பார்க்காமலேயே மணி ஆறு என்பது புரிந்து போகும்.

பால்காரனின் வருகை நேரம் அத்தனை கச்சிதம்.

பாலை ஊற்றுகிறபோதே அவனது கண்கள் பர்வதாவின் முகத்தையும் பார்த்துச் அத்தை, பால் வாங்க வருகிற போது மட்டுமல்லாமல், காய்கறிக்காரி கூடையை இறக்குகிற போதும் பர்வதாவிடம் பேச என்று நேரம் ஒதுக்கி இருப்பாள்.

தனது மருமகள் நாராயண வடிவுக்கு, நரசிங்க வடிவு என்று பெயர் வைத்திருக்கலாம் என்று எண்ணிக் கொள்வாள்.

அத்தனை கொடுமை!

'பர்வதாவிடம் நின்று நான்கு வார்த்தைகள் பேசி விட்டுப் போனாலே, மனது நிரம்பி வழியும்' என்று கோமு அத்தை அடிக்கடி அக்கம் பக்கத்தாரிடம் கூறுவ




**''இந்தப் படத்தோட நிலைமை அவ்வளவு மோசமா போயிடுச்சா?''**

**''ஏன்?''**

**''வெற்றிகரமான நூறாவது மணி நேரம்னு போஸ்டர் அடிச்சு ஒட்டியிருக்காங்களே!''**

**— தாரமங்கலம் மா. மகேஷ்**



துண்டு.

அவர்களும் அதையே பிரதிபலிப்பார்கள்!

ஆட்சேபம் என்பது எங்கிருந்தும் வராது!

சின்னக் குழந்தைகளுக்குக் கூட பர்வதா அக்கா, ஒரு பாசமலர் அக்காதான்.

**சா**க்கடை அள்ள வருகிற வேலாயிக் கிழவியும் அவளுக்கு பந்துஜனம்தான்.

உள்ளே கூட்டிப் போய் உட்கார வைத்துப் பலகாரம் கொடுத்துச் சாப்பிடச் சொல்லித்தான் அனுப்புவாள்.

தபால்காரருக்குத் தாகம் எடுப்பதே பர்வதா வீட்டருகே வரும்போதுதான்.

மோர் இல்லாவிட்டால் உப்புப் போட்ட நீராகாரமாவது கொடுத்துத்தான் வயதான தபால் தாத்தாவை அனுப்புவாள். மழைக் காலம், குளிர்காலம் என்கிறபோது காபி, டீ என்று கூட மாறிக் கொள்ளும்.

''மகராஜியா இருக்கணும்மா'' என்று வாழ்த்தி விட்டே தபால்தாத்தா போவார்.

எல்லாவற்றுக்கும் புன்னகைதான் பதில்.

''என்ன தலைபோற வேலை கிடந்தாலும், யார் வீட்லயாச்சும் ஏதாவது ஓர் ஆத்திரம், அவசரம்ன்னால், அப்படியே போட்டுப் போட்டு முன்னாலல்ல வந்து நின்னு கூட மாட உதவி பண்ணுவா மகராஜி'' என்பான் ஊர்ப் பண்டுவன் அருணகிரி.

''நாளைக்கு விருந்தாளி நிறைய வர்றாங்க. ஸ்கூல்விட்டு வந்து என்னாலே ஒண்ணுமே பண்ண முடியாது பர்வதாக்கா. அரிசி கொஞ்சம் அதிகமாவே போட்ருக்கேன். உங்க வீட்டுக் கிரைண்டர்ல போட்டு அரைச்சுத் தர முடியுமா?'' என்று கேட்டபடி வந்து நிற்பாள் சரோஜா டீச்சர்.

''கொண்டாங்க டீச்சர்'' என்று சந்தோஷமாக வாங்கி வைப்பாள் பர்வதா.

சமயத்தில் கரண்ட் சப்ளை கட்டாகி விட்டால், ஆட்டுரலில் போட்டுத்தான் கையால் அரைத்துக் கொடுக்க வேண்டும். நிறைய முறை இப்படி ஆகியிருக்கிறது. செய்து கொடுத்திருக்கிறாள்.

''ஐயோ பர்வதாக்கா, கை நோக அரைச்சிங்களாக்கும்? பேசாம அள்ளிக் காயப் போட்ருக்கலாமே. ஏதாவது ரவை உப்புமாப் பண்ணி ஒப்பேத்தியிருப்பேனே! ஆனால், சும்மா சொல்லக் கூடாது. உங்க கை வேலையே தனிதான். இட்லியும், தோசையும் பூன்னாப் பூதான்!'' என்று பாராட்டுவாள் சரோஜா டீச்சர்.

புன்னகையோடு நிற்பாள் பர்வதா.

''போன வாரம் மதுரைக்குப் போனேனல்ல. அங்க மஞ்சள் குங்குமம் வாங்கிட்டு வந்தேன். மதுரை மஞ்சள்னே பேரே! உங்களுக்காக வாங்கிட்டு வந்தேன். இந்தாங்கக்கா'' என்று, மஞ்சளையும் குங்குமத்தையும் நீட்டுவாள் தெற்குத் தெரு பகவதி.

பூரித்துப் போய்விடுவாள் பர்வதா.

தனது வாழ்க்கையே மஞ்சளிலும் குங்குமத்திலும்தான் இருப்பது போல, பெருநிதியம் போன்று எண்ணி அவற்றைப் பெற்றுக் கொள்வாள்.

இப்படித்தான், பரஸ்பர உதவிகளிலும் பரஸ்பர அன்பு செலுத்துதலிலும்தான் வாழ்க்கை இருப்பது போல் எண்ணம் பர்வதாவுக்கு.

காலையில் ஐந்து மணிக்கு எழுந்து கொண்டாள் என்றால், இரவு பத்துமணி வரையில் ஆகிவிடும் தலைசாய்க்க.

விழித்திருக்கிற பொழுதுகள் முழுவதுமே வேலைப்பளுவுடன்தான் நகரும்.

இதில் பெரும்பாலும் பிறத்தியாருக்கான வேலைகள்தான் மிகுதியாய் இருக்கும்.

அவற்றைச் சந்தோஷமாகச் செய்து சந்தோஷப்படுகிற மனம் பார்வதாவுக்கு.

சோற்றின் மீது சாம்பாரை ஊற்றினாள் பார்வதா.

சோற்றைப் பிசையவே தடுமாற்றமாக இருந்தது கீர்த்திக்கு.

எப்படியோ பிசைந்து வாயில் அள்ளி வைத்தவன், இரண்டு கவளம் சாப்பிட்டு முடிப்பதற்குள் கையை உதறிக்கொண்டு கத்த ஆரம்பித்தான்...

சிவந்திருந்த கண்கள் மேலும் வெறியேறிச் சிவந்தன.

"குழம்பாடி வச்சிருக்கே குழம்பு! உப்பு, புளிப்பு, காரம் ஒரு மண்ணுமில்லே. வெறும் சோற்றைத் திங்கிறாப்பல இருக்கு. நீயும் உன் சமையலும்..." என்று குமுறிய படியே சாப்பிட ஆரம்பித்தான். தினமும் பழகிப் போன இந்தக் காட்சியைப் பார்க்க விரும்பாதவளாய், கொல்லைப் புறத்துக்கு நகர்ந்தாள்... நிலா தென்படாத வானத்தில் நட்சத்திரங்கள் சிமிட்டிக் கொண்டிருந்தன.

"பார்வதாக்கா...! பார்வதாக்கா....!" என்ற குரல் கேட்டது.

"என்ன வேணும் சேதுக்குட்டிக்கு?"

"கணேசமாமா வீட்டு கனகா வயசுக்கு வந்துட்டாளாம். உங்களைக் கூட்டியாறச் சொன்னாங்க" என்றாள் சேது, எம்பி நின்று சுவர் மீது எட்டிப் பார்த்தபடி.

"அவர் சாப்பிட்டுக்கிட்டு இருக்காரு... முடிச்சதும்... இதோ ஒரு நிமிஷத்திலே வந்திருவேன்னு ஓடிப்போய்ச் சொல்றியா?" என்றாள் சந்தோஷம் ததும்பும் குரலில்.

"சரிக்கா..." என்ற சேது, குதித்தபடியே தகவல் சொல்ல ஓடிப் போனாள்.

இப்படித்தான்! இதுமாதிரிதான்!

வெளியில் சந்தோஷத்தைச் சேகரம் பண்ணிக் கொண்டு, வீட்டிலே அதைச் செலவழிக்க வேண்டியதாயிருக்கிறது.

காற்றில் மிதந்து வந்த பவள மல்லியின் சுகந்தத்தை மீண்டும் ஒருமுறை இழுத்து சுவாசித்தாள் பார்வதா. ○

# புல்வெளி ஹைகூ!

## மனித நேயத்தை மறவாதே

சொட்சம் காண
சுதந்திரக் காற்றை
சுவாசி.
வாழ்க்கைப் புத்தகத்தை
வரிவிடாமல்
வாசி.
காரியம் நிகழ்ந்துமுன்
கட்டாயம்
யோசி.
கருத்தோடு வாழ்ந்தால்
வருந்துயரோ
தூசி.
மறவாமல்—
மனித நேயத்தை
மனங்கொண்டு நேசி.

— கவி. இளங்கதிரவன்



- இரவோடு இரவாய்க்
  காற்றைப் பிழிந்தது யார்?
  புல்வெளியெங்கும் ஹைகூக்கள்!
- மனத்தை உடைத்து
  அறிவைச் செய்கிறானே
  சிற்பியா அவன்?
- நான் தந்தையை இழந்தேன்
  தாயோ கணவனை இழந்தாள்
  உறவிலும் உணர்ந்தேன், உயரங்கள்
- வேலை செய்யக் குனிந்தான்
  கூலி வாங்க நிமிர்ந்தான்
  மலிவாய் வழிந்தது வியர்வை...

— ம. திருவள்ளுவர்




## அவள்

மின்னலை
இடையில் கொண்ட
வானவில்...

— குடந்தை டி.எஸ். பாலு

## மூங்கில் காற்று

மூங்கிலில் துளைகளிட்ட
வண்டு பெருமையாய்ச்
சொன்னது.
"நானே குழலைச்
செய்தவன்!"
"அப்படியா! கொஞ்சம்
வாசித்துக் காட்டேன்!"-
காற்று கேட்டது.
வண்டு மௌனமாய்ப்
பறந்தது!

- கருமலைப் பழம் நீ

## சந்தேகம்

பெண்களின்
கல்யாண வயது 21.
அது சரி....
காதலிக்க வயது?

கோயில் திறக்கும்
நேரம் 6 மணி
அதுசரி...
கடவுள் கண்
திறக்கும் நேரம்?

ஆபீஸ் நேரம்
பத்து முதல் ஐந்து.
அது சரி...
ஊழியர் வேலை
செய்யும் நேரம்?...

- ஆர்.ஆர். தமன்

## துள்ளல்!

சிற்றோடையில் நீர்
சிதறி வந்தபோது
மீன்கள் துள்ளின...
நீர், தேங்கி வற்றி
காய்ந்த போதும்
துள்ளின...
அது ஆனந்தம்!
இது அவதி!

- ஜி. மனோ







# களையெடுப்பாரா கலைஞர்?

தி.மு.க. அணியின் தோல்விக்குக் காரணங்கள் அடுக்கப்பட்டுவிட்டன. பணப்புழக்கம் இல்லாதது. நெல்லுக்குச் சரியான விலை இல்லாதது. நகர்ப்புற மக்களிடையே இருந்த வறுமை, தலித்துகளுடன் இணைந்ததால், மற்ற சமூகத்தினரின் வெறுப்பு - இப்படிப் பல காரணங்கள். ஆனால் இவை எல்லாவற்றையும்விட ஒரு முக்கியமான காரணத்தைக் கலைஞர் சுட்டிக் காட்டியிருக்கிறார். அதுதான் கட்சித் தொண்டர்கள் மற்றும் பிரமுகர்களின் ஒத்துழையாமைப் போக்கு.

"கழக உடன்பிறப்புகளுக்கு ஒன்று சொல்வேன். நடந்து முடிந்த தேர்தலில் நமது செயல்திறன் படைத்த உடன்பிறப்புகள் தேர்தல் பணிகளைத் தீவிரமாகச் செய்து வாக்காளர்களை வாக்குச் சாவடிக்குக் கொண்டு வந்து சேர்ப்பதில் மேலும் சற்று ஊக்கம் காட்டியிருந்தால் நமது வெற்றி கை நழுவிப் போயிருக்காது என்பதில் கடுகளவு ஐயப்பாடும் எனக்கில்லை" என்றார் கலைஞர் ஓர் அறிக்கையில்.

அதுசரி, உடன்பிறப்புகள் தேர்தல் பணிகளை ஏன் தீவிரமாகச் செய்யவில்லை. கடந்த ஆண்டு உட்கட்சித் தேர்தல் நடந்த பின் எழுந்த மோதல் காரணமாகத்தான் பல இடங்களில் கட்சி அமைப்புகள் சரியாக இயங்கவில்லை. கோஷ்டி பூசல் இதற்கு அடிப்படையான காரணம். நியாயமாக ஜெயிக்க வேண்டிய நபர்களை அமுக்கிவிட்டு, மேலிடம் ஆட்களைத் திணித்ததுதான். அப்படி திணிக்கப்பட்டு பொறுப்பேற்ற பிரமுகர்களும், மக்களிடையே மிக 'நல்ல பெயர்' வாங்கியவர்களாக இருந்தனர்.

சேப்பாக்கம் தொகுதியில் 79வது வட்டத்தில் பகுதிக் கழகப் பிரமுகர்கள் உள்ளே நுழைய முடியவில்லை. எனவே அந்த வட்டத்திற்கு எதிர் கோஷ்டியில் உள்ளவரை பொறுப்பாக போட்டுவிட்டார்கள். அவர்களது நோக்கம் அந்தப் பிரமுகரின் பெயரை டேமேஜ் செய்வதுதான். ஆனால் அந்தப் பிரமுகர் கடுமையாக உழைத்து அந்தப் பகுதியில் நிறைய வோட்டுக்களைப் பெற்றுத் தந்துவிட்டார்.

''இரட்டை இலை சின்னம் சேப்பாக்கத்தில் இருந்திருந்தால் எங்கள் பாடு தானித்துப் போயிருக்கும்'' என்று நடுக்கத்துடன் சொல்கிறார்கள் கழகப் பிரமுகர்கள். கோஷ்டி பூசல் காரணமாக முதல்வர் குறைவான வாக்கு வித்தியாசத்தில்தான் வெற்றி பெற முடிந்தது. அதே போல் பூங்கா நகர் பகுதியைச் சேர்ந்த செயலாளர் ஒருவர், வேட்பாளர் ராஜேந்தருக்கு எதிர் வேட்பாளரிடம்



காக வாங்கிக் கொண்டு குழி பறிப்பு பணியிலும் ஈடுபட்டார் என்கிறார்கள்.

நியாயமாக ஜெயித்து ஆர்.கே.நகரில் பகுதிச் செயலாளராக வர இருந்த ஒரு பிரமுகரைத் தமது செல்வாக்கினால் அழுத்தினார் அமைச்சர் சற்குணபாண்டியன். அந்தப் பிரமுகரும் அவர் ஆதரவாளர்களும் தேர்தலில் அமைச்சரைக் கைவிட்டனர். தோல்வி கண்டார் அமைச்சர்.

ஆர்.எம்.வீ. போட்டியிட்ட ஆலந்தூர் தொகுதியில் நகரச் செயலாளர் வெற்றிவேல். கட்சித் தேர்தலுக்குப் பிறகு மாவட்டச் செயலாளர் அன்பரசனும், நகர மன்றத் தலைவர் ஆர்.எஸ். பாரதியும் இணைந்து செயலாற்ற, நகரச் செயலாளர் வலுவிழந்து போனார். தேர்தலில் அவர் தம் 'வேலை'யைக் காட்டி விட்டார்.

இப்போது கட்சியிலிருந்து வெற்றிவேல் நீக்கப்பட்டிருக்கிறார். பாரபட்சம் காட்டாமல் தலைமை இன்னும் பலரை நீக்க வேண்டும்.

''எங்களின் ஒத்துழையாமை போக்குக்குக் கட்சித் தேர்தல் நடந்த முறையில் எழுந்த வெறுப்பு மட்டும் காரணமல்ல. கடந்த ஐந்து வருட காலத்தில் எங்கள் தொண்டர்களுக்கு அரசாங்கத்தில் எந்த வேலையும் நடக்கவில்லை என்பதுதான் உண்மை. எங்களிடம் நீதி, நியாயம், நேர்மை பேசிய சில அமைச்சர்கள் மாற்றுக் கட்சிகளைச் சேர்ந்தவர்களுக்கு உதவி செய்து மகிழ்ந்தார்கள். காரணம் எங்களுக்கு இலவசமாகச் செய்ய வேண்டி வருமே" என்று கடுப்புடன் சொன்னார் புறநகர்ப் பிரமுகர் ஒருவர்.

"மாவட்டச் செயலாளர்களாகத் திணிக்கப்பட்டவர்கள் மக்களுக்கு அறிமுகமாகாத புதியவர்கள். சம்பாதிப்பதில் குறியாக இருந்தார்களே தவிர கட்சியைப் பற்றி கொஞ்சமும் அவர்கள் கவலைப்பட வில்லை" என்றார் அவர். கழக வேட்பாளர்கள் பலர், தொண்டர்கள் கண்ணில் காசைக் காட்டவில்லை என்பதும் மற்றொரு காரணம். சென்னையில் துவங்கி, தென்கோடி தூத்துக்குடி வரை, கட்சிப் பிரமுகர்கள் ஆர்வமாக வேலை செய்யாததன் காரணமாக தி.மு.க. அணி கிட்டத்தட்ட இருபதிலிருந்து முப்பது தொகுதிகள் வரை இழந்திருக்கலாம் என கணக்குப் போடப்பட்டிருக்கிறது. இதற்கு அழகிரி ஆட்களின் துரோகமும் ஒரு காரணம்.

ஒவ்வொரு தொகுதியிலும் தோற்ற வேட்பாளர்கள், உடன் பிறப்புகள் செய்த சதிகளைப் பட்டியலிட்டு தலைமையிடம் கொடுத்து வருகிறார்களாம். கலைஞர் நிறையவே களை யெடுக்க வேண்டியிருக்கிறது.

தேர்தல் அன்று சென்னை தொகுதிகளைச் சுற்றிப் பார்த்து வந்த நமக்கு ஒரு விஷயம் பளிச்சென்று தெரிந்தது. பூத் ஸ்லிப் கொடுக்கும் அ.தி.மு.க.வினரைச் சுற்றி உற்சாகமான கூட்டம். ஆனால் தி.மு.க.வினர் மேஜையில் டல்லடித்தது. ஏஜெண்டுகளாக இருந்தவர்களும் ஏனோ தானோ வென்று செயல்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

"தி.மு.க. ஆட்சியில் ஏழை மக்களைப் பாதிக்கும் பிரச்னைகளுக்குத் தீர்வு காணப்பட வில்லை என்பது ஒரு பக்கம் இருக்க, கட்சியின் அடிமட்டத் தொண்டர்களும் புறக்கணிக்கப்பட்டார்கள் என்பதுதான் நிஜம். அதனால் தான் தோல்வி" என்கிறார் வட்டச் செயலாளர் ஒருவர்.

**- தில்லப்பா**





**க**டிதக் கவரைக் கொடுத்துவிட்டு சௌம்யா போய்விட யமுனா அதைப் பிரித்துப் பார்க்கப் பயந்து ஃப்ரம் அட்ரஸையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

லீலா!

'அந்த லீலாகிருஷ்ணனாக இருக்குமோ...?'

வேலைக்காரி சமையலறைக்குள் வந்தாள்.

"தங்கம்..."

"அம்மா..."

"கொஞ்சம் அடுப்பைப் பார்த்துக்க. இப்ப வந்துடறேன்..."

"சரிங்கம்மா..."

யமுனா கடிதக் கவரோடு மாடியில் உள்ள தன்னுடைய அறைக்குப் போய் கதவைத் தாழிட்டுக் கொண்டு நொண்டியடிக்கும் இருதயத்தோடு

21

கவரின் வாயைக் கிழித்து உள்ளே மடித்து வைக்கப்பட்டிருந்த கடிதத்தை உருவினாள். மருதாணி பூசிய விரல் நுனிகள் நடுங்க, பிரித்துப் படிக்க ஆரம்பித்தாள். வரிகள் டி.வி. ஃப்ளாஷ் நியூஸ் போல் மனசுக்குள் ஓடின.

என் அன்பு யமுனா!

இந்தக் கடிதத்தை நீ படித்துக் கொண்டிருக்கும் போது நான் உயிரோடு இருக்க மாட்டேன். என் மரணத்துக்கு என்ன காரணம் என்பது உனக்குத் தெரியும். காதலில் ஏற்படும் தோல்வியை ஒரு பெண் தாங்கிக் கொள்வாள். ஒரு ஆணினால் தாங்கிக் கொள்ள முடியாது என்பதற்கு நான் ஒரு நல்ல உதாரணம். உன்னைக் கடைசியாய்ச் சந்தித்து இரண்டு வார்த்தை பேச முயன்றேன். முடியவில்லை. எனவேதான் இந்தக் கடிதம். நான் உன் மேல் இருந்த நம்பிக்கையின் காரணமாய் அந்த 'சிவப்புப் பனித்துளியை' உன்னிடம் கொடுத்து வைத்திருந்தேன். அதை என் நண்பன் வருணிடம் சேர்ப்பித்து விடவும். வருணின் சிந்தாதிரிப்பேட்டை முகவரி உனக்குத் தெரியும். ஒரு வார காலத்துக்குள் சேர்ப்பித்து விடவும்.

ராஜேஷ் குமார் ஸார்... யமுனாவையும் வருணையும் சீக்கிரம் சந்திக்க வையுங்க, சஸ்பென்ஸ் தாங்கலை!

இப்படிக்கு,
அடுத்த ஜென்மத்திலாவது கைகோப்போம் என்கிற நம்பிக்கையோடு இப்போது பிரிந்து செல்லும் - உன் லீலா.

வியர்த்து வழிகிற முகத்தை துடைக்கக் கூட தோன்றாமல் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து மாடி வராந்தாவில் நின்றபடி ஹாலை எட்டிப் பார்த்தாள். செளம்யா தன் தோழிகளோடு சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாள். கையில் வைத்திருந்த பெரிய ப்ளாஸ்டிக் தட்டில் சிப்ஸ் தெரிந்தது.

யமுனா மெல்ல பின்வாங்கி அறைக்குள் வந்து கார்ட்லெஸ் ஃபோனை எடுத்துக் கொண்டாள். டெலிபோன் டைரக்டரியில் இருந்த யெல்லோ பேஜஸ் லாயர் பகுதியில் இருந்த மனோன்மணியின் போன் நெம்பரைப் பார்த்து மனசில் வாங்கிக் கொண்டு டயல் செய்தாள். மறுமுனையில் மனோன்மணியின் குரல் கேட்டதும் மெல்ல, "நான் யமுனா" என்றாள்.

"சொல்லு யமுனா...!"

யமுனாவுக்கு அழுகையில் தொண்டை அடைத்துக் கொண்டது. "பிரச்னை கொஞ்சம் கொஞ்சமா விஸ்வரூபம் எடுத்துக்கிட்டிருக்கு..."

"பயப்படாதே...! என்ன நடந்தது... சொல்லு."

யமுனா குரலைத் தாழ்த்திக் கொண்டு இரண்டு நிமிட நேரத்தில் எல்லாவற்றையும் சொல்லி முடித்தாள். மனோன்மணி பதற்றமானாள்.

"கோயிலிலிருந்து நீ வீட்டுக்குப் போகும் போது ஒரு தாடிக்காரன் உன்னை ஃபாலோ பண்ணினதும், லீலா கிருஷ்ணன் தான் செத்துப் போறதுக்கு முந்தி உனக்கு எழுதின கடிதமும் கொஞ்சம் விவகாரமான பிரச்னைகள்தான். லெட்டரை என்ன பண்ணினே?"

"அப்படியே வெச்சிருக்கேன்."

## ராஜேஷ் குமார்

"கிழிச்சுடாதே...! எனக்கு அந்த லெட்டர் வேணும். உண்மையிலேயே அது லீலாகிருஷ்ணன் எழுதியதுதானா இல்லை வேற யாராவதான்னு கண்டுபிடிக்கணும்... இன்ஸ்பெக்டர் பால்பாண்டியனைப் பார்க்கத்தான் புறப்பட்டுப் போய்க்கிட்டிருக்கேன். அந்த லெட்டர் என் கையில் இருந்தா நல்லது."

"இப்ப... நான் வெளியே வர முடியாதே...? செளம்யாவும் அவளோட ஃப்ரண்ட்ஸும் வீட்ல இருக்காங்க."

"நான் உன்னோட வீட்டுக்கு வந்தாலும் செளம்யாவுக்குச் சந்தேகம் வந்துடும் இல்லையா...?"

"கண்டிப்பா..."



"பைக் ஓட்டிட்டுப் போனதுக்கு உங்களுக்கு அஞ்சு வருஷம் தண்டனை கொடுத்திட்டாங்களா...ஏன்?" லைசென்ஸ் இல்லாமப் போனீங்களா...?"

"லைசென்ஸ் எல்லாம் இருந்துச்சு. ஆனா பைக்தான் யாருதுன்னு தெரியலை...!"

– எம். அருள்மூர்த்தி

மனோன்மணி சில விநாடிகளை யோசிப்பில் கரைத்து விட்டுச் சொன்னாள்.

"யமுனா...! நீ ஒரு காரியம் பண்ணு."

"சொல்லுங்க..."

"சௌம்யாவும் அவளோட ஃப்ரண்ட்ஸும் இப்போ எங்கே இருக்காங்க?"

"ஹால்ல..."

"வேலைக்காரி...?"

"சமையல்கட்டுல..."

"வீட்டுப் பின்பக்கக் கதவுக்கு உன்னால வர முடியுமா...? நீ லெட்டரோட வந்து நில்லு... ஒரு பத்து நிமிஷத்துக்குள்ளே நான் வந்து வாங்கிக்கறேன்..."

"அது... வந்து..."

"ஏன் தயங்கறே யமுனா...?"

"யாராவது பார்த்துட்டா...?"

"உன் வீட்டுக்குப் பின்பக்கமா இருக்கிற சந்தில் ஜனநடமாட்டம் அதிகமா இருக்காது. ஒரு செகண்ட்ல லெட்டரைக் கொடுத்துட்டு நீ உள்ளே போயிடு...! நீயும் நானும் ஒரு வார்த்தை கூடப் பேசிக்க வேண்டாம்."

"சரி..."

"பயப்படாதே யமுனா...! இனி பயப்படறதால ஒரு பிரயோஜனமும் கிடையாது. தைரியமா வா. சௌம்யாவையும் வேலைக்காரியையும் மட்டும் ஒரு பார்வை பார்த்துக்க. சரியா பத்து நிமிஷம் கழிச்சு, பின்பக்கக் கதவுக்கு வந்தாப் போதும். என்ன வர்றியா...?"

"ம்..."

"அப்புறம்...! மறுபடியும் ஒரு சந்தேகத்தை உன்கிட்ட க்ளாரிஃபை பண்ணிக்கறேன்.... அந்த சிவப்புப் பனித்துளி என்னான்னு நிஜமாவே உனக்குத் தெரியாதா?"

"சத்தியமா தெரியாது" சொல்லும்போதே யமுனாவின் கண்களில் நீர் சீறிக் கொண்டு வெளிப்பட்டது. குரல் பேச முடியாமல் கட்டிக் கொண்டது.

"நீ கவலைப்படாதே யமுனா... வந்திருக்கிற அந்த லெட்டரை மட்டும் என்கிட்ட கொடுத்துடு போதும். நான் இன்ஸ்பெக்டர் பால்பாண்டியனைச் சந்தித்துப் பேசி உன்னோட பிரச்னைக்கெல்லாம் ஒரு முற்றுப் புள்ளி வைக்கிறேன்... சரியா பத்து நிமிஷம் கழிச்சு உன் வீட்டுக்குப் பின்பக்கம் வா. நான் கேஷுவலா அந்த சந்துல வந்துட்டிருப்பேன். ஒரு விநாடியில் என்னோட கையில் லெட்டரைக் கொடுத்துட்டு நீ போய்ட்டே இருக்கலாம்..."

"சரி..." சொல்லிவிட்டு லைனை கட் செய்தாள் யமுனா. உடம்பு ஒரு வியர்வைக் குளியல் போட்டிருந்தது. லீலாகிருஷ்ணனின் கடிதத்தை நான்காய் மடித்து இடுப்புச் சேலைக்குள் பதுக்கிக் கொண்டபின் அறையை விட்டு வெளியே வந்தாள்.

சௌம்யாவும் அவளுடைய ஃப்ரண்ட்ஸும் பெப்ஸி மாதவனைப் பற்றி பேசிக் கொண்டிருக்க, ஒரு பூனையைப் போல் படிகளில் இறங்கி சமையல்கட்டுக்கு வந்தாள். வேலைக்காரி தயிர் பச்சடிக்காக வெங்காயம் அரிந்து கொண்டிருந்தாள்.

"தங்கம்..."

"சொல்லுங்கம்மா..."

"தலையை வலிக்கிற மாதிரி இருக்கு. பின்பக்க வராந்தாவில் கொஞ்சம் காற்றோட்டமாக உட்கார்ந்துட்டு வர்றேன். சமையலைப் பார்த்துக்க..."

"அயிட்டம் என்னான்னு சௌம்யாம்மா சொல்லிட்டாங்க. நான் எல்லாத்தையும் பார்த்துக்கறேன். நீங்க போய் காத்தாட உட்காருங்கம்மா..."

யமுனா சமையலறையிலிருந்து விரிந்த நடைபாதை வழியே நடந்து போக, வீட்டின்

பின்பக்கம் விரிந்தது. இரண்டு வாழை மரங்கள் புஷ்டியாய் வளர்ந்து குலை தள்ளி யிருக்க, பக்கத்திலேயே தென்னை மரங்கள் கிளைகளைப் பரப்பி வெய்யிலின் கடுமையை வடிகட்டி நிழலைப் பரப்பி வைத்திருந்தன.

யமுனா நிழலில் நடந்து வீட்டின் பின் பக்கம் கனமாய்ச் சாத்தியிருந்த ஒற்றை மரக் கதவுக்கு முன்பாய் வந்து நின்றாள். சுற்றும் முற்றும் ஒரு தடவை பார்த்துவிட்டு கதவின் தாழ்ப்பாள் விலக்கி அந்தப் பழங்கால ஈட்டி மரக்கதவை இழுத்தாள். அது மெல்ல பிளிறிக் கொண்டே பின்வாங்கியது.

சந்து தெரிந்தது.

யமுனா எட்டிப் பார்த்தாள். சந்தின் கோடியில் மனோன்மணி வருவது தெரிந்தது. போர்க்கால முரசாய் மாறியது யமுனாவின் இதயம்.

இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன் மறுபடியும் வருணிடம் குரலை உயர்த்திக் கேட்டார்.

"இந்த இன்லேண்ட் லெட்டரில் எழுதப் பட்டிருக்கிற சிவப்பு பனித்துளி என்கிற வார்த்தைக்கு என்ன அர்த்தம்...?"

வருண் திக்கித்துப் போன விழிகளோடு பால்பாண்டியனைப் பார்த்தான்.

"ஸார்... இப்படி ஒரு லெட்டரை நான் இன்னிக்குத்தான் பார்க்கிறேன்."

"நீ என்ன சொல்றே... இந்த லெட்டர் உனக்கு எழுதப்பட்ட லெட்டர் கிடையாதா...?"

"கிடையாது ஸார். லீலாகிருஷ்ணன் என்னிக்குமே எனக்கு லெட்டர் எழுதினது இல்லை..."

"இது உனக்கு வந்த லெட்டர் இல்லேன்னா உன்னோட பீரோவுக்குள்ளே எப்படி வந்தது?"

"தெரியலை ஸார்..."

"லெட்டரோட தேதியைப் பார்த்தியா...? மூணு மாசத்துக்கு முந்தி எழுதப்பட்டிருக்கு..."

"ஸார்...! இந்த லெட்டர், இதுல எழுதப் பட்டிருக்கிற வாசகங்கள் எல்லாமே ஒரே குழப்பமாயிருக்கு."

"அப்படீன்னா... இந்த லெட்டரை யாரோ உன் பெயருக்கு எழுதி உனக்குத் தெரியாமலேயே இந்த பீரோவுக்குள்ளே கொண்டு வந்து வைச்சுட்டுப் போயிட்டாங்கன்னு சொல்ல வர்றியா?"

"அதுதான் ஸார் உண்மை..."

பால்பாண்டியன் தலையைச் சாய்த்து மெல்லச் சிரித்தார். "இதோ பார் வருண்...! ஒரு பொய் சொன்னாலும் அது நம்பற மாதிரி இருக்கணும். லீலாகிருஷ்ணன் உயிரோடு இல்லைன்னு தெரிஞ்சதுமே எதைச் சொன்னாலும் போலீஸ் நம்பிடுவாங்கன்னு நினைக்கிறது முட்டாள்தனம். நீ இந்த இடத்துல எத்தனை பொய் வேணும்ன்னாலும் சொல்லலாம். ஆனா லாக்கப்புக்குப் போயிட்டா நீ உண்மையைப் பேசித்தான் ஆகணும்."

"ஸார்...! நான் இப்ப பேசிக்கிட்டு இருக்கிறதுதான் உண்மை..."

"நோ...! உனக்கும் லீலாகிருஷ்ணனுக்கும் அந்த யமுனாவுக்கும் மத்தியில் ஏதோ ஒரு 'க்ளோஸ் பாண்ட்' இருக்கு. சிவப்புப் பனித்துளியைப் பற்றி கண்டிப்பா உனக்குத் தெரிஞ்சிருக்கணும். லீலாகிருஷ்ணன் உயிரோடு இல்லைங்கிற ஒரே ஒரு காரணத்துக்காக என்ன பொய் பேசினாலும் அது





"மனைவியை கம்ப்யூட்டர் கற்றுக் கொள்ளச் சொன்னது ரொம்ப தப்பாப் போச்சு..."

"எப்படி?"

"பால் கணக்கு எழுத இப்பவே ஒரு பர்சனல் கம்ப்யூட்டர் வாங்கிக் கொடுக்கணும்னு அடம் பிடிக்கிறா.."

– இள. கணேசன்

செல்லுபடியாகும்னு நினைக்காதே...! யமுனாவை விசாரணை பண்ணினால் அவளும் எதைக் கேட்டாலும் 'இல்லே... தெரியலை' என்கிற பதில்களை மாத்தி மாத்திச் சொல்றா...! உங்க ரெண்டு பேரையும் லாக்கப்புக்குக் கொண்டு போனாத்தான் உண்மைகள் வெளியே வரும்னு நினைக்கிறேன்."

"ஸார்... ப்ளீஸ்...! என்னை போலீஸ் ஸ்டேஷனுக்கெல்லாம் கொண்டு போயிடாதிங்க ஸார். இவ்வளவு நாளைக்கப்புறம் இப்பத்தான் ஒரு வேலை கிடைச்சிருக்கு. என்னோட காதலி ஜெனிஃபரை அவசரமாய்க் கல்யாணம் பண்ணிக்க வேண்டிய கட்டாயமும் நாளைக்கு இருக்கு...! இந்த நிலைமையில..."

"ஸாரி... வருண்! உன்னோட சொந்தப் பிரச்னைகளைப் பத்தி எனக்கு எதுவுமே தெரிய வேண்டியது இல்லை. எனக்கு நான் எடுத்துக்கிட்ட கேஸ் க்ளியராகணும். லீலாகிருஷ்ணனோட மரணத்தில் பல சந்தேகங்கள் இருக்கு. அது தற்கொலையா கொலையா.. டாக்டர்ஸாலே தெளிவாச் சொல்ல முடியலை. பி.எம். ரிப்போர்ட் குழப்பமாயிருக்கு."

"ஸ... ஸார்..."

"உனக்கு இன்னும் இருபத்தி நாலு மணி நேரம் டயம் தர்றேன். நீ வேலைக்குப் போகலாம். நாளைக்குக் கல்யாணத்தையும் பண்ணிக்கலாம். நாளைக்கு இந்நேரம் நீ உண்மைகளைச் சொல்லிட்டா போலீஸ் ஸ்டேஷனுக்கு வர வேண்டியது இல்லை. நாளைக்கும் இதே பதிலைச் சொன்னியானா கையில் விலங்கோடு போலீஸ் ஜீப்பில் ஏறி உட்கார வேண்டியிருக்கும்" இடது கை ஆட்காட்டி விரலை உயர்த்தி பால் பாண்டியன் எச்சரித்துக் கொண்டிருக்கும் போதே –

அவருடைய செல்போன் கனைத்தது. எடுத்து வலது காதுக்குப் பொருத்தினார்.

"எஸ்..."

"இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன்?"

"ஹோல்டிங்..."

"ஸார்...! நான் லாயர் மனோன்மணி அண்ட் ஹ்யூமன் ரைட்ஸ் கமிட்டி மெம்பர்.. கோர்ட்ல ரெண்டு மூணு தடவை மீட் பண்ணியிருக்கோம்."

"சரி! என்ன விஷயம்.... சொல்லுங்க"

"உங்ககிட்டே கொஞ்சம் பேசணும்."

(தொடரும்)



# மாதுரியும் நஜீனா டாஜன்ஸியும்!

**ப்**ளஸ் டூ மாணவனான ராகுல் ஸிங், பணத் தேவைக்கென்று, தன்னைத் தானே கடத்திக் கொண்ட கதையைக் கேளுங்கள் - முதல் நாள், டிஸ்கவரி சானலிலிருந்து, தன் அமெரிக்க மேற்படிப்புக்கென்று 3 மில்லியன் ஸ்காலர்ஷிப் வந்திருப்பதாக புருடா விட்டான்; மறுநாள் மறைந்து போனான். மொபைலில் அவ்வப்போது வீட்டுக்கு ஃபோன் செய்து, தன்னை கிட்-நாப்பர்கள் கடத்தி, ஹாஜி அலி பக்கத்தில், ஒளித்து வைத்திருப்பதாகவும், போலீசுக்குத் தெரிவித்தால் உயிருக்கே ஆபத்தென்றும் கதை மேல் கதை அளந்தான்.

அதற்குள், பெற்றோர் மும்பை போலீசின் 'ஆண்ட்டி - எக்ஸ்டார்ஷன் செல்'லையே ஒரு கலக்கு கலக்கி விட்டார்கள். எப்படியோ மனம் மாறி, மாலைக்குள் வீடு வந்து, தானே உண்மையை ஒப்புக்கொண்டு விட்டான். அமெரிக்க ஆசையில் பையன் ஸ்டண்ட் அடித்திருக்கிறான் என்று போலீசும் சும்மா விட்டு விட்டது.

**ஒ**ரு சாதாரணனே இப்படி என்றால், அசல் "ஃபிலிமி ஹீரோ'வான சல்மான்கான் ஸ்டண்டடிக்க கேட்கவா வேண்டும்? முன்பு மானால் போன மானம், இப்போது கப்பலேறியது வருமானத்தால்! கவரி மான் விஷயத்தில் டபாய்க்க முடிந்தது போல், வரி விஷயத்தில் ஏய்க்க முடிய வில்லையே?

வீட்டில்

மும்பை மசாலா



ரேணுகா ஷஹானே

ரெய்டு, அவர் நடித்த "சோரி சோரி சுப்கே சுப்கே" (காரணப் பெயர்னு கற்பனை பண்ணிக்காதீங்க) அண்டர் வர்ல்டுடன் சம்பந்தப்பட்டது. எல்லாமாகச் சேர்ந்து ஒரே கசமுச. அதிகாரிகள் அவரை மணிக்கணக்கில் வாட்டி, வதைத்து, கசக்கித் துப்பிய பின் பத்திரிகையாளர்கள் மிச்ச மீதியை வறுத்தெடுக்க முற்பட்டதும், ஐயா 'கானாவதாரம்' எடுத்து விட்டார். காமிராக்களைப் பிடுங்கி, லென்சுகளை நொறுக்கி, மீடியாக்காரர்களின் காலரைப் பிடித்து... என்ன, கொஞ்சம் 'கையைக் காலை' அதிகமாக உதறிவிட்டார். பத்திரிகைகளெல்லாம் புலம்பி ஓய்ந்தபின் எழுந்த கேள்வி, "ஆமாம்... சல்மானுடன் கூடவே இருந்த பாடி கார்டுகள் என்ன செய்து கொண்டிருந்தார்கள்" வேடிக்கை பார்த்தார்கள் என்பது வேதனையாக இல்லையா?

**வே**டிக்கை, வேதனை, இரண்டும் கலந்தாலே நமக்கு நினைவுக்கு வருவது மோனாலிசாவின் புன்னகைதானே? அவர் சிரிப்புதான் மர்மமாக இருக்கும்; இங்கே மோனாலிசாவே மர்மமாக இருக்கிறார் பாருங்கள்! படத்தில் இருப்பது யார் தெரிகிறதா? அசல் மாதுரி தீட்சித்தான்! 'கஜகாமினி' உள்ளூரில் படுத்து விட்டாலும், அதை வெளி நாட்டில் நிலை நிறுத்த சுஜ கரணம் போடுகிறார் எம்.எஃப். ஹுசைன் மாதுரியின் பிறந்த நாளன்று இருவரும் பாரீஸில் சந்திக்க, மாதுரியை மோனாலிசாவாக்கி அழகு பார்த்திருக்கிறார், இந்த நவீன டாவின்சி! 'அசலைக் காட்டிலும் அசத்தலான அழகு' என்று சான்றிதழும் வழங்கி விட்டார். அந்த அழகை அப்படியே போஸ்டரடித்து பாரீஸ் முழுவதும் ஒட்டப் போகிறாராம். "பார்ப்பவர்களுக்கு 'யார் இவர்?' என்ற குறுகுறுப்பு ஏற்படும். தெரிந்து கொள்ள 'கஜகாமினி'யைத் தேடி வருவார்கள் என்கிறார். என்னே 'பப்ளிசிடி ஸ்டண்ட்' அது மாத்திரமா? இந்தப் படத்தை அமெரிக்காவில் திரையிடும்போது, மாதுரியை "சுதந்திரதேவி" (Statue of Liberty தாங்க) ஆக்கப் போகிறாராம்! என்ன... சிரிப்பு வந்தால் சிரித்து விட்டுப் போங்களேன்...

**சி**ரிப்பென்றதும் பளிச்சென்று கண் முன் நிற்பது ரேணுகா ஷஹானேவின் சிரிப்புதானே? இந்தப் பளீர்ச் சிரிப்புக்கு பாதுகாப்பு வளையம் அமைக்கப் போகிறார் நடிகர் ஆஷுதோஷ் ராணே! 'பார்த்தேன்... சிரித்தேன்... பக்கம் வரத் துடித்தேன்' என்று இவர் பாடியதும், ரேணுகா 'சரித்தேன்' என்று விட்டார் போலும்! மே 25, பண்டக்பூர் என்ற ம.பி. கிராமத்தில் கப் சாப்பாக திருமணம்! 'என்ன இவ்வளவு ரகசியம்?' என்று பேப்பராஸி பித்துப் பிடித்தலை, 'திருமணம் என்பது மிகவும் அந்தரங்கமானது. அதை ஏன் பப்ளிக் ஆக வேண்டும்?" என்று நமுட்டுச் சிரிப்புச் சிரிக்கிறார் இந்த சினிமா வில்லன்.

— ஜெயஸ்ரீ ராஜ்

* உங்கள் குழந்தைகளிடம் படிக்கும் பழக்கத்தை உருவாக்குங்கள்.

* கோகுலம் அவர்களுக்கு அன்பளிப்பாகக் கிடைக்கச் செய்யுங்கள்.

* கல்கி வார இதழுக்கு ஓராண்டு சந்தா ரூ.275/- செலுத்தினால் போதும்; ரூ.36/- பெறுமானமுள்ள தமிழ் அல்லது ஆங்கில கோகுலம் ஆறு மாதங்களுக்கு (ஆறு இதழ்கள்) உங்கள் குழந்தை பெயருக்கு இலவசமாக வந்து சேரும்.

* கல்கி வார இதழுக்கு இரண்டு ஆண்டு சந்தா ரூ.550/- செலுத்தினால் ரூ.72/- பெறுமானமுள்ள தமிழ் அல்லது ஆங்கில கோகுலம் ஓராண்டுக்கு (12 இதழ்கள்) உங்கள் குழந்தை பெயருக்கு இலவசமாக அனுப்பப்படும்.




# கல்கி சந்தா செலுத்தினால் கோகுலம்/GOKULAM இலவசம்!

* ஏற்கெனவே சந்தாதாரர்களாக உள்ளவரும் தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொண்டு பயன்பெறலாம். சந்தா முடிவு தேதி நீடிக்கப்படும்.

* கல்கி என்ற பெயருக்கு மணி ஆர்டர் அல்லது டிமாண்ட் டிராஃப்ட் அனுப்பவும். வெளியூர் காசோலைகள் ஏற்பதற்கில்லை.

டி.டி. அல்லது எம்.ஓ. அனுப்ப முகவரி :

மானேஜர், கல்கி,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

என் பெயர் : ..................................................

என் மகன் / மகள் பெயர் : ....................................

..................................................................

விலாசம் : ..................................................

..................................................................

..................................................................

..................................................................

கல்கி வார இதழுக்கு ஓராண்டு / இரண்டு ஆண்டுகள் சந்தா ரூ. ............ அனுப்பியுள்ளேன். என் மகன் / மகள் பெயருக்கு கோகுலம் தமிழ் / ஆங்கிலம் 6/12 இதழ்கள் * அன்பளிப்பாக அனுப்பவும்.

* தேவையற்றதை அடித்து விடவும்.

கையொப்பம் : ..................................................

**ஜூலை இறுதி வரை மட்டுமே இந்தச் சலுகை! முந்துங்கள்!**

# "இங்கே ராமானுஜர்னு

"உன் ஒட்டை மணிப்பிரவாளத்துல சென்னை செய்தியை மட்டும் எழுதிவிட்டுப் போனால் போதுமா..? டெல்லியில் எத்தனை விஷயம் நடக்கிறது தெரியுமா?" - ரீசன்ட்டா இப்படி என்னை மனசார திட்டித் தீர்த்தது யாரென்று கேட்டால், புது டெல்லி வாழ் மரத் தமிழச்சியான என் நண்பி கோதை.

தூய தமிழ்ல அவ விவரிச்ச ஒரு நிகழ்ச்சியை இங்கே என்னோட ஒட்டை மணிப் பிரவாளத்துக்கு மாத்தித் தரேன்.

அத்வானி தலைமையில, ஒரு பிரமாதமான விருது வழங்கும் விழா டெல்லில போன மாசம் நடந்திருக்கு. இந்திரா பார்த்தசாரதிக்கு பிர்லா அறக்கட்டளை, சரஸ்வதி சம்மான் விருதும் ஃபைவ் லாக்ஸுக்கு ஒரு செக்கும் கொடுக்க ஏற்பாடு செஞ்ச ஃபங்க்ஷன்.

முதல் பாயின்ட், நிகழ்ச்சி கன் டைமுக்கு ஆரம்பிச்சிருக்கு.

ஹிந்தியிலதான் பேசியிருக்கார் அத்வானி - கவிதை மாதிரி அவ்வளவு நயமா ஒரு ஸ்பீச். 'அரசியல் உலகத்தைச் சேர்ந்தவன் நான். என்னைக் கூப்பிட்டு இப்படி ஒரு விருதைக் கொடுக்கச் சொன்னது எனக்கே அளிக்கப்பட்ட சம்மான்' அப்படின்னு அகமகிழ்ந் திருக்கார். 'இருபதுக்கும் மேல் இந்திய மொழிகள் இருந்தாலும் இந்திய இலக்கியம் ஒன்னுதான்'னு நேரு சொன்னதை அவர் நினைவூட்டினதை, இ.பா. தன்னோட ஏற்புரைல எதிரொலிச்சுப் பேசியிருக்கார்:

"நான் ஒரு தமிழ் எழுத்தாளன் அல்ல... தமிழில் எழுதும் ஓர் இந்திய எழுத்தாளன்."

அத்வானிஜி ஒழுங்கா ஹோம் வொர்க் பண்ணி 'ராமானுஜர்' (அதான் 'சம்மான்' பெற்ற இ.பா.வின் நாடகம்) ஹிந்தி மொழி பெயர்ப்பைக் கம்ப்ளீட்டா படிச்சுட்டு வந்து பேசினாராம்.

இ. பாவோட ஏற்புரையும் ரொம்ப கௌரவமா இருந்ததாம் 'இந்த விருது தமிழுக்குத் தேசிய அளவில் கிடைத்திருக்கும் அங்கீகாரம்'னு சொன்னவர் மறைந்த தன் மனைவி இந்திராவுக்கு அதை டெடிகேட் பண்ணினது ரொம்ப டச்சிங்கா இருந்ததுன்னு சொன்னா கோதை.

சரஸ்வதி சம்மான் விரு தளிப்பு விழாவைத் தொடர்ந்து டெல்லி தமிழ்ச் சங்கம் இ.பாவை ஃபெலிஸிடேட் பண்ணியிருக்கு. அங்கேயும் இ.பா. ரொம்ப மீனிங்ஃபுல்லா, அழகா பேசிருக்கார். "சும்மாவேனும் தமிழுக்கு ஞானபீடம் கிடைக்கலை, அது இல்லை; இது இல்லைன்னு புலம்பறோம். நம்ம மொழியில் வெளியான நல்ல படைப்புகளை மத்த லாங்குவேஜுக்குக் காலத்தோட கொண்டு போனாதானே நல்ல படைப்புகளைப் பத்திப் பிறர் அறிய முடியும். ஆனா தமிழகம்ன்ற தீவுக்குள்ள ஹிந்தி வரக் கூடாது. இங்க்லிஷ் வரக்கூடாதுன்னு (anti-தமிழ் வாசகர்களே ப்ளீஸ் நோட்!) நாம கட்டுப்பாடு போட்டுக்கறோம். அப்புறம் தமிழ் ஓரங்கட்டப்படுதுன்னு அங்கலாய்க்கறது அபத்தம்"னு சொன்னாராம்.

தலைமையுரையில டாக்டர் சி. ரவீந்திரன், தேசிய விருது பெற்ற இ. பாவை தமிழக அரசு சிறப்புச் செய்யவில்லையேன்னு வருத்தப்பட்டிருக்கார். பாராட்டு



• இந்திரா பார்த்தசாரதி

# யாராவது..?"



விழாவெல்லாம் நடத்தாம விருக்கறதே கௌரவம்னு மறுத்த இ.பா. தனக்கு ஏற்பட்ட ஒரு எக்ஸ்பீரியன்ஸையும் விவரமாச் சொல்லியிருக்கார்.

சரஸ்வதி சம்மான் விருது அறிவிச்சதும் சன் டீ.வி.யிலேருந்து பேட்டி கேட்டு போன். விலாசமும் நேரமும் தந்துட்டுக் காத்திருக்கிறார் இ.பா. உரிய நேரத்தில் வாசலில் காலிங்பெல் அடிக்குது. கதவைத் திறந்தால் ஓர் அழகிய இளம் பெண்.

இ. பாவைப் பார்த்துக் கேட்டாராம் :

"ராமானுஜம் என்பவர் இங்கே இருக்காரா..?"

"இல்லை..."

கையிலிருந்த அட்ரஸ்ஸைப் படிச்சுக்காட்டி, "இந்த விலாசம்தானே...?"

"ஆமாம்."

"ராமானுஜர் என்பவர் இங்கே இருப்பதாகத்தானே ஆபீசில் சொன்னாங்க; ஒரு வேளை இந்த பில்டிங்கில் வேறு வீட்டுல..."

"என்ன விஷயமாக நீங்க அவரைப் பார்க்கணும்?" - இது இ.பா. - ஒரு ஸ்மைலுடன்.

"பரிசு வாங்கியிருக்காரே... பேட்டி எடுக்கத்தான்!"

அப்புறம் இ.பா. ஹாட் டு எக்ஸ்பிளெயின். "பெண்ணே! 'ராமானுஜர்' பரிசு பெற்ற நூல். நீங்க பேட்டி காண வந்திருக்கறது அதை எழுதின இந்த பார்த்தசாரதியை; அந்த ராமானுஜரை அல்ல!"

சுமி சூப்பர் மார்க்கெட்ல இதுவரைக்கும் வந்த ஜோக்ஸ்லயே இதுதான் பெஸ்ட் ஜோக்; பட் எ ஸாட் ஒன்!

## சுமி சூப்பர் மார்க்கெட்

கல்யாணப் பத்திரிகைகள்ல பார்த்திருப்பீங்க, 'பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு மேற்படி சுபமுகூர்த்தம்'னு ப்ரிண்ட் பண்ணிருப்பாங்க. நிஜமாவே பெரியவர்களால் - ரொம்ப பெரியவர்களால் நிச்சயிக்கப்பட்ட ஒரு கல்யாணம் ஜூன் முதல் தேதி நடக்கப் போகுது. மணமகன் - வயலின் சகோதரர்கள் கணேஷ் - குமரேஷ்ல ஜூனியரான குமரேஷ்.

மணமகள் - வீணை ஜெயந்தி.

க-கு பிரதர்ஸ் அடிக்கடி காஞ்சிபுரம் போறவங்க. ஜெயந்தி அங்க ஒரு கச்சேரி வாசிக்கற நேரத்துல இவங்களும் இருந்திருக்காங்க. ஸ்ரீ விஜயேந்திரர்தான் குமரேஷ்கிட்டே பேசி, இந்தக் கல்யாணத்துக்கு மூல காரணமாயிருந்திருக்கார். திருப்பதில பெரியவங்க ஆசியோட நடக்கப் போகுது, இந்த மேரேஜ். நம்மளை மாதிரி சின்னவங்க வாழ்த்தும் நிச்சயமா நிறைய உண்டு.

- சுமி



• ஜெயந்தி



• குமரேஷ்

**வைகாசி விசாகம் முருகனின் திருநட்சத்திரம் (4.6.01). வைகாசி அனுஷம், ஸ்ரீமகா பெரியவாள் ஜெயந்தி (5.6.01). 'ஸ்ரீ சுப்ரமண்யாய நமஸ்தே!' என்ற முத்துசாமி தீக்ஷிதரின் கீர்த்தனைக்கு, காஞ்சி முனிவர் வழங்கிய விளக்கவுரையிலிருந்து சில பகுதிகள்:**

குரு - அதுதான் ஸுப்ரஹ்மண்யருடைய எல்லாப் பெருமைகளுக்கும் மேலான மஹா பெருமை. குருவாக உபதேசித்து மோக்ஷத்தை அநுக்ரஹிக்கிற பேருளைச் செய்கிறவர் அவர். **'குருவாய் அரர்க்கும் உபதேசம் வைத்த'** என்று அருணகிரிநாதர் சொல்கிற படி, பரம ஞான மூர்த்தியான அப் பாவுக்கும் உபதேசம் செய்த தகப்பன் ஸ்வாமி, ஸ்வாமிநாத ஸ்வாமி அவர். **'ஞான பண்டித ஸ்வாமி.'**

# ஞானகுரு

தாபத்ரயம் என்பதாக ஜீவாத்மாவுக்கு மூன்று தினுஸுத் தாபம். மூன்று ஸமாசாரங்கள் அதை தஹித்து வேக வைக்கின்றன. ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ற மூன்று. இவை மநுஷ்யரைத் தபிக்க வைக்கின்றன. ஆத்யாத்மிகம் என்பது தன் ஆத்மாவாலேயே தன்னை வருத்திக் கொள்வது. அதாவது நம்முடைய மனஸின் பலவிதமான சஞ்சலிப்பு, கொந்தளிப்பினாலேயே நம்மை வறுத்தெடுத்துக் கொள்வது. ஆதி பௌதிகம் என்பது பூதர்களால் அதாவது உயிர்களால், நம்மைத் தவிர பிற மநுஷ்யர்களாலும் மற்ற ஜீவராசிகளாலும் உண்டாகிறது. ஆதிதைவிகம் என்ற இடத்தில் தைவம் என்றால் விதி. நம்முடைய வினையே விதியாக வந்து வருத்துவது ஒரு தாபம். அல்லது மநுஷ்ய சக்திக்கு அப்பாற்பட்டதாக 'இயற்கை உற்பாதம்' என்கின்ற, ஆனால் உண்மையில் தேவ சக்திகளின் கோபத்தைக் காட்டுவதான புயல், பூகம்பம், எரிமலை வெடிப்பது முதலியவற்றால் ஏற்படுவது. ஆதிதைவிகத்தாலும் விபத்து, வியாதி, இத்யாதி ஏற்படலாம். ஆனால் அதை நமக்குத் தாபமாக மாற்றி வருத்தம் தருவது, வறுத்து எடுப்பது மனஸ்தான். மனஸ் என்ற ஒன்று இல்லாவிட்டால் எந்தத் தாபமும் தெரியாதுதானே? 'மனம் இறக்கக் கற்றுவிட்டால்' தாபமேயில்லை. ஆத்மாராமர்களாக, ஆனந்தமயமாக ஆகி விடலாம். அப்படி ஆகக் கற்றுக் கொடுப்பது தான் தத்வோபதேசம். தாபத்ரயங்களைப் போக்குவதில் மிகவும் வல்லமை வாய்ந்த தத்வ உபதேசத்தைச் செய்பவர் ஸுப்ரஹ்மண்யர்.



அஞ்ஞான இருட்டுக்கு அப்பால் இருக்கிற ஞான ஜ்யோதிஸ்தான் ஸுப்ரஹ்மண்யர். அக்னி ஸ்வரூபமென்றால் அது ஞானாக்னிதான். அவர் கையிலே தகதகவென்று இருக்கிற சக்த்யாயுதமும் ஞான வேல்தான். பாஹுபல பராக்ரமத்தைக் காட்டும் சக்தி; கோடி கோடி மன்மத லாவண்யம்; தீன ரக்ஷணத்தில் முதல்வராக இருக்கும் காருண்யம் எல்லாமும் கடைசியில் அந்த ஞானத்தில் பிறந்தவையே; அந்த ஞானத்தோடு பிரிக்க முடியாமல் ஸம்பந்தப்பட்டவையே. ஞானத்தை மற்றவருக்கும் வழங்கும் குருநாதனாக இருப்பதே ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியின் உயிரான லக்ஷணம்.

# குடும்ப ஒற்றுமை - ஆரோக்கியம் பெற அன்னபூரணி க்ஷேத்ரமான காசியில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!



**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் மாதாமாதம் அமாவாசை அன்று மிகுந்த புண்ணிய க்ஷேத்ரமான காசியில் அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்...**



பேரன்புடையீர்! வணக்கம். தங்களின் வேண்டுதல்கள் நிறைவேறவும், மங்கலம் உண்டாகவும் அருள்மிகு ஸ்ரீ அன்னபூரணி அன்னை அருள்புரியட்டும்.

"பிரபஞ்சம் முழுமைக்கும் உணவுபடைக்கும் தாயாக விளங்கும் அன்னபூரணித்தாயார் கோலோச்சிவீற்றிருக்கும் காசியில் மாதாமாதம் அமாவாசை அன்று அன்னதானம் செய்யப்படுகிறது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். ஆன்மீக அன்பர்கள் அனைவராலும் காசியில் அன்னதானமிட முடியும் என்ற நிறைசிந்தனையோடு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" என்ற தனி அமைப்பை ஏற்படுத்தியுள்ளோம். இந்த அன்னதான திருப்பணிக்கு தங்களால் இயன்ற நன்கொடையை வழங்கி "இறைவருளால் காசியில் ஏழைகட்கும், அடியார்களுக்கும் அன்னம் அளிப்பதில் நாமும் ஓரளவேனும் பங்குகொண்டோம்" என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

★ தாங்கள் கொடுக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.2000 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் நான்கு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் இருபது ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையை அனுப்புவோர், திருமணநாள், பிறந்தநாள் மற்றும் திதி நாள் போன்ற தாங்கள் ஏதாவது நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத் தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.2000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி சொம்பு காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும் ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் வண்ணப்படமும், சிறிய அளவில் கீதையான புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்து தொடர்ந்து இருபது வருடங்கள் பிரசாதமும் 'ஆன்மீகம்' மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்நிதியின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத் கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

**காசி, கயா, பிரயாகை (திரிவேணி சங்கமம்) ஆகிய இம்மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் புண்ணிய காரியங்கள், பித்ரு காரியங்கள், பிண்டம் போடுதல், தர்மங்கள், ச்ராத்தம், திவசம், தர்ப்பணம் போன்றவற்றை அவரவர் விருப்பப்படி அன்னதானக் கைங்கர்ய அன்பர்களுக்கு செய்து தரப்படும்.**

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்டப்பிரதானம் மற்றும் தர்ப்பணம் காசியிலும், கயாவிலும், பிரயாகையிலும் நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" மூலம் செய்யப்படுகிறது.

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் தனித்தனியாக ரூபாய் 1000/- அனுப்பும்போது யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். பிண்ட பிரதானத்திற்காக ரூ.5000/- அனுப்பும் அன்பர்கள் சார்பாக தொடர்ந்து வருடத்திற்கு ஒருமுறை இருபது ஆண்டுகளுக்கு மூன்று பித்ரு லோகத்தில் எந்த இடத்தில் யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவர்களுக்கு ச்ராத்தம் செய்யப்படும். பித்ரு காரியங்களுக்குப் பணம் அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள தெய்வீக ஆலமரமான 'அக்ஷய வடத்தின்' படமும், கயாவில் உள்ள விஷ்ணு பாதத்தின் படமும் அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் ச்ராத்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு அக்ஷய வடத்தில் (ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு பித்ருக்கள் கூட்டமே முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.

**அன்னதான சேவையில் ஈடுபடும் ஆன்மீக அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque / D.D / M.O மூலம் ( Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4 ) என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். கலியுகத்தில் அன்னதான சமுதாயப்பணி மகத்தான தெய்வீகப்பணியாக காசி திருத்தலத்தில் தழைத்திட உதவுமாறு பணிவன்புடன் வேண்டுகிறோம்.**

*Cheque / D.D / M.O அனுப்ப வேண்டிய முகவரி :*


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street, (Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

Tel : 4959302 Fax: ( 044 ) 4616311 E- Mail:siva siva@vsnl.net


**காசியில் அன்னதானமளித்து ஆனந்தமடைவீர்!**

சாலமன் பாப்பையாவை, சாலமன் பாப்புலரையா என்று பாராட்டுகிறார்கள். அவருடைய சரளம் யாருக்கும் வராது என்பதால் அந்த விருது சாலப் பொருத்தமே. ஆனால் அவர் தலைமை தாங்கும் நிகழ்ச்சிகளைத் தவறாமல் பார்ப்பவர்களுக்கு அவர் ஒரு male - chauvinist என்ற சந்தேகம் ஏற்படுகிறது. ஆண்களா பெண்களா என்று பட்டிமன்றத்தில் எந்த விவாதம் வந்தாலும், ஆண்கள் கட்சி ஆசாமி எட்டடி பாய்ந்தால், அதை மறு தரப்புக்கு எடுத்துச் சொல்லும் சாக்கில் பாப்பையா பத்தடி பாய்கிறார்.

'நுகர்வோர் விழிப்புணர்வு, அதிகம் காணப்படுவது ஆண்களிடமா பெண்களிடமா?' என்று 'பொதிகை'யில் ஒரு வழக்காடு மன்றம் நடந்தது. 'ஒரு சேலை வாங்கினால் இன்னொரு சேலை இனாம்' என்று விளம்பரம் வந்தால், அங்கே விழுந்தடித்துக் கொண்டு ஓடுவது பெண்கள்தான், என்று ஆரம்பித்து நிறையவே கிண்டலடித்தார் ஓர் ஆண் சிங்கம். அப்போது சாலமனாரின் தராசு முள், அவர் பக்கம்தான் அதிகம் சாய்வதாக இருந்தது.

என்றாலும், ஃப்ரிஜ், வாஷிங் மெஷின், டி.வி, மிக்ஸி, கிரைண்டர், செல்ஃபோன் என்பதெல்லாம் இருந்தால்தான் ஸ்டேட்டஸ் என்று கருதும் மனப்பான்மை இருவரிடமும் இருக்கிறது' என்று சாலமன் பாப்பையா சாடியபோது, நியாயவான்தான் இந்த நடுவர் என்ற ஆறுதல் ஏற்பட்டது. Society needs to have both shepherds and butchers என்று வால்ட்டேர் சொன்னது இதனால்தான்.

என்னதான் வகைவகையான தொடர்களில் விதவிதமான மேக்கப்புடன் வந்தாலும், வாயைத் திறந்தவுடனே 'இது வரதராஜன்தான்' என்று சொல்லிவிட முடியும். குரலை வைத்தே தொகுதியைக் கைப்பற்றியவர் இந்த news reader - turned - actor.

நையாண்டி தர்பாரில் சுயரூபத்திலேயே தோன்றியதால் அவர் பேச்சை ரசித்துக் கேட்க முடிந்தது. அந்த அனுபவம் எப்படி; இந்த அனுபவம் பற்றிச் சொல்லுங்களேன் என்று யூகிசேதுவும் கேட்கவில்லை. வரதராஜனும் சொல்லவில்லை. அந்த அமெச்சூர்த்தனத்தைத் தாண்டி both have come a long way. அப்படி இல்லாமலே பேட்டி சுவாரஸ்யமாக இருக்கும்படி இருவரும் சாமர்த்தியமாக உரையாடலை அமைத்துக் கொண்டிருந்தார்கள்.

இந்திரா காந்தி கைதானது பற்றி டி.வியில் நியூஸ் சொன்னதைக் குறிப்பிட்டார் வரதராஜன். (அடேங்கம்மா! அவ்வளவு காலம் சர்வீஸ் போட்டவரா இவர்!) செய்தியை டி.வியில் சொல்லிவிட்டு, பஸ்ஸில் வீடு திரும்பிக் கொண்டிருந்தாராம். எதிரில் ஐம்பது அறுபது பேர், கம்பும் கையுமாகக் கண்டன கோஷம் போட்டவாறு வந்தார்களாம். ஜன்னலோரம் உட்கார்ந்து, இவர் வேடிக்கை பார்க்கப் போய், கூட்டம் அவரை அடையாளம் கண்டு கொண்டு 'டேய்! இவன்தாண்டா நியூஸ் சொன்னவன்! பிடி, பிடி அவனை!' என்று ஓடி வர, 'செத்தேன், பிழைத்தேன்' என்று தப்பி ஓடினாராம். Life is made up of sobs and smiles.

உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு ஓட்டம் பிடித்த அந்தச் சமயத்தில் எப்படி











ரிமோட்

# 3 நிமிட நாடகம்!

**வினோத்**

மூச்சு வாங்கியது, எப்படி இரைத்தது, எப்படி பேச்சுக் குழறியது என்பதையெல்லாம் பாவத்துடன் சொன்னார் வரதராஜன். மூன்று நிமிட நேரம் ஒரு நல்ல நாடகம் பார்த்த மாதிரி இருந்தது.

'இதோ வருகிறார் எங்கள் குருநாதர்!' என்று அறிவித்தார் கங்கை அமரன். விஜய் டி.வியில் 'உத்சவம்' நிகழ்ச்சியின் தொடக்கத்தில். மேடை நிறைய ஆர்க்கெஸ்டிரா நிரம்பி வழிந்தது.

'யாரைப் பார்த்து நாங்கள் பாட்டுப் பாடக் கற்றுக் கொண்டோமோ, யாரிடம் நாங்கள் பாட்டு அமைக்கத் தெரிந்து கொண்டோமோ, யாரிடம் நாங்கள் பாட்டெழுத அறிந்து கொண்டோமோ, அந்த இசை மேதை...' என்று அவர் அடுக்கிக்கொண்டே போகப் போக, இசைஞானி இளையராஜாவைத்தான் அவர் குறிப்பிடுகிறார் என்று தோன்றியது. ஆனால் வந்தவர், பழைய தலைமுறையில் பட்டாபிஷேகம் பெற்ற எம்.எஸ். விசுவநாதன் தான். (ஞானிக்குச் சொன்னது மெல்லிசை மன்னருக்கும் பொருந்தும்தான். ஆனால் வார்த்தை விளையாட்டால் ஏமாற்றி விட்டார் அமரனார்.)

எம்.எஸ்.வி. ஆர்மோனியத்தைப் பிடித்தார். புல்லாங்குழல் கொடுத்த மூங்கில்களை அழைத்து, புருஷோத்தமன் புகழைப் பாடுங்களேன் என்று கேட்டுக்கொண்டார். ஆகா! என்ன சாகித்திய சுகம்! அன்று டி.எம்.எஸ். பாடியது மாதிரி இல்லையே, இவர் நிறுத்தி நிறுத்தி மூச்சுப் பிடித்து மூச்சுப் பிடித்து பாடுகிறாரே, அடிகளின் முடிவிலே வரும் அந்த அற்புதச் சுழற்சிகளைக் காணோமே, என்ற எண்ணங்களெல்லாம் மறைந்து, வண்டாடும் கங்கை மலர்த் தோட்டங்களிலும் பன்னீர் மலர் சொரியும் மேகங்களிலும் பரந்தாமன் சஞ்சரிப்பது மட்டுமே தெரிந்தது. History never looks like history when you are living through it என்றார் ஜான் கார்ட்னர். இந்தக் கிருஷ்ணா கானம் ஒரு சரித்திரம். அது நமக்கு இப்போது புரியாது.

"ஹலோ! நான் ட்ரிங்க் ட்ரிங்க் எஸ்.வி. சேகர் பேசறேன். என்ன பண்ணிட்டு இருக்கீங்க?"

"இப்பத்தாங்க ஆபீசிலிருந்து வந்தேன். தூங்கிட்டிருந்தேன்."

"பொதுவா எல்லாரும் ஆபீசிலே தானே தூங்குவாங்க! நீங்க இப்படிச் சொல்றீங்களே?"

"ஆமாங்க. ஆபீசிலே தூங்கினது போக மீதியை வீட்டுக்கு வந்து தூங்கறேங்க."

அவருக்கு இவர் சளைத்தவராயில்லை!

இரண்டு புத்திசாலிகள் சந்திக்கும்போது they usually imitate each other என்பார்கள். அந்த உண்மையை உணர்ந்தவராக சேகர் அடுத்த கேள்விக்குப் போய் விட்டார்.





# பொன்னையன்:

அ.இ.அ.தி.மு.கவில் இப்போது பரபரப்பாக கிசுகிசுக்கப்படும் விஷயம் அமைச்சர் பொன்னையனின் திடீர் ஏற்றம்தான். கிட்டத்தட்ட ராமர் வனவாசத்தைப் போல, பதினான்கு ஆண்டுகள் அரசியல் உலகிலிருந்து உள்வாங்கியிருந்த பொன்னையன் இன்று ஜெயலலிதா அமைச்சரவையில் நம்பர் டு! எப்படி நிகழ்ந்தது இந்த அதிசயம்? பெரும்பாலான முன்னணி அ.தி.மு.க பிரமுகர்களுக்கே பின்னணி தெரியவில்லை. பத்திரிகையாளர்களிடம் விசாரிக்கிறார்கள்! மூச்சுக் காற்றில் பொறாமையும் சேர்ந்தே வருகிறது.

திருச்செங்கோட்டுக்காரர் பொன்னையன். சாதாரண விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர். சேலத்திலும் சென்னையிலுமாகப் படித்து வழக்குரைஞரானவர்.

"அப்போதெல்லாம் (1967-68) அவருக்குச் சரியாக வழக்கு கள் வரவில்லை. காந்திநகரில் தங்கியிருந்தார். ஒரு பையில் கறுப்புக் கோட்டை போட்டுக் கொண்டு, காலையில் திருவல்லிக்கேணி பக்கம் மேன்ஷன்களுக்கு வந்துவிடுவார். நண்பர்கள் அறையில் இருந்துவிட்டு, மாலை திரும்பிப் போவார். அப்போது ஒரு நண்பரின் மூலம் அவருக்கு எஸ்.டி.எஸ் அறிமுகம் கிடைத்தது. அப்போது எஸ்.டி.எஸ் பாராளுமன்ற உறுப்பினர். அவரிடமே உதவியாளர் போல் பல காலம் செயல்பட்டார். 1972ல் எம்.ஜி.ஆர் புதுக்கட்சி கண்டபோது, எஸ்.டி.எஸ்ஸுடன் பொன்னையனும் இணைந்துவிட்டார்" என்று ஃபிளாஷ்பேக் சொன்னார் கட்சிப் பிரமுகர் ஒருவர்.

சர்க்காரியா கமிஷன் விசாரணையின்போது அ.தி.மு.கவுக்கு ஆஜரான ஸீனியர் வழக்கறிஞர்களுக்கு உதவியாக பொன்னையனும் ஆஜரானார். அப்போதுதான் நேரடியாக எம்.ஜி.ஆருக்கு நன்றாக அறிமுகமானார். அந்த அறிமுகத்தைத் தக்க வைத்துக்கொண்டு 1977ல் சட்டமன்றத்துக்குச் சீட்டு வாங்கி வென்றார். பெரும்பாலோர் புதியவர்களாக இருக்க, ஓரளவு அறிமுகமான பொன்னையனுக்கு அமைச்சர் பொறுப்பு கொடுத்தார் எம்.ஜி.ஆர். அப்புறம், பொன்னையன் திரும்பிப் பார்க்க வேண்டிய அவசியமே நேரவில்லை. அடுத்த பத்து வருட காலம், போக்கு வரத்து, சட்டம், கல்வி என்று பல முக்கியத் துறைகளின் பொறுப்பு தேடி வந்தது. எப்போது அமைச்சர் வீட்டுக்கு போன் செய்தாலும் 'அமைச்சர் தோட்டத்தில் (ராமாவரம் தோட்டம்) இருக்கிறார்' என்றுதான் பதில் வரும். இதனால் ஆத்திரம் கொண்ட அ.தி.மு.க பிரமுகர் முசிறி புத்தன் தாம் நடத்தி வந்த 'மன்ற முரசு' என்ற பத்திரிகையில் இவரைப் பற்றி கிசுகிசு வெளியிட்டார். ஆளுங்கட்சி அமைச்சர் ஒருவரைப் பற்றி ஆளுங்கட்சி பத்திரிகையிலேயே கிசுகிசு வந்தது பரபரப்பாய்ப் பேசப்பட்டது. பின்னர் ஒரு கட்டத்தில் முத்துசாமி, எம்.ஜி.ஆருக்கு நெருக்கமானவுடன் பொன்னையன் கொஞ்சம் ஓரங்கட்டப்பட்டார்.

1982ல் செல்வி ஜெயலலிதாவைக் கழகத்திற்கு அறிமுகப்படுத்தி,



திடீர்ப் பரிசுப் போட்டி – 9

ஓட்டுக் கேளுங்க!

போயஸ்தோட்டத்து

# எப்படி வந்தது இந்த ஏற்றம்?

கொ.ப.செ பதவியைக் கொடுத்தபோது பல அதிருப்தி குரல்கள் எழுந்தன. 'அந்தக் குரல்களில் பொன்னையன் குரலும் ஒன்று' என்கிறார் ஜெ.வுக்கு மிகவும் வேண்டியவராக இருந்த பிரமுகர் ஒருவர். எம்.ஜி.ஆர் ஆட்சி காலத்தில் சட்ட அமைச்சராக இருந்த காரணத்தால் நீதிமன்ற நிர்வாகத்தோடு தொடர்பு ஏற்பட்டது. அவரது உதவியைப் பெற்று மாவட்டங்களில் பணிபுரிந்து வந்த பலர் இன்று மாநில அளவில் பணிபுரிவதால், பொன்னையனுக்கு இன்றும் நீதிமன்ற வளாகங்களில் செல்வாக்கு உண்டு. இவர் ஜெ.வுக்கு மிகவும் நெருக்கமானதற்கு இதுவும் ஒரு காரணம் என்று சொல்கிறார்கள்.

எம்.ஜி.ஆர் மறைவுக்குப் பின் ஜானகி அணியில் சேர்ந்தார் பொன்னையன். தேர்தலில் ஜானகி அணிக்குக் கிடைத்த தோல்வியால் காணாமல் போன பொன்னையன், 1995ல் ஆர்.எம்.வீயின் எம்.ஜி.ஆர் கழகத்தில் சேர்ந்த போதுதான் மீண்டும் செய்திகளில் அடிபட்டார். இடையில் அவருக்கு உடல் நலமில்லாமல் போக, தலையில் சிறிய ஆப்ரேஷன் செய்ய வேண்டியதாகிவிட்டது. அதைத் தொடர்ந்து நீண்ட ஓய்வு தேவைப்பட்டது. மனைவி சரோஜா மகப்பேறு நிபுணர். இரண்டு மகன்கள். எம்.ஜி.ஆர் கழகத்தில் இருந்தபோது ரஜினி விழாக்களிலும் கலந்து கொண்டிருக்கிறார்.

1996ல் எம்.ஜி.ஆர் கழகத்துக்கு, தி.மு.க அணியில் சீட்டு கொடுக்காதபோது அதையும் விட்டு விலகினார் பொன்னையன். பிறகு 2000 வருடம் க.ராஜாராம், 'புரட்சித் தலைவர் அ.தி.மு.க' துவங்கியபோது தான் கண்ணில் பட்டார். அதில் மிகச் சில நாட்களே இருந்தவர் அம்மாவின் கடைக்கண் பார்வைக்கு ஆளாகி போயஸ்தோட்டத்துக்கு நெருக்கமானார். இந்த நெருக்கத்துக்கு மிகவும் உதவியவர் தி.க., வீரமணி என்று சொல்பவர்களும் உண்டு.

முப்பது வருடத்துக்கு மேல் வீரமணிக்கும் பொன்னையனுக்கும் பழக்கம் உண்டாம். ஆனால் பொன்னையன் ஆத்திகர். அடிக்கடி திருப்பதி செல்பவர். தமது உடல்நலத்துக்காக வித்வான் லட்சுமணன் மூலம் யாகங்கள் நடத்தியவர். வாஸ்துவிற்கு ஏற்ப வீட்டை மாற்றிக் கட்டியவர். பொன்னையன் மகன்களில் ஒருவர் லண்டனில் உயர் மருத்துவம் படிக்கிறார். இந்த லண்டன் தொடர்புகளும், பொன்னையன் போயஸ்தோட்ட உள் வட்டம் செல்ல காரணம் என்கிறார்கள். தன்னை எதிர்ப்பவர்களை நாசூக்காக ஓரங்கட்டுவதில் வல்லவர் பொன்னையன். எந்த ஒரு விஷயத்தையும் எளிதில் கிரகித்துக் கொண்டு செயல்படுபவர். அ.தி.மு.க தேர்தல் அறிக்கையை எழுதியவர் இவர்தானாம். தி.மு.க ஆட்சியில், முறைகேடுகள், ஊழல்கள் ஏதேனும் நடந்ததா என்று கோப்புகளைப் பார்த்துத் துருவும் பணி இவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. சர்க்காரியா கமிஷனில் செயல்பட்ட அனுபவம் இப்போது உதவக் கூடும்!

— சஞ்சயன்



வி.ஐ.பிகளான ஜெயலலிதாவும், சூப்பர் ஸ்டாரும் இப்போது சந்தித்துக் கொண்டால் என்ன பேசிக் கொள்வார்கள்? குறும்பாய் யோசித்து அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதி அனுப்புங்கள். சிறந்த கற்பனை உரையாடலுக்கு 10,000 காசுகள் பரிசு! ஜூன் 11க்குள் அனுப்பிட மாட்டீங்களா என்ன? ஆசிரியர் தீர்ப்பு தாங்க இறுதி!

**ஸா**மத்தினாலே தேவதைகளை அழைக்க வேண்டும் என்று சொன்னேன். அவர்களை ஆவாஹனம் பண்ணியானதும் யக்ஞத்திலே எல்லாம் சரியாக நடக்கிறதா என்று கவனிக்க வேண்டும். ரிக் வேதத்தினாலே ஸ்தோத்திரம் பண்ணுகிறார்களா? யஜுர் வேதத்தினாலே ஹோமம் பண்ணுகிறார்களா? இந்தக் காரிய கலாபங்களெல்லாம் நன்றாக நடக்கின்றனவா..? அதர்வண வேதத்தைக் கற்றுணர்ந்தவர் பிரும்மாவாக உட்கார்ந்து பார்க்கிறார்– கவனிக்கிறார். அவருக்கு 'உபதிருஷ்டா', 'பிரும்மா' என்று பெயர். அவர் எத்தனை ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்...? அந்த பிரும்மாவுக்குத்தான் பொறுப்பு அதிகம். ஹோமம் பண்ணுகிறவருக்கு, 'இது விட்டுப் போய்விட்டதே, அதைப் பண்ணவில்லையே' என்று எடுத்துக் காட்டவேண்டும். அப்படி அவர் எதிரில் உட்கார்ந்து சொல்கிற பிரும்மா, அதர்வண வேதத்தைப் பூரணமாகக் கற்றுணர்ந்தவராக இருக்க வேண்டும்.

நான்கு வேதங்களுக்கும் யக்ஞத்தில்



# 14

வேலை. இந்த யக்ஞம் யார்...? விஷ்ணு! அவனை ஆராதிக்க வேண்டுமானால் நான்கு மறைகளும் முக்கியமாக வேண்டியிருக்கின்றன.

அதனாலேதான் இந்த பூமண்டலத்திலே இந்த சப்தங்கள் உச்சரிக்கப்பட்டு, யக்ஞங்கள் நிறைய நடந்து, அதனால் இந்த பூமி மொத்தம் யக்ஞப் புகையினால் சூழ்ந்து நிற்க வேண்டும். இந்தக் காற்றிலே யக்ஞப் புகை கலந்து சுற்றி வந்தால், அதை நாம் எல்லோரும் சுவாசித்தோமானால் ரோகங்களெல்லாம் நிவர்த்தி ஆகிவிடும். எவ்வளவு கொடிய ரோகங்கள் இருந்தாலும், அத்தனையும் போய்விடும் ஹோமப் புகையினாலே...

இந்த சப்த வடிவிலே, கர்மாவின் மூலமாக, பகவான் பிரகாசிக்கிறான்

யக்ஞத்தினாலே...

வஷட்கார: என்ற சப்தம் உணர்த்துவது இதைத்தான்.

வேதத்தில் இன்னொரு இடத்தில்,

**'பூதம் பவ்யம் பவிஷ்யத் வஷட் ஸ்வாஹா...'** என்று வருகிறது.

– இது சஹஸ்ரநாமமா, வேதமா? என்று கேள்வி கேட்டுக் கொண்டோமானால் வேதம்தான்!

அதனால்தான் பெரியோர்கள் பூர்வ காலத்திலே இந்த வேதமே சஹஸ்ரநாமத்தில் பூரணமாக இருக்கிறதனாலே வேத மந்திரங்கள் அடங்கிய சஹஸ்ரநாமத்தை ஸ்த்ரீகள் உச்சரிக்கக் கூடாது என்று வைத்தார்கள். இப்போது நவீன காலத்திலே எல்லோரும் சொல்கிறார்கள்.

யாக்ஞவல்க்யருடைய தர்ம பத்னி கார்கி, மைத்ரேயி முதலானவர்களெல்லாம் வேத மந்திரங்களைச் சொன்னார்கள். சொல்லி விசேஷமாக பாராயணம் பண்ணினார்கள்.

அவர்களெல்லாம் சொன்னார்களே, நாம் சொல்லக்கூடாதா என்று கேட்டால் நாம் கார்கி ஆகிவிட முடியுமா...? நாம் மைத்ரேயி ஆகிவிட முடியுமா...? அவ்வளவு தபோதனர்களா நாம் என்று யோசனை பண்ண வேண்டும்.

**ச**ஹஸ்ராநாமத்திலே வரும் நாமங்கள் எல்லாமே மந்திரங்கள்தான். அந்த மந்திரங்கள் நம்மை ரக்ஷிக்கின்றன. சரக ஸம்ஹிதை என்று ஒரு ஸம்ஹிதை. அந்த ஸம்ஹிதையானது சஹஸ்ரநாமத்தைப் பாராயணமாக விதித்திருக்கிறது. அதைப் பாராயணம் செய்வதால் தீராத வியாதியெல்லாம் தீரும் என்கிறது.

மந்திரங்களை உச்சரிக்க வேண்டிய காலம் மாத்ரா காலம் விதித்திருக்கிறது. அது தான் அந்த மந்திரத்துக்குப் பலம். அதே மாத்திரையில்தான் மந்திரத்தைச் சொல்ல வேண்டும். கண்டவாறு சொன்னால் பலம் குறைந்து போகும்.

இப்போதும் லோகத்திலே எல்லோருக்கும் பலம் எதிலே இருக்கிறது என்று கேட்டால் மாத்திரையில்தான் இருக்கிறது. தலைவலி வரட்டுமே, வயிற்று வலி வரட்டுமே, பல்வலி வரட்டுமே... ஒரு நிமிஷம் நான்கு சுலோகம் சொன்னால் போதும்– தலைவலி போய்விடும். ஆனால் நம் மனசு அந்த சஹஸ்ர நாம சுலோகத்திலே போவதில்லை; அதை உச்சரிக்கும் மாத்ரா கால அளவை நினைப்பதில்லை. நினைப்பெல்லாம் மருந்து, மாத்திரை குறித்துதான்.

ஏரார் முயல்விட்டு காக்கை பின் போவதே – முயல் இங்கே இருக்கிறபோது யாராவது காக்கைக்குப் பின்னாலே ஓடுவார்களா...? அந்த மாதிரி உயர்ந்த சஹஸ்ர நாமம் கையிலே இருக்கிறபோது அல்ப விஷயங்களைப் போய் நாடுகிறோம்.

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

**ச**ஹஸ்ரநாமத்துக்கு பாஷ்யம் ஆதிசங்கரர் எழுதியிருக்கிறார், பராசர பட்டர் எழுதியிருக்கிறார். பராசர பட்டர் எழுதியதில் பதினாறு திருநாமங்கள்– ராமனைக் குறித்துச் சொல்லக் கூடிய திருநாமங்கள்– வருகின்றன. அந்த பதினாறு திருநாமங்களுக்கு முன் அவதாரிகையிலே அவர் எழுதுகிறார்:

இக ம்ருத சஞ்சீவனம் ராமநாமம் ப்ரஸ்தூயதே

'மேற்கொண்டு என்ன வரப்போகிறது என்றால் மரித்தவர்களைப் பிழைப்பூட்டக் கூடிய ராம நாமம் இனி ஆரம்பிக்கிறது...' என்று இதற்கு அர்த்தம்.

சஹஸ்ரநாமத்தின் இந்தப் பதினாறு மந்திரங்களே மரித்தவர்களைப் பிழைப்பூட்

டும் என்றால், மொத்த நாமாக்களையும் சொன்னால் கேட்க வேண்டுமா...?

சஹஸ்ரநாமத்திலே இருக்கிற ஒரு சின்ன பாகம்தான். மிருத சஞ்சீவினி.

மிருத சஞ்சீவினி என்றே ஒரு மந்திரம் இருக்கிறது. அது சுக்ராச்சார்யர் ஒருவருக்குத் தான் தெரியும். தேவ குருவான பிருஹஸ்பதிக்குக் கூட அது தெரியாது. பலிசக்ரவர்த்தி மாண்டுபோன பிற்பாடு இந்த மந்திரத்தைச் சொல்லி அவனைப் பிழைப்பூட்டிவிட்டார் அவர். அப்புறம் விச்வஜித் என்றொரு யக்ஞத்தை நடத்தி அவனுக்கு ரதம், வில், அம்புறாத் தூணி என்று எல்லாவற்றையும் சம்பாதித்துக் கொடுத்து, அவனைக் கொண்டு தேவதைகளையெல்லாம் ஜெயிக்கப் பண்ணினார்!

அப்படி ஆசார்ய அனுக்கிரஹத்தை பலி சக்ரவர்த்தி பெற்றான். மாண்டு போனவனையே பிழைப்பித்தார் குரு! அந்த சக்தி அவர் ஒருவருக்குத்தான்.

ஆனால் சஹஸ்ரநாமம் இருக்கிறது பாருங்கள்... இது எல்லார் வாக்கிலேயும் வருகிறது. இது ம்ருதசஞ்சீவினி என்றால் சுக்ராச்சார்யாரைக் காட்டிலும் நாமெல்லோரும் மேம்பட்டவர்களாக இப்போது விளங்குகிறோம்! ஏனென்றால் அவர் வேறு ஒரு மந்திரத்தைச் சொல்லி பகவானை ஆச்ரயித்தார். ஆனால் இது- சஹஸ்ரநாமமானது- நேரிடையாகவே பகவானைச் சொல்லி நம்முடைய அகால மரணத்தை, ம்ருத்யு பயத்தைப் போக்கடிக்கக் கூடியது.

விச்வம் என்ற பதத்தை, மந்திராக்ஷரமாக்கும்போது,

ஓம் விச்வஸ்மை நம:

ஓம் விச்வாய நம:

என்று இரண்டு பாடம் உண்டு.

சங்கர பகவத்பாதாள் 'விச்வஸ்மை நம:' என்கிறார். பராசர பட்டர், 'விச்வாய நம:' என்று சொல்கிறார்.

- ஆரம்பத்திலேயே இப்படி வித்தியாசம் ஏற்படுகிறது.

ஆனால் விச்வமாக இருக்கிறான் பகவான் என்று யார் நினைக்கிறார்களோ, உபாசிக்கிறார்களோ, அவர்கள் அனைவருக்கும் கண் பார்வை நன்றாக இருக்கும். நேத்திர இந்திரியம் நன்றாகச் செயல்படும்.

க்ஷாதுஸ்பதி என்றொரு யக்ஞம். அந்த யக்ஞம் பண்ணினால் நேத்திர இந்திரியம் குறையாமல் இருக்கும். பெரிய யக்ஞம் அது.

## அருள்வாக்கு

தற்பெருமையை என்னவென்று சொல்கிறோம்? 'தலைக்கனம்', 'மண்டைக் கனம்' என்கிறோம். குறுக்குவாட்டில் வளருகிற ப்ராணியாயிருந்து அப்படி மண்டைக் கனம் ஏறினால் பரவாயில்லை; 'பாலன்ஸ்' கெட்டுப் போகாமல் சமாளித்துக் கொண்டு விடலாம். ஆனால் உயரவாட்டில் இப்போது நாம் இருக்கிற நிலைமையில் மண்டைக் கனம் ஏறினால்... 'டாப்-ஹெவி' ஆனால் என்னவாகும்? 'ஈக்விலிப்ரியம்' என்கிற ஸமசீர் நிலையே கெட்டுப் போய், குலைந்து போய், தடாலென்று விழ வேண்டியதுதான்! பகவான் நம் உயரவாட்டில் வளரும்படி வைத்து சிரஸை உச்சியில் வைத்திருக்கிறானென்றால் ஒருபோதும் தலைக்கனம் ஏறாமல், பணிவாயிருந்து நம்மை விழுவதிலிருந்து- வீழ்ச்சியிலிருந்து -காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான். 'பதிதன்', 'பதிதை' என்று ரொம்பவும் நிஷித்தமாகச்

அதை யாரால் பண்ண முடியும்?.... சோம யக்ஞம் பண்ணியவர்கள் மட்டும்தான் அந்த யக்ஞத்தைப் பண்ண முடியும். வேறு யாராலேயும் பண்ண முடியாது.

அப்படியானால் க்ஷாதுஸ்பதி என்கிற யக்ஞத்தைப் பண்ண என்ன அருகதை என்று கேட்டால்... தலையிலே ஒரு நரைகூட இருக்கக் கூடாது! 'ஒரு கேசம்கூட நரைத்திருக்கக் கூடாது!' என்கிறது சாஸ்திரம்! கிருஷ்ண கேசி! கறுப்பாக இருக்க வேண்டும் கேசம். அப்படியானால் மிகவும் சின்ன வயதிலேயே பண்ண வேண்டும் என்று அர்த்தம்.

ஜாதபுத்ர: - இது இன்னொரு அருகதை. இந்த யக்ஞத்தைப் பண்ணுபவருக்குப் பிள்ளை பிறந்திருக்க வேண்டும்- நல்ல புத்திரன்-புத்திரன் இல்லாதவன் இதைப் பண்ணக் கூடாது.

பூரணமான அத்யயனம் பண்ணியவராக இருக்க வேண்டும்- இது மூன்றாவது நிபந்தனை.

- இந்த மூன்று தகுதிகளும் இருந்தால்தான் க்ஷாதுஸ்பதி யக்ஞத்தைப் பண்ண முடியும்.

ஆனால் 'விச்வம் விஷ்ணு' என்று ஆரம்பித்து சஹஸ்ரநாமத்தைச் சொல்வதற்கு, நரை காணாத தலையோ, மைந்தர்களோ,

சொல்கிறோமே, அதற்கு நேர் அர்த்தமே 'விழுந்து விட்டவர்' என்பது தான்.



உயரம் ஜாஸ்தி ஆக, ஆக, விழுந்தால் படுகிற அடியும் ஜாஸ்தி ஹானி உண்டாக்குவதாக இருக்கும். உசந்த ஸ்தானம் என்பதன் கதியும் அப்படித்தான். அங்கே இருக்கிறவன் தப்புப் பண்ணி இடறி விழுகிற போதுதான் அப்புறம் எழுந்திருக்கவே முடியாமல் – அதாவது, அந்த உசத்தியை மறுபடி அடையவே முடியாதபடி – ஊர் உலகமெல்லாம் சிரித்து அவனை மட்டந்தட்டி வைத்து விடுகிறது.

உலகம் சிரிப்பது, ச்லாகிப்பது இருக்கட்டும். ஆத்மார்த்தமாக ஒருத்தனுக்கு எது நல்லது? எப்படி இருந்தால் அவனுக்கு உள்ளூர ஒரு நிறைவு, நிம்மதி ஏற்படுகிறது? பாரம் தூக்கினால் நிம்மதியா, அதை இறக்கிப் போட்டால் நிம்மதியா? பாரம் என்றால் இந்த ஸம்ஸார ஸாகரத்தில் ஏற்படுகிற கஷ்டங்களின் பாரம் மட்டுமில்லை. பெரிய பாரம் அஹம் பாவந்தான்; தற்பெருமைதான். அதை இறக்கினாலே நிரந்தர நிம்மதி. அப்படி இறக்குவதற்கு ஸஹாயம் செய்யும் க்ரியைதான், ஒரு மனுஷ்ய சரீரத்தில் பூமிக்கு ரொம்ப எட்டத்திலிருக்கிற சிரஸை ஒரே இறக்காக, மற்ற அவயவங்களுக்கு ஸமஸ்தானத்தில் இறக்கி பூமியோடு பூமியாகப் போட்டு நமஸ்கரிப்பது! ''சிரஸே ப்ரதானம்'' என்ற பெருமையைத் த்யாகம் பண்ணி, அதையும் எண்சாணில் ஒன்றாகவே எளிமைப்படுத்தும் க்ரியை! பிறத்தியார் இறக்கினால் அவமானம்; நாமே இப்படித் தலையை இறக்கினாலோ பஹுமானம் (வெகுமானம்)! விநய 'ஸம்பத்து' என்றே சொல்லும் வெகுமதி! தலைக்கனம், மூளைப் பெருமை போகவே தலையால் நமஸ்கரிப்பது! ''தலையே, நீ வணங்காய்!'' என்றுதான் அப்பர் ஸ்வாமிகள் பாடியதும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

அத்யயனமோ எதுவுமே கட்டாயமில்லை.

ஆகையினாலே, நம் பணி எத்தனை சுலபமாகிறது பாருங்கள்.

வெகு சுலபமாக, நாம் அதே பலனை அடைகிறோம். அதைத்தான்– யக்ஞத்தைத் தான்– பண்ண வேண்டும் என்று உட்கார்ந்து கொண்டிருக்கக் கூடாது. பண்ண முடியவில்லையானால் கவலைப்படாதே. நீ பண்ணும்படியாக ஒன்று இருக்கிறதா இல்லையா...? அந்த எம்பெருமான் அந்த சாஸ்திரத்தை அப்படி இறக்கி நமக்குக் கொடுத்திருக்கிறான்.

'பண்ணுகிறவர்கள் யக்ஞம் பண்ணட்டும். அதற்கு அதிகாரிகள் இருக்கிறார்கள். இருக்கிறவர்கள் பண்ணட்டும். நீ ஏன் அதைப் பண்ண முடியவில்லையே என்று அவஸ்தைபடுகிறாய்...சஹஸ்ரநாமத்தைச் சொல்லு, போதும்... கட்டாயம் உனக்குப் பலன் கிடைக்கும்!'

'**வி**ச்வத சக்ஷு': –இந்த உலகத்துக்கெல்லாம் கூடித்துஸ்ஸாக பகவான் இருக்கிறான்' என்று நினைப்பவர்களுக்கெல்லாம் நாமாவைச் சொல்பவர்களுக்கெல்லாம் நல்ல கண் பார்வை ஏற்படும்.

இந்த உலகமெல்லாம் பகவானுக்கு முகமாக இருக்கிறது.

இதெல்லாம் – லோகமெல்லாம் அவனுக்கு ஹஸ்தமாக இருக்கிறது.

இதெல்லாம் அவனுக்குப் பாதமாக இருக்கிறது.

புருஷ சூக்தம் என்ன சொல்கிறது...? உலகத்திலே தோன்றியவை மொத்தமும் அவனுடைய திருப்பாதம் என்று சொல்கிறது.

இந்த உலகத்திலே நாம் பார்ப்பவை ஒரு பங்குதான். மீதி முக்கால் பாகம் அங்கே உள்ளது – அதாவது வைகுண்டம். த்ரிபாத் விபூதி என்று பெயர் அதற்கு. அதைத்தான் பெரியாழ்வார் சொல்கிறார்:

அண்டக் குலத்துக் கதிபதியாகி
அசுரர் இராக்கதரை
இண்டக் குலத்தை எடுத்துக் களைந்த
இருடீகேசன் தனக்குத்
தொண்டக் குலத்தில் உள்ளீர்! வந்தடி
தொழுது
ஆயிர நாமம் சொல்லிப்
பண்டைக் குலத்தைத் தவிர்ந்து
பல்லாண்டு பல்
லாயிரத்தாண்டு என்மினே.

மஹரிஷிகள் சொன்ன விஷயத்தை ஆழ்வார் இப்படி அழகாகக் காட்டுகிறார்.

(வளரும்)

# மிடில் கிளாஸ் மாதவன்



'கோர்ட்டு விவாதம்' என்றாலே தொடை நடுங்கும் அப்பாவி ஜூனியர் வக்கில் மாதவன். தங்கையின் திருமணத்திற்கு வாங்கிய தங்க நகைகளை வழியிலேயே திருடுக் கொடுத்து விட்டு இடிந்து போகிறார். 'அனாதைப் பெண் அபிராமியை மணந்து கொண்டால், அவளது பணத்தில் நகை வாங்கலாம்' என்று யோசனை சொல்லி, திடீர்த் திருமணம் செய்து வைக்கிறார் சீனியர் வக்கில் விசு. சாமி வரம் கொடுத்தாலும் பூசாரி குறுக்கே நிற்பது மாதிரி, நடுத்தர வர்க்கத்துக் குடும்பச் சூழலில் சிக்கிக் கொள்ளும் புதுமணத் தம்பதி, தாம்பத்திய வாழ்க்கையைத் தொடங்க முடியாமல் தவிக்கிறார்கள். காட்சிக்கொரு சினிமேட்டிக் திருப்பத்தோடு நகரும் படத்தின் க்ளைமாக்சில் வெற்றிகரமாக சாந்தி முகூர்த்தம் நடப்பதுதான் கழுதை... சாரி கதை.

இந்தக் கதைக்கு வீட்டிற்குள்ளேயே காட்சிகளை அமைத்து, நம் வயித்தெரிச்சலைக் கொட்டிக் கொள்ளாமல், முடிந்தவரை கேமராவுடன், அவுட்டோரில் அலைந்திருப்பதைப் பாராட்டியே தீர வேண்டும்.

மாதவனாக வரும் பிரபுவுக்கு வெகுளித்தனமான காமெடி நன்றாகவே வருகிறது. தேவயானி விட்டுப்போன இடத்தை, அபிராமி 'லபக்' செய்து விடுவார் போலிருக்கிறது. விரைவுப் பேருந்து நிலையத்தில் அறிவிப்பாளராக அறிமுகமாகும் அபிராமி, கூட்(டு)டக் குடும்பத்தில் வாழ நினைத்து ஏங்கும்போதும், புகுந்தவீடு வந்ததும் அவரைப் புரிந்து கொள்ளாமல் சொந்தங்கள் அலட்சியப்படுத்தும் போதும், அவரும் உருகி நம்மையும் உருகவைத்து விடுகிறார்.

அரச பரம்பரையைச் சேர்ந்த விவேக், குடும்பச் சொத்தான ராஜ உடைகளை மெகா சீரியலுக்கு வாடகைக்கு விட்டுப் பிழைப்பவர். பகலில் பக்திப் பழமாகவும், இரவில் பாட்டில் பார்ட்டியாகவும் வருகிறார் வடிவேல். இவர்கள் இருவரும் பிரபுவின் தங்கைகளை மணந்து கொண்டு மாமனார் வீட்டில் அடிக்கும் லூட்டி, கலாட்டா ஸ்பெஷல்.

இரண்டரை மணி நேரம் எதைப் பற்றியும் சிந்திக்காமல் சிரிக்க வைத்திருக்கிறார் இயக்குனர் டி.பி. கஜேந்திரன்.

— விஷ்வல்தாசன்

● ஆவெரேஜ்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2001 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka